# முமுட்சுப் படி

(முக்திநெறி தரும் திருமந்திரம், த்வயம்,
சரமஸ்லோகம் - விளக்கங்கள்)

மூலம் :
**பிள்ளைலோகாசார்யர்**

வினா - விடை விளக்கம்:
"வ்யாக்யாந பாஸ்கர"
**மாருதிதாஸன்**




**நர்மதா பதிப்பகம்**
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
16/7, ராஜாபாதர் தெரு, பாண்டி பஜார்
தியாகராய நகர் - சென்னை - 600 017



This book has been published with the financial assistance from Thirumala Thirupathi Devasthanams, Thirupathi, under the scheme 'Aid to Publish religious publications'. Total copies printed : 1200.

**N426**

**Price Rs. 60/-**

**❑ Mumutchu Padi - The Three Keys to attain Salvation - A treatise on the same - in the form of questions and answers - by Maaruthidasan © ❑ First Edition : November 1996 ❑ Published by T.S. Raamalingam, Narmadha Pathipagam, Madras - 600 017 ❑ Printed at : Udaya Offset Printers, Madras - 600 033 ❑**

# பொருளுறை





ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மங்களா சாஸனம்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

**ஸ்ரீவரத யதிராஜ ஜீயர் ஸ்வாமிகள்**

ஸ்ரீயதிராஜ ஜீயர் மடம், ஸ்ரீபெரும்புதூர்.

ஸ்ரீவைஷ்ணவத்தில் ஆத்மவ லோகன முகத்தால் ப்ரணவ ஸ்வரூபனான நாராயணனையும், அவன் சக்தியையும், கடமையையும் அறிய மூன்று சாவிகள் முறையே திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகமென உள்ளன. இச்சாவிகளை உபயோகிக்கும் திறனை ஆசார்ய முகத்தாலேதான் காணப்பெறும். நாராயணனே நமக்கே பறை தருவான் (ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மாநே சாந:) என்றபடி மேற்படி மந்த்ர ரத்னம், மந்த்ர ராஜம், சரமச் லோகார்த்தத்தை முன்னது பின்னதை விரிவுபடுத்த இரண்டும் கடையதை விளக்கும்படி உலகோர் அறியவே பிள்ளையுலகாசிரியர் முமுக்ஷுப்படி என்ற நந்தா விளக்கை மண்ணுய்ய மனிசருய்ய அளித்தார். இத்தகைய ஸுவிலக்ஷணமான க்ரந்தம் வடதென்மொழி கலந்த மணிப்ரவாள சைலியில் தற்கால சமுதாயம் அறிய முடியா நிலையைக் கோலமலர்ப் பாவையான காலம் ஏற்படுத்தியிருப்பதும் பேருண்மையே!

இஃதோர் பணி ஸாஹஸமானதொன்றாகும். இச்சீரிய தொண்டினை,

"அகில கில்லேன் இறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா!

நிகரில் புகழாய்! உலகம்மூன் றுடையாய்! என்னை ஆள்வானே!

நிகரில் அமரர் முனிக்க ணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே!

புகலொன்றில்லா அடியேன்உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!

என்ற த்வயார்த்த ஸ்வரூபியான குளிரருவி வேங்கடவன் தனது திருவடிவாரத்து 'ஸப்தகிரி' சஞ்சிகை மூலமாக "அறியாதன அறிவிக்கும் அத்தா!" என்று ஸ்ரீகாஞ்சி ஸ்ரீமாந் மாருதிதாஸனைப் பணித்திருப்பதும் அவருக்கோர் அலப்ய லாபமாகுமெனத் தட்டில்லை.

ஸ்ரீமாந் மாருதிதாஸனார் தமிழில் பெரும் புலமை பெற்றுப் பற்பல மஹான்களால் எழுத்து வடிவத்தில் போற்றப்பட்டவர். ஆயினும், வடமொழிப் புலமை இல்லாமலும் "மலர் வேண்டுமென்ற மனம் முள் என்றால் மயங்குவது எளிதா!" என்பதற்குச் சேர அஸஹாயஸூரர் போல மிகமிகப்ரயாசையுடன் முமுக்ஷுப்படி வ்யாக்யானத்தை எளிமைப்படுத்தி, இதுகாறும் அவரின் தமிழ்ப் பணிகளுக்கு மகுடமாகும் என்று தமிழில் வெளியிட்டிருப்பது நன்மையால் மிக்க நான்மறையாளர்களும் போற்றப்பட வேண்டியதே என்பதில் ஐயப்பாட்டிற்கு நிலமில்லை.

இத்தகைய அரும்பணியைத் தைர்யத்துடன் செம்மையாக ஏற்றதுமில்லாமல் செயலிலும் காட்டியிருக்கும் இப்பெரியாருக்கு "வ்யாக்யாந பாஸ்கர" என்று பிருதிட்டு அப்பனுக்குச் சங்காழி கொடுத்து ஜகதாசார்யாரான ஸ்ரீபெரும்புதூர் மாமுநிவனின் திருவடி வாரத்திலிருந்து அவரின் தொண்டுகள் எண்பகர்பூக்கள் கொண்ட தொடர் சங்கிலியாக வளர மகிழ்வுடன் மங்களசாஸனிக்கிறோமாயிற்று.

மங்களா சாஸ்னங்கள்.

திருவேங்கடவன் திருத்தாள் துணை

# பணிந்துரை

உலகில் பிறவி எடுத்த ஆன்மாக்கள் இறுதியில் பெற வேண்டியது முத்திப் பேறு ஒன்று மட்டுமே! முத்தியில் இச்சையுடையவர் அறிந்துகொள்ள வேண்டிய ரகசியங்கள் மூன்று. அவை திருமந்திரம், த்வயம், சரமஸ்லோகம் எனப்படும். இம்மூன்றையும் எழிலுற விளக்கும் நூலே முமுட்சுப்படி.

முமுட்சுப் படியை அருளிச் செய்தவர் பிள்ளைலோகாசார்யர். முமுட்சுப்படி மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளது. இந்நூலில் காணப்படும் சொற்களும், சொற்றொடர்களும் திட்பநுட்பம் செறிந்தவை; ஆயும் தோறும் அரும் பொருட்கள் அளிக்க வல்லன; ஆசார்யர் வழி மட்டுமே அறிந்துகொள்ளும் தனிச் சிறப்புடையவை.

அருமை வாய்ந்த இந்நூற் பொருளை எளிமையாகத் தரும் முயற்சியை இந்நூலில் காணலாம்.

மூலம், பிள்ளை லோகாசார்யருடையது.

ஸ்ரீமணவாள மாமுனிகள், ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள், 'செம்பொருள்' ஆசிரியை பண்டிதை திருமதி S.கிருஷ்ணவேணி அம்மையார், மங்களா சாஸனம் அளித்தும் அருளுரை வழங்கியும் உபகரித்த ஸ்ரீபெரும்புதூர் யதிராஜஜீயர் ஸ்வாமிகள், 'பல்கலைக்கடல்' அமரர் அனந்தாழ்வான் ஸ்வாமிகள் ஆகியோர் அளித்த நன்கொடைகளே இந்நூலில் காணப்படும் மூலங்களுக்குரிய விளக்கங்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவி செய்தவர்கள் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார். அழகுறப் பதிப்பித்தவர் திருமிகு T.S.இராமலிங்கம். 'சப்தகிரி' இதழில் வெளியிட்டு உதவியவர் 'சப்தகிரி' ஆசிரியர் திருமிகு N.S.இராமமூர்த்தி M.A., அவர்கள், இவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி என்றும் உரித்து,

திருவேங்கடவன் திருவருள் உலகெலாம் நிறைவதாக,

அன்புடன்
**மாருதிதாசன்.**

7, கணிகண்டீசர் கோயில் தெரு,
காஞ்சிபுரம் - 631 501,
16-10-96.

திருவேங்கடவன் திருத்தாள் துணை

# முமுட்சுப் படி

## அறிமுகம்

உலக உயிர்கள் அனைத்துக்கும் முத்தியின்பம் பெறுதலே முடிந்த வேட்கையாக இருக்கவேண்டும். மனிதர், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, தாவரம் எனப் பலவகை உயிர்களும் இந்து சமயத்தில் முக்தி பெற்றுள்ளன என்பதை நம் புராணங்களும் விளக்கமாகக் கூறுகின்றன.

முத்தி எனினும் மோட்சம் எனினும் ஒன்றே! பேரின்பம் எனப்படுவதும் அதுவே! அந்தமில் இன்பம் எதுவோ அதுவே பேரின்பம்! இறைவனைப் பற்றிய இன்பமே பேரின்பம்! மற்றைய இவ்வுலக இன்பங்கள் அனைத்தும் சிற்றின்பமே! சிற்றின்பம் முடிவில் சிக்கலையும் இன்னலையுமே தரும்!

இறைவனால் படைக்கப்பட்ட உயிர்களிடத்தும், இறைவனை வழிபடும் பக்தர்களிடத்தும் செய்யப்படும் தொண்டும் வழிபாடும்கூட முக்தி நெறியாகும்.

சமயங்கள் ஒவ்வொன்றும் மோட்சத்தைக் குறித்து ஒவ்வொரு வகையான விளக்கத்தை அளிக்கின்றன. எனினும், வைணவ சமயம் கூறும் மோட்சம் பற்றிய விளக்கத்தை மட்டுமே நாம் இனி, தெளிவாக அறிய முற்படுகிறோம்.

மோட்சத்தை அடைய விரும்புபவனுக்கு வைணவ சமயத்தில் முமுட்சு எனப் பெயர் உண்டு. மோட்சத்தை அடைய விரும்பும் அந்த முமுட்சு அறிந்துகொள்ள வேண்டிய நுண்பொருள்களை விளக்குவதே முமுட்சுப்படி என்னும் நூலாகும். இந்த நூலை இயற்றி உலகுக்கு அளித்தவர் பிள்ளை லோகாச்சாரியார்.

வைணவ சமயம் எனின், விஷ்ணுவை வழிபடு தெய்வமாகக் கொண்டு இயங்கும் சமயம் எனப்பொருள் கொள்ளலாம். முத்திக்கு ஆன்மாக்களைப் பக்குவப்படுத்து வதே சமயம் என்பதன் குறிக்கோளாகும்.

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளே விஷ்ணு எனப்படுகிறார். ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்து, அவ்வுயிர்களைக் காத்துக் கொண்டிருக்கும் பூரணமான பொருளே விஷ்ணு எனப்படுகிறார்.

வைகுந்தத்தில் விஷ்ணு வீற்றிருக்கிறார். அவரை அடைந்து ஆனந்தத்தை அனுபவிப்பவர்கள் நித்திய முத்தர்கள் எனப்படுவர். பூவுலகில் பிறந்து உழன்று கொண்டிருப்பவர்கள் மானிடர்கள். இவர்களை நோக்குகின்றபோது இறைவனுக்கு இரக்கம் தோன்று கின்றது. எனவே, அவர்களுக்குத் தநு (உடல்), கரணம் (உறுப்புகள்), புவனம் (உலகு), போகம் (துய்த்தல்), பாக்யம் (வாய்ப்பு) ஆகியவற்றை அளிக்கிறார்.

மேலும் உயர்நெறியை மேற்கொண்டு ஒழுகுவதற்கு வேதம், ஸ்மிருதி (தரும சாத்திரங்கள்) இதிகாசம், புராணம் முதலானவற்றையும் படைத்து உதவுகிறார்.

எவற்றைக் கொடுத்து உதவியும் சேதனனுக்கு ஞானம் பெற வேண்டும் என்னும் அவா இல்லையே என்று பகவான் எண்ணினார். தன் தகுதியை உணராத சேதனன் (அறிவுள்ளவன்) ஞானம் பெற்று உய்வது தான் எவ்வாறு? என்று பகவான் சிந்திக்கலானார்.

தானே ஆசார்யனாய் அமைந்து சாத்திரங்களின் கருத்தைச் சேதனர்களுக்காக வெளிப்படுத்தலானார் பகவான்!

(1) ஆன்மாவின் இயல்பு (ஆன்மநிலை) (2) ஈசுவரனின் இயல்பு (இறைநிலை) (3) ஆன்மாவைப் பற்றியும் ஈசுவரனைப் பற்றியும் அறிதலால் கிடைக்கும் பயன் (உபேயநிலை) (4) இறைவனை அடையவொட்டாமல் செய்யும் தடைகள் (5) தக்க நெறி (உபாயநிலை) ஆகிய இவ்வைந்தினையும் தெளிவாக உணர்த்துகின்ற திருமந்திரம், துவயம், சரமசுலோகம் எனப்படும் மூன்றினையும் தானே ஆசார்யனாய் அமைந்து வெளியிட்டருளினான் பரமன்!

அதாவது, பதரிகாசிரமத்தில் திருமந்திரத்தை நரனுக்கும், ஸ்ரீவிஷ்ணுலோகத்தில் துவயத்தைப் பெரியபிராட்டியாருக்கும், தன்னையே சரண் என்று பற்றி நின்ற அருச்சுனனுக்குச் சரம ஸ்லோகத்தைத் தேர்த்தட்டிலும் உபதேசித்தருளினான் பரம்பொருள்!

இதனால்தான் ஆசார்யர் வரிசையில் பகவான் முதல் ஆசார்யராகப் போற்றப்படுகிறார்.

*திருமந்திரம், துவயம், சரம சுலோகம் எனப்படும் மூன்றும் மிகவும் எளிமையானவை; எனினும், ஆழ்ந்து நோக்குவார்க்கு நுட்பமான பொருள்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளவை. எனவே, ஆசார்யர் அருளின்றேல் இவற்றின் பொருள் நுட்பத்தை உணர்தல் இயலாது.*

*தத்துவ நூல் இருவகைப்படும். அவை சாஸ்திரம், சாஸ்திர தாத்பர்யம் எனப்படும்.*

*வேதவேதாந்தங்கள் சாஸ்திரம் எனப்படும்.*

*திருமந்திரம், துவயம், சரமசுலோகம் எனப்படும் ரஹஸ்யங்கள் சாஸ்திர தாத்பர்யம் எனப்படும்.*

*சரீரத்தோடு கூடிய ஆத்மாவைப் பற்றியது சாஸ்திரம் என்றும், தனி ஆத்மாவை மட்டும் பொருளாய்க் கொண்டுள்ளது சாஸ்திரதாத்பர்யம் என்றும் சொல்லுவர்.*

*பகவானே வியாசராய் நின்று வேத வேதாந்தங்களை (சாத்திரங்களை) வெளியிட்டருளினான்.*

*பதரிகாசிரமத்தில் தானாகவே நின்று சாஸ்திர தாத்பர்யத்தை வெளியிட்டருளினான் பரமன்!*

*பின்னர், இம்மூன்றினுடைய உட்பொருட்களைப் பண்டைக் காலந்தொட்டு ஆசார்யர்கள் ஓராண்வழியாக (ஒருவருக்கொருவராக) உபதேசித்து வரலாயினர். முன்னோர்கள் இவற்றை மறைத்துப் பாதுகாத்துத் தகுந்த அதிகாரிகளுக்கு மட்டுமே உபதேசித்து வந்தனர். எனவேதான், இவைகள் மறைகள் என்னும் பெயரைப் பெற்றன.*

*எம்பெருமானாராம் இராமாநுசரின் காலம் வரை இவற்றை ரஹஸ்யமாகவே உபதேசித்து வந்தனர். ஆனால்,*

எம்பெருமானாரோ இவற்றின் சிறப்புக்களைச் சாதாரண மக்களும் அறிய வேண்டும் என்னும் அருள் உள்ளத்தினால் அனைவர்க்கும் உபதேசித்தருளினார்.

'விருப்பமுடையவர்க்கெல்லாம் இந்த இரகசியங்களை உபதேசிக்க வேண்டும்' என்று, பழங்கால முறையினைச் சற்று மாற்றி அமைத்தார் உடையவர்!

இராமாநுசருக்குப் பின்பு வந்த ஆசாரியர்களுள் மிகச்சிறந்தவராகப் போற்றப்படுபவர் பராசரபட்டர் என்பவர். இவர் கூரத்தாழ்வானின் திருக்குமாரர்; நுட்பமான அறிவுடையவர்; எவற்றையும் எளிதில் மனப்பாடம் செய்துவிடும் ஆற்றல் மிக்கவர்.

பராசர பட்டர் பலருக்கும் இந்த இரகசியங்களை உபதேசித்தார். அத்துடன் நில்லாது தமக்குப் பின்புள்ளாரும் இவற்றை எளிதாக அறிந்து ஆன்ம வாழ்வு பெற்று உயரவேண்டும் எனக் கருதினார். எனவே, எட்டு சுலோகங்கள் அடங்கிய 'அஷ்ட ச்லோகி' என்னும் வடமொழிக் கிரந்தத்தை அருளிச் செய்தார். இந்நூல் வைணவ உலகத்தில் சிறப்பாகப் போற்றப்பட்டு வருகிறது.

பட்டருக்கு முற்காலத்திலும் சமகாலத்திலும் பிற்காலத்திலும் வாழ்ந்த ஆசாரியர்கள் ரஹஸ்யக் கிரந்தங்கள் சிலவற்றை அருளிச் செய்திருக்கக்கூடும்.

எனினும், பெரியவாச்சான் பிள்ளைக்கும், பிள்ளை லோகாச்சாரியருக்கும் முற்பட்ட ஆசாரியர்கள் இயற்றிய ரஹஸ்ய வியாக்யான கிரந்தங்கள் முற்றிலும் நமக்குக் கிடைக்கவில்லை.

ஆச்சான்பிள்ளையும் 'பரந்த ரஹஸ்யம்' என்னும் நூலை இயற்றி அருளியுள்ளார். எனினும் இதுவும் எளிய முறையில் கற்றுத் தேரும் வண்ணம் இருக்கவில்லை.

எனவே திருமந்திரம், துவயம், சரம சுலோகம் எனப்படும் மூன்றினுடைய மறை பொருள்களை யாவரும் எளிதாகவும் தெளிவாகவும் உணரும் வண்ணம் பிள்ளை லோகாச்சாரியார் அருள் உள்ளத்தோடு உபகரித்து அருளினார்கள். இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரர்; வரதராசப் பெருமாளின் அம்சம் என்று போற்றப்பட்டவர்; மகா கல்விமான்.

இவரே பதினெட்டு ரஹஸ்ய கிரந்தங்களை இயற்றியருளினார். இவற்றை அஷ்டாதச ரஹஸ்யங்கள் என்பர். இவற்றுள் ஒன்றுதான் முமுட்சுப்படி என்னும் கிரந்தம்.

முமுட்சுப்படியை இயற்றுவதற்கு முன்பே யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ஸ்ரீயப்பதிப்படி எனப்பெயர் கொண்ட மூன்று நூல்களைப் பிள்ளை லோகாசாரியர் இயற்றியருளியிருந்தார்கள்.

யாத்ருச்சிகப்படி என்னும் நூலோ மிகவும் சுருக்கமாயிருந்தது.

பரந்தபடியோ அதிக விரிவாக இருந்தது.

ஸ்ரீயப்பதிப்படியோ சுருக்கமும் விரிவுமின்றிக் காணப்படினும் வடமொழி வாக்கியங்கள் நிரம்பப் பெற்றிருந்தது.

எனவே, இம்மூன்று குறைகளும், இல்லாத வகையில் யாவருக்கும் எளிதாகப் பொருள் விளங்கும் வண்ணம் முமுட்சுப்படி என்னும் இந்நூலை ஆக்கியருளினார் பிள்ளை லோகாச்சாரியார்.

மேலும் மேற்சொன்ன மூன்று நூல்களிலும் சொல்லப்படாத பல நுட்பமான பொருள்களையும்

முமுட்சுப்படியில் வெளிப்படுத்தியுள்ளார். இதனால் தான் முமுட்சுப்படி மற்றெல்லாக் கிரந்தங்களைக் காட்டிலும் உயர்ந்து நிற்கிறது.

முமுட்சுப்படியில் காணப்படும் சூத்திரங்கள் பிரும்ம சூத்திரங்கள் போன்று நுட்பமான பொருள் சிறப்பினையும், செறிவினையும் உடையவை. எனவே விளக்கவுரையின்றி முமுட்சுப்படியைக் கற்பது எளிதானதன்று.

எனவே, இதனை யாவரும் அறிந்து உய்தல் வேண்டும் என்னும் அருள் உள்ளத்தோடு மணவாள மாமுனிகள் மிகச் சிறந்த முறையில் விளக்க உரையினை முமுட்சுப்படிக்கு அளித்து உதவினார்கள்.

மணவாள மாமுனிகள் இராமாநுஜரின் அவதாரம் என்றே மதிக்கத் தக்கவர்; சகல சாத்திரங்களிலும் புலமைமிக்கவர்; வாக்குவன்மை படைத்தவர்.

மணவாளமாமுனிகள் விளக்க உரையும் கற்றோர்க்கு மட்டுமே புலனாகும் வண்ணம் அமைந்திருந்தது. இதனை மேலும் எளிமைப்படுத்தி வைணவ அதிகாரியாக விளங்கிய மகாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் கட்டுரைகள் வடிவிலும் நூல்வடிவிலும் உதவினார்கள்.

திருமதி பண்டிதை எஸ்.கிருஷ்ணவேணி அம்மையார் அவர்களும் 'செம்பொருள்' என்னும் தலைப்பில் நூல் ஒன்று ஆக்கி உபகரித்தார்கள்.

புலமை நலம் மிக்க புத்தூர் ஸ்வாமிகளும் விளக்கவுரை அருளினார்கள்.

இவை அனைத்தையும் மேலும் எளிமைப்படுத்தும் பணியில் ஸ்ரீபெரும்புதூர் ஜீயர் ஸ்வாமிகளும், காஞ்சிபுரம்

பல்கலைக்கடல் ஸ்ரீ அனந்தாழ்வான் ஸ்வாமிகளும் வழிகாட்டி நின்று ஊக்கம் அளித்து வந்தனர்.

இந்த முறையில் எழுந்துள்ள இந்நூலில் பிள்ளை லோகாச்சாரியாரின்மூலம் குறிக்கப்பட்டு இம்மூலத்தை விளக்க வினா விடைகள் அமைந்துள்ளன. எனவே, சாமானியரும் முமுட்சுப்படியைக் கற்று உணரும் வகையில் இயற்றப்படுகின்ற இந்நூல் திருவேங்கடவன் திருவருளைப் பெற உதவும் என்ற நம்பிக்கையோடு உங்கள் கைகளில் தவழ விடுகிறோம்.



ஸ்ரீ:

முமுட்சுப்படி

# திருமந்திரம்

## அகாரப்பொருள்

### மூலம் : 1

முமுக்ஷுவுக்கு அறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று.

*1) முமுட்சு என்றால் என்ன பொருள்?*

*முமுட்சு என்றால் மோட்சத்தை அடைய விரும்புகின்றவன் என்பது பொருள்.*

*அழிந்து போகக் கூடியதும், அல்லல் நிறைந்ததுமான இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பும், அழியாததும் இன்பம் நிறைந்ததுமான பரமபத வாஸத்தில் விருப்பும் உள்ளவரே முமுட்சு எனப்படுவர்.*

*2) மோட்சம் என்றால் என்ன?*

*துன்பம் கலவாது, முடிவும் அழிவுமில்லாத இன்பம் எதுவோ அதுவே மோட்சம் எனப்படும்.*

*மோட்சம் எனினும், முத்தி எனினும், வீடு பேறு எனினும் ஒன்றே!*

*'முக்திர் மோக்ஷோ மஹாநந்த:" என்பது நிகண்டு. முக்தி இருவகை அனுபவங்களால் உண்டாகின்றது. ஒன்று, ஆன்ம அனுபவத்தால் உண்டாகும் இன்பம், மற்றொன்று ஈசுவர அநுபவத்தால் உண்டாகும் இன்பம்.*

ஆன்ம அநுபவத்தில் விருப்பமுள்ளவனுக்குக் கைவல்யார்த்தி என்பது பெயர்.

ஈசுவர அநுபவத்தில் இச்சையுள்ளவனுக்குப் பகவத் பிராப்தி காமன் என்பது பெயர்.

இவ்விரு திறத்தினரும் முமுட்சுகள் எனப்படுவர்.

**3) கைவல்யார்த்தி, பகவத் பிராப்தி காமன் ஆகிய இருதிறத்தாரும் அறிந்து கொள்ள வேண்டுவன யாவை?**

திருமந்திரம், துவயம், சரம சுலோகம் எனப்படும் மூன்றினுடைய பொருளையும் அறிந்து கொள்ள வேண்டிய அவசியம் கைவல்யார்த்திக்கு இல்லை.

எனவே, ஈசுவர அனுபவத்தில் இச்சையுள்ள பகவத் பிராப்தி காமன் இம்மூன்றின் பொருளையும் அறிய வேண்டியவன் ஆகிறான்

பகவானைக் கிட்டப்பெற்று, அவனை அனுபவித்துக் கைங்கர்யங்களைச் செய்து, அவனுடைய முக உல்லாசத்தைப் பெறவேண்டும் என்னும் இச்சையால் உலக விவகாரங்களில் வெறுப்புக் கொண்டவனாகிய முமுட்சுவே இந்நூலில் சொல்லப்படுவான்.

சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆன்மா, தனக்கும் பிறருக்கும் உரிமையுடைதாய் இல்லாமல், ஈசுவரனுக்கே அடிமைப்பட்டதாய் இருத்தல் ஆன்ம சொரூபம் என்பதையும், அவ்வான்மா நலமடைவதற்கு உபாயம் சரணாகதி என்பதையும், அவ்வுபாயத்தைப் பற்றுவதால் உண்டாகும் பயன் அநுபவமும் கைங்கர்யமும் என்பதையும் முமுட்சுவானவன் அறிந்து கொள்ளல் வேண்டும்.

இவை அனைத்தையும் தெரிவிப்பனவே இந்த மூன்று இரகசியங்கள்.

*4) திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய மூன்றினையும் இரகசியங்கள் என்பானேன்?*

*இவை மூன்றும் சகல வேதங்களின் சாரமானதாலும், வீடு பெற விருப்பம் இல்லாதார் காதில் விழாதவாறு, இவற்றின் பொருளை மறைக்க வேண்டி இருத்தலாலும் இவை 'இரகசியங்கள்' எனப்படுகின்றன.*

## மூலம் : 2

**அதில் ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம்.**

*1) முமுட்சுவானவன் முதலில் அறிய வேண்டிய ரஹஸ்யம் யாது?*

*முமுட்சுவானவன் முதலில் அறிய வேண்டிய ரஹஸ்யம் திருமந்திரம்.*

*2) திருமந்திரம் உணர்த்தும் உண்மை யாது?*

*ஆன்மாவின் உண்மைச் சொரூபம் இன்னது என்பதையும், அந்நிலைக்கேற்பச் சேதனன் விட வேண்டுவன இவை என்பதையும் திருமந்திரம் உணர்த்துகிறது.*

*3) முதலில் அறியத்தகுந்தது திருமந்திரமே எனக் கூறுவானேன்?*

*திருமந்திரத்தை நன்கு அறிந்தவருக்கே துவயம், சரம சுலோகம் ஆகிய மற்ற இரண்டு மந்திரங்களிலும் சொல்லப்படும் உபாயத்திலும், பலத்திலும் விருப்பம் ஏற்படும்.*

*ஆதலின், திருமந்திரத்தை விரித்துரைக்கும் வகையில் துவயமும், துவயத்தை விரித்துரைக்கும் வகையில் சரம சுலோகமும் அமைந்துள்ள முறைப்படியும் திருமந்திரமே முதலில் அறியத்தக்கதாகும்.*

4) திருமந்திரத்தின் முதன்மையை மேலும் விளக்குக.

'ஓம்' 'நமோ' 'நாராயணாய' என்னும் மூன்று பதங்கள் திருமந்திரத்தில் அடங்கியுள்ளன.

இவற்றுள் 'ஓம்' என்னும் பதத்தின் பொருளையே 'நம' 'நாராயணாய' என்னும் இருபதங்களும் நன்கு விரிவுபடுத்துகின்றன.

இவ்விரு பதங்களின் பொருளையே துவயம் விரிக்கிறது. இத்துவ்யத்தின் பொருளையே சரம சுலோகம் விரிக்கிறது.

இவ்வாறு இவை ஒன்றற்கொன்று விளக்கமாய் இருத்தலின் திருமந்திரம் மற்றெல்லாவற்றிலும் முதன்மை பெற்று விளங்குகிறது.

5) மந்திரம் எனும் பெயர் வந்ததேன்?

[illegible]ரம் தன்னை ஜபிப்பவருக்கு இரட்சகமாயிருத்தலின் 'மந்திரம்' எனும் பெயர் பெற்றது.

6) உபாஸகர்க்கு இத்திருமந்திரம் எவ்வாறு இரட்சகமாகிறது?

சிலர் இம்மந்திரத்தைக் கொண்டு ஜபம் ஓமம் முதலியவைகளைச் செய்து ஈசுவர பத்தியின் உற்பத்தியைத் தடை செய்யும் பாவங்களிலிருந்து விலகித் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளக் கருதுகின்றனர். அவர்கட்கு உபாஸகர் என்பது பெயர். அவ்வுபாஸகர்க்கு இத்திருமந்திரம் தன் சப்த சக்தியினால் (ஒலி ஆற்றலால்) இரட்சகமாகிறது.

7) ஜபம் என்றால் என்ன?

அருகில் இருப்பவர் செவியில்கூட விழாதபடித் தனக்கு மட்டுமே கேட்குமாறும், ஒரு முகப்பட்ட மனத்தோடும் மந்திரங்களை உச்சரித்தல் ஜபம் எனப்படும்.

*8) ஓமம் என்றால் என்ன?*

*மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே, பரமாத்துமாவைக் குறித்துப் பால், நெய், பொறி முதலியவற்றுள் ஏதாவதொன்றை அக்கினியில் சேர்ப்பது ஓமம் எனப்படும்.*

*9) உபாஸகர் எனப்படுவோர் யார்?*

*உபநிஷத்துக்களில் மோட்சத்துக்குச் சாதனமாய்ச் சொல்லப்பட்ட தகர வித்தை முதலியவற்றுள் ஏதாவதொன்றை மேற்கொள்பவர்க்கு உபாஸகர் என்பது பெயர்.*

*10) தகர வித்தை என்றால் என்ன?*

*இது ஒரு வகை பிரம்ம வித்தை. இறைவனை இருதய ஆகாசத்தில் வைத்துத் தியானம் செய்தல் தகர வித்தை எனப்படும்.*

*11) பிரபன்னர் என அழைக்கப் படுபவர் யாவர்?*

*அனுபவ கைங்கர்யங்களாகிற உபேயத்தை (பலத்தை) அடைவதற்கு ஜபம், ஓமம், ஞானயோகம், பக்தியோகம் முதலியன உபாயங்களாகா என்று தெளிந்து அவனையே உபாயமாகப் பற்றுமவர்களையே பிரபன்னர்கள் என்போம். ஈசுவரனே உபாய உபேயம் என்னும் பிரபன்னர் சிறந்த ஞானிகள் ஆவர்.*

*12) உபாஸகர், பிரபன்னர் ஆகியோர்க்குத் திருமந்திரம் எவ்வாறு இரட்சகமாகிறது?*

*திருமந்திரம் உபாஸகர்க்குத் தன் சப்த சக்தியினால் இரட்சகமாகிறது. பிரபன்னருக்கு அர்த்த ஞானத்தை ஊட்டும் முகத்தான் இரட்சகமாகிறது.*

மேலும், உபகாரத்தையும், பிரபன்னருக்குத் திருஷ்ட வித்யா உபகாரத்தையும் புரிகிறது.

*13) அதிருஷ்ட விதயா உபகாரம் என்றால் என்ன?*

திருமந்திரத்தைக் கொண்டு ஜபம் ஓமம் முதலியவற்றைச் செய்யுங்கால் இது பகவானுடைய அருள் மூலமாய்ப் பக்தி உற்பத்திக்குத் தடையாய் உள்ள பாவங்களைப் போக்கி உபாஸகர்க்குத் தூய்மையை உண்டு பண்ணுகிறது.

இதுவே அதிருஷ்ட விதயா உபகாரகம் எனப்படும்.

## மூலம் : 3

**"திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்."**

*1) திருமந்திரத்தை எவ்வாறு அநுஸந்திக்க வேண்டும்?*

திருமந்திரத்தை உச்சரிக்குங்கால் மிகவும் கவனத்தோடு ஒருநிலைப்பட்ட மனத்துடனும், ஒன்றிய மனத்துடனும் உச்சரிக்க வேண்டும்.

எல்லா வேதங்களின் சுருக்கமாகவும், அறிய வேண்டுவனவாகிய எல்லா அர்த்தங்களையும் (அர்த்த பஞ்சகத்தையும்) தெரிவிப்பதாயும் எல்லா மந்திரங்களிலும் மேலானதாகவும், தூய்மையானவற்றுள் மிக்க தூய்மையுடையதாகவும் உள்ளது திருமந்திரம்.

ஆதலின் ஒருவன் இதன் சிறப்புக்கேற்ப மனமாசற்றவனாய், மனத்தை வேறெவ்விடத்திலும் செலுத்தாமல், இம்மந்திரத்தினிடத்திலேயே முழு மனத்தையும் இருத்தி, மோட்சமடைவதில் ஆசையில்லாதவர் செவியில் விழாதபடி இதை மிக்க அன்புடன் பாராட்டி அநுஸந்திக்க வேண்டும்.

2) அர்த்த பஞ்சக ஞானம் என்றால் என்ன?

ஆன்மாவின் இயல்பு 2) ஈசுவரனது இயல்பு 3) ஆன்மா அடையும் பயன் 4) அப்பயனை அடைவதற்கு உபாயம் 5) அப்பயனை அடைதற்குப் பகையாய் உள்ளவை.

இவை முறையே ஆன்ம சொரூபம், ஈசுவர சொரூபம், பல சொரூபம், உபாய சொரூபம், விரோதி சொரூபம் எனப்படும். இவற்றைக் குறித்து விளக்கமாகத் தெரிந்து கொள்வதே அர்த்த பஞ்சக ஞானம் எனப்படும்.

## மூலம் : 4

**"மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆச்சார்யன் பக்கலிலும் ப்ரேமம் கநக்க உண்டானால் கார்யகரமாவது"**

1) திருமந்திரம் நலமளிக்கச் செய்ய வேண்டுவன யாவை?

திருமந்திரம் அறிய வேண்டுவனவற்றை அறிவிப்பது. (1) சேஷித்துவம் (2) சரண்யத்துவம் (3) பிராப்பியத்துவம் ஆகிய மூன்றையும் தனக்குத் தர்மமாய்ப் பெற்றுள்ளவன் ஈசுவரன். இந்த ஈசுவரனாகிய பொருளிலும் இம்மந்திரம் ஆசார்யருக்கு வசப்பட்டிருக்கிறது. எனவே, இதைச் (4) சாத்திர முறைப்படித் தனக்கு அன்புடன் உபதேசித்த ஆசார்யரிடத்திலும் அவரவர் பெருமைக்கேற்ப ஒருவன் மிக்க பக்தி செய்ய வேண்டும். அப்போதுதான் இம்மந்திரம் ஒருவனுக்கு நலமளிக்கும்.

2) சேஷித்துவம் என்பதனை விளக்குக.

சேஷித்துவம் என்றால் அடியவன் செய்யும் தொண்டினை ஏற்று உகக்கும் தன்மை என்றபடி சேதனன்

ஈசுவரனுக்குச் சேஷபூதன் (அடியவன்) என்னும் பொருள் பிரணவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஈசுவரன் சேதனனுக்குச் சேஷி என்னும் பொருள் சொல்லப்படவில்லை. எனினும் சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் என்னில் ஈசுவரன் சேதனனுக்குச் சேஷி என்னும் பொருள் "துல்யவித்தி வேத்யதயா" தோன்றும். ஆதலின் பிரணவத்தில் ஈசுவரனுக்குச் சேஷித்துவம் (தலைமைத்தன்மை) உண்டு என்பது பெறப்படும்.

3) "துல்ய வித்தி வேத்ய தயா" - விளக்குக.

ஒரு வாக்கியத்தினால் உண்டாகும் அறிவிற்கு இலக்காகும் தன்மையே துல்ய வித்திவேத்ய தயா என்பது.

ஒரு மன்னனுக்கு ஒருவன் வேலைக்காரன் என்னில், அவ்வேலைக்காரனுக்கு அம்மன்னன் தலைவன் என்பது அதிலிருந்தே தோன்றுகின்றோ!

அப்படித் தோன்றுவதைத் தான் "துல்ய வித்தி வேத்யதயா" என்று சொல்வர்.

4) சரண்யத்துவம் - விளக்குக.

அடைக்கலம் என்று சென்று அடையத்தக்கவனாக இருக்கையே சரண்யத்துவம் ஆகும்.

திருமந்திரத்தின் மத்தியில் உள்ள பதம் 'நம' என்பது. 'நம' என்னும் பதத்தால் "எனக்கு நான் உரியவன் அல்லன்" என்னும் பொருள் வெளிப்படும்.

இதனால் அவனுக்கே நான் உரியவன் என்னும் பொருள் கிடைக்கும். இவனுக்கு ஈசுவரனே காப்பவனாக இருக்கிறான் என்பது பெறப்படும்.

5) பிராப்பியத்துவம் - விளக்குக.

நாம் அனுபவிப்பதற்காகவும், தொண்டு புரிவதற்காகவும் நம்மால் அடையப்படும் பொருளாகும் தன்மை என்பது பிராப்பியத்துவம் என்பதன் பொருளாகும்.

பிரணவத்தின் இறுதியில் உள்ள சொற்றொடர் 'நாராயண' என்பது. நாரம் + அயனம் என்னும் சொற்கள் சேர்ந்தால் 'நாராயண' என்னும் தொடர் தோன்றும்.

நாராணாம் + அயனம் + ய + ஸ: என்னும் புணர்ச்சி இலக்கணத்தின்படி 'நாராயண' என்று ஆகிறது. இச்சொல் அன்மொழித்தொகையை உள்ளடக்கியதாகும்.

'நார' என்னும் சொல்லுக்கு அசித்தும் சித்தும் பொருளாகும். எனினும், இங்கு அசித்தை விலக்கி, சித்துப் பொருளாகிய சீவான்மாக்களின் திறனையே பொருளாகக் கொள்ள வேண்டும்.

'அயனம்' என்னும் சொல் 'இன்' என்னும் தாதுவிலிருந்தேனும் 'அய' என்னும் தாதுவிலிருந்தேனும் உண்டாகும்போது கர்மணிவ்யுற்பத்தியில் ஈசுவரன் பிராப்பியப் பொருள் (அடையப்படும் பொருள்) என்பது விளங்குகிறது.

எனவே பகவானுக்குப் பிராப்பியத்துவம் உண்டு என்பது பெறப்படுகிறது.

பிராப்யம், உபேயம், சாத்யம் என்பன ஒரே பொருளைக் குறிப்பனவாம்.

6) 'சாத்திரமுறைப்படி உபதேசித்தல்' என்றால் என்ன?

ஆச்சார்யர் தம் சீடருக்கு உபதேசிக்குங்கால், தம் சீடனுக்குத் தாமே ஆசார்யர் என்னும் எண்ணம் கூடாது.



தம் ஆசார்யரே இவனுக்கும் ஆசார்யர் என்றும், தம் ஆசார்யருக்குத் தம்மைப் போன்றே இவனும் சீடன் என்றும் எண்ணுதல் வேண்டும்.

சீடனுடைய தொண்டினையோ, பொருளையோ விரும்புதல் கூடாது.

இச்சீடன் ஈசுவரனுடைய அருட்பார்வைக்குத் தக்கவனாதல் வேண்டும் எனக்கருதல் வேண்டும்.

"இவனைத் திருத்தி நன்னெறியில் நடக்கச் செய்துவிட்டால், பகவானுடைய அருள்நோக்கைப் பெறுதற்குரிய கைங்கர்யம் செய்தவராகி விடுவோம்" என்றோ,

"இவ்வுலகில் வாழும்பொழுது இச் சீடனுடன் சேர்ந்திருத்தலாகிய கூட்டுறவு நமக்குக் கிடைக்கும்" என்றோ எண்ணுதல் கூடாது.

இத்தகைய உயர்ந்த குறிக்கோள்களுடன் சீடனுக்கு உபதேசம் செய்தலே சாத்திரமுறைப்படி உபதேசித்தல் எனப்படும்.

## மூலம் : 5

**"ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும்படி தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட் டருளினான்."**

(இத்திருமந்திரத்தை வெளியிட்டதன் காரணத்தையும், இத்திருமந்திரத்தின் ஒப்பற்ற மகிமையையும் விளக்குகிறார்.)

*1) சம்சாரிகள் அடையும் துன்பங்கள் யாவை?*

*-ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூவகைத் துன்பங்கள் சம்சாரிகள் அடையும் துன்பங்களாம்.*

*2) ஆத்யாத்மிகம் - விளக்குக.*

*தன் சரீரத்தையும் மனத்தையும் பற்றி வரும் துன்பங்கள் ஆத்யாத்மிகம் எனப்படும்.*

*இது சரீர ஆத்யாத்மிகம், மன ஆத்யாத்மிகம் என இரு வகைப்படும். உடலைப்பற்றி வரும் தலைவலி, காய்ச்சல், குஷ்டம், இருமல் முதலியன சரீர ஆத்யாத்மிகம் எனப்படும்.*

*காமம், குரோதம், பொறாமை முதலியன மன ஆத்யாத்மிகம் எனப்படும்.*

*3) ஆதி பௌதிகம் - விளக்குக.*

*பிசாசம், துஷ்ட ஜந்துகள், மனிதர், இராக்கதர் முதலிய பிராணிகளால் ஏற்படும் துன்பங்கள் ஆதிபௌதிகம் எனப்படும்.*

*4) ஆதி தைவிகம் - விளக்குக.*

*காற்று, மழை, வெயில், இடி முதலியவற்றால் தெய்வ சங்கற்பமாய் உண்டாகும் துன்பங்கள் ஆதி தைவிகம் எனப்படும்.*

*தன்னால் வருவன, பிறவற்றால் வருவன, இறைவன் திருவுளப்படி நிகழ்வன என இத்துன்பங்கள் மூவகையிலும் வந்து சம்சாரிக்கு வருத்தத்தை உண்டாக்கும்.*

5) சம்சாரிகள் இவ்வாறு துன்பப்படக் காரணம் என்ன?

சம்சாரிகள் பகவானுக்கு அடிமைப்படிருத்தலே (சேஷப்பட்டிருத்தலே) தங்கள் இலட்சணம் என்பதை மறந்தார்கள். தங்களுக்கு நிருபாதிகசேஷி (ஒருகாரணமு மின்றியே ஆட்கொள்பவன் இறைவன்) யாயுள்ள பகவானுடைய தன்மையையும் மறந்தார்கள்.

இங்ஙனம் மறந்ததனால், ஈசுவரனுக்குத் தாங்கள் புரிய வேண்டிய கைங்கர்யமாகிற சிறந்த பலத்தையும் (புருஷார்த்தத்தையும்) இழந்தார்கள்.

இம் முறையில் "ஈசுவரத் தொண்டிற்கெனவே தோன்றிய நாம் எம்பெருமான் கைங்கர்யத்தை இழந்து விட்டோமே!" என்னும் கிலேசம் சிறிதுமின்றியே சம்சாரம் என்னும் பெருங்கடலில் வீழ்ந்து துன்பப்படலானார்கள்.

முற்கூறிய அர்த்த பஞ்சக ஞானம் இன்மையே இத்துன்பங்கட்குக் காரணமாம்.

6) திருமந்திரத்தைப் பகவான் வெளியிட்டருளக் காரணம் என்ன?

அறிவுடைய சேதனர் தம்முடைய கன்மங்களிலேயே உழன்று தம் காலத்தைப் பயனற்ற வழியில் கழித்து வருதலை அருள் உள்ளம் கொண்ட ஆண்டவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எனவே, ஈசவரன் காப்பாற்றுபவன் - நாம் அவனால் காப்பாற்றப்படுபவர் என்னும் சம்பந்தத்தை (ஈச ஈசி தவ்ய சம்பந்தம்) இச்சேதனர்கள் அறிந்து கொள்ளவும்,

தானாகிற மரக்கலத்தைக் கொண்டு தங்கள் பிறவியாகிற கடலைக் கடந்து முத்தியாகிற (பேரின்பம்) அக்கரையை அடைவதற்கேற்ற அறிவைப் பெறுதற் பொருட்டும்,

தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று அநாதியானதும், அர்த்த பஞ்சகத்தைச் சுருக்கமாய்த் தெரிவிப்பதுமான திருமந்திரத்தை வெளியிட்டருளினான்.

7) சம்சாரிகள் - விளக்கம் தருக.

அநாதி காலமாய் ஏற்பட்டிருக்கும் சரீரத்தொடர்பினால் அவித்யா, கர்மம், வாசனை, ருசி ஆகிய இவற்றிற்கு வசப்பட்டுப் பிறப்பு, இறப்பு முதலிய துன்பங்களில் உழல்கின்றவர்கள் சம்சாரிகள் எனப்படுவர்.

8) அவித்யா - விளக்குக.

அஞ்ஞானம் அல்லது அறிவின்மை என்பது அவித்யா என்பதன் பொருளாகும். தேகமே ஆன்மா என எண்ணும் நினைவும், தான் ஈசுவரனுக்கு அடிமைப்பட்டவன் அல்லன் என்றும் தனக்காகவே. இருப்பவன் (சுதந்தரன்) என்றும் எண்ணுகிற அபிமானமுமே அவித்யா எனப்படும்.

9) கர்மம் - விளக்குக.

முற்கூறிய அஞ்ஞானத்தால் விளைகின்ற புண்ணிய பாவங்களே கர்மம் அதாவது வினை எனப்படும்.

10) வாசனை விளக்குக

இது அவித்யா வாசனை, கர்ம வாசனை என இருவகைப்படும். பாம்பு முதலியவற்றைக் காணுங்கால் அஞ்சுதல், ஓடுதல் முதலான செயல்களுக்குக் காரணமாக இருப்பது அஞ்ஞான வாசனை எனப்படும். ஞானிகள் இவற்றைக் கண்டு அஞ்சமாட்டார்கள். இயல்பாகவே இருப்பர்.

துரும்பு, இலை முதலியவற்றைக் கிள்ளுவது கர்ம வாசனை எனப்படும்.

*பாவ புண்ணியங்களாகிய கர்மங்கள் அஞ்ஞானத்தாலேயே ஏற்படுகின்றன.*

***11) ருசி - விளக்குக.***

*பாவச் செயல்களையோ புண்ணியச் செயல்களையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாயுள்ள ஆசையே ருசி எனப்படும்.*

***12) சம்சாரிகள் என்னும் சொல் கிரகஸ்தர் (இல்லறத்தார்) என்னும் பொருளை மட்டும் குறிக்குமா?***

*குறிக்காது. உலக இயல்பிற்குட்பட்டு அஞ்ஞானத்தால் உலக விவகாரங்களில் உழல்வார்களேயானால், இல்லறத்தார், துறவறத்தார், மணமாகாத பிரமசாரிகள் முதலான அனைவரையுமே சம்சாரிகள் என்னும் சொல் குறிக்கும்.*

*எனவே, உலக விவகாரங்களில் சிந்தனைப்படாமல் இருப்பவர்கள் ஞானிகள். இல்லறத்தாரிலும் ஞானிகள் உளர்.*

*உலக விவகாரங்களில் அப்படியே ஒட்டிக்கொண்டு விடுபட முடியாமல் உழல்பவர்கள் அனைவருமே சம்சாரிகள் எனப்படுவர்.*

***13) மூலம் ஐந்தில் உள்ள சூத்திரத்தில் 'அறியாமல்' என்னாது 'மறந்து' எனக் கூறியிருப்பதேன்?***

*ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் உள்ள அடியவன் - தலைவன் என்னும் தொடர்பு (சேஷ - சேஷிபாவமென்னும் உறவு) வந்தேறியன்றிக்கே இயற்கையாகவே அமைந்துள்ளதாக சாஸ்த்ரம் கூறியிருப்பதனால், அது கொண்டு இத்தொடர்பிலுள்ள இயல்பான தன்மை*

ஒருவனுடைய மனத்திலே உறைக்க, உறைக்க இத்தொடர்பு முன்பு முன்பு அறியப்படாதே இப்போதே புதிதாக அறியப்பட்டிருந்த போதிலும், முன்பே அறியப்பட்டு நடுவில் மறக்கப்பட்டது போல் அவனுக்குத் தோற்றுமாகையால், 'அறியாமல்' என்னாது 'மறந்து' என்றார் - என்பது மளவாள மாமுனிகள் தரும் விளக்கமாம்.

*14) இச்சூத்ரத்தில் 'இழந்து' என்று கூறுவதன் காரணம் என்ன?*

சேதனன் தன்னுடைய அறியாமையினால் தனக்கென வகுக்கப்பட்ட சேஷியான (தலைவனான) ஈசுவரன் விஷயத்தில் செய்யவேண்டிய கைங்கர்யத்தைச் (தொண்டினை) செய்யப்பெறாமலும், அக்கைங்கர்யத்தின் பெருமையை நினையாமலும், இப்பலத்தைப் பெறுதற்பொருட்டே தாம் இழந்தும் அதைக் கருதாமலும், உலக நடப்புகளிலேயே இச்சையுடையவராய்க் கிடக்கும் இவர்கள் நிலையை நினைத்து 'இழந்தனர்' என்று கூறுகிறார்.

*15) 'அருளிச்செய்தான்' என்று கூறாமல் "வெளியிட்டருளினான்" என்று கூறியதேன்?*

சர்வேசுவரன் இப்போது புதிதாக எந்த ஒன்றையும் கற்பனை செய்து இயம்பினான் அல்லன்; அநாதியாயும் சுருக்கமாயும் இருந்த திருமந்திரத்தை மக்களுடைய துன்ப நிலையைக் கண்டு பொறுக்க முடியாமல் பிறர் அறியும்படிச் செய்தான் என்று தோன்றும் வண்ணம் "வெளியிட்டருளினான்" எனக் கூறினார்.

## மூலம் : 6

**"சிஷ்யனாய் நின்றது - சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டார் அறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக"**

'எம்பெருமானார் ஆசார்யனாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளியது போதாதோ? சிஷ்யனாய் நின்றது எதன் பொருட்டு? என்பதனை இச்சூத்திரம் இனிது விளக்குகிறது.'

*1) எம்பெருமான் சிஷ்யனாய் நின்றது ஏன்?*

*உத்தம சிஷ்யன் சாத்திர முறைப்படி உபதேசிக்கும் ஆசார்யனைச் சென்றடைதல் வேண்டும். தன் ஆன்ம உய்வின் பொருட்டு நல்லுபதேசங்களைப் பெற வேண்டும். இத்தகைய சிஷ்யனுக்குச் சில இலக்கணங்கள் இன்றியமையாதனவாக இருக்க வேண்டும். சிஷ்யனுக்குரிய இவ்விலக்கணங்களை உலகத்தார் நன்கு அறிந்து கொள்ளாமையின் இவற்றைத் தன் செயல்களினால் அறிவித்தற் பொருட்டே தானே 'சிஷ்யனாய்' நின்றான்.*

***2) எம்பெருமான் 'சிஷ்யனாய்' நின்றதன் காரணத்தை மேலும் நன்கு விளக்குக.***

*எம்பெருமான் தான் ஆசார்யனாய் நின்று உபதேசம் செய்தலை மட்டும் மேற்கொண்டிருப்பின் 'பகவான் தனக்குப் பெருமையைத் தேடிக் கொள்ளவே ஆசார்யனாய் நின்றான்' எனச் சிலர் நினைக்கவும் கூடும்.*

*எனவேதான், தானே சிஷ்யனுமாய் நின்று, அச்சிஷ்யன் செய்ய வேண்டிய அனைத்துச் செயல்களையும் தானே செய்து காட்டினான். எம்பெருமான் சிஷ்யனாய் இருந்து செய்யும் செயல்களைச் சிஷ்யன் தானும் அவ்வாறே ஒழுகுவதற்கு முற்படுவானன்றோ! எனவேதான் எம்பெருமான் தானே சிஷ்யனுமாய் நின்றான் என்று விளக்கம் தருகிறார்.*

*3) சிஷ்யனுக்குரிய இலக்கணங்கள் யாவை?*

சாத்திர நம்பிக்கை, அறங்களை மேற்கொள்ளும் இயல்பு, விஷ்ணு பக்தி, ஆசார்யரிடம் அளவற்ற அன்பு, ஆசார்யருக்கு மகிழ்வை உண்டாக்குவதற்கேற்ற சாதுர்யம், ஆசார்யர் கைங்கர்யத்தில் விருப்பு, தன் உடல் பொருள் ஆவியையும் அறிவையும் குணங்களையும் ஆசார்யனுக்கே உரிமையாக்கும் தன்மை, இந்திரியங்களின் அடக்கம் முதலாகச் சொல்லப்படுவன சிஷ்யனுக்குரிய இலக்கணங்களாகும்.

***4) ஸ்ரீவசன பூஷண வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் சிஷ்யனுக்குரிய இலக்கணங்களாக எவற்றைக் குறிப்பிடுகிறார்?***

தன் ஆன்ம சொரூபத்திற்கு விரோதிகளான ஐஸ்வர்ய கைவல்யங்களில் மறந்தும் தொடர்பு கொள்ளாதிருத்தல், ஆசார்யனைத் தவிர வேறொரு பலமும் இல்லையென்றிருத்தல், தனக்கு ஏற்பட்ட ஞானத்திற்கு விரோதியாய் உள்ள இம்மண்ணுலகிலிருந்து விரைவில் நீங்காமையை நினைத்து வருந்துதல், ஆசார்யனைப் பிரிய நேருங்கால் ஆறாத்துயரில் ஆழ்தல், ஆசார்யன் அருளிச்செய்த எம்பெருமானின் குணங்களை அநுபவிப்பதில் அவாக்கொள்ளுதல், ஆசார்யனைக் காணுங்கால் 'மிக்க பசியுடையவன் சோற்றைக் கண்டது போல' ஆனந்தித்தல், ஆசார்யன் பெருமையைக் கண்டு பொறாமை கொள்ளாதிருத்தல் முதலியன உத்தம சிஷ்யனுக்குரிய இலக்கணங்கள் என்று மணவாள மாமுனிகள் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில் குறிப்பிடுகிறார்.

## மூலம் : 7

"ஸகல சாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம் போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ருகதநம் போலே"

('சாத்திரங்களால் பிறக்கும் ஞானத்திற்கும், திருமந்திரத்தால் பிறக்கும் ஞானத்திற்கும் உள்ள ஏற்றத் தாழ்வை உதாரண முகத்தால் விளக்குகிறார்.')

1) *சாஸ்திரங்களால் பிறக்கும் ஞானத்திற்கும், ஆசார்யனால் உபதேசிக்கப்படும் திருமந்திரத்தால் ஏற்படும் ஞானத்துக்கும் உள்ள வேறுபாடு யாது?*

*தானாய் உழைத்துப் பொருள் தேடுங்கால் எங்ஙனம் பலவிதத் துன்பங்கள் ஏற்படுகின்றனவோ, அங்ஙனமே சாத்திரங்களைப் படித்து அவற்றிலிருந்து உண்மை ஞானத்தைப் பெறுவதற்குப் பல அருமைப்பாடுகள் உண்டாகின்றன. எனவே அவற்றால் மனச் சோர்வும் புத்திக் கலக்கமும் ஏற்படுகின்றன.*

*இதுவே சுருதி, ஸ்மிருதி முதலான பல சாத்திரங்களைப் படித்து அதனால் பெறப்படும் உண்மை ஞானத்தின் நிலையாகும்.*

*இனி, திருமந்திரத்தால் பிறக்கும் ஞானம் பற்றிய விளக்கத்தைக் காண்போம்.*

*தன் முன்னோர் திரட்டி வைத்த செல்வத்தைக் கொண்டு காலங்கழிக்க வேண்டுமாயின், அதைக் காப்பாற்றும் துன்பம் மட்டுமே காணப்படும். அதைச் சேமிக்கும் துன்பம் முதலியன இல்லாமல் நிம்மதியாக உடல் சுகத்தைப் பெற்று இவ்வுலக இன்பத்தையும் அனுபவிக்க முடியும்.*

அதுபோலவே, ஆசார்யனுடைய உபதேச மூலமாய் ஏற்பட்ட இத்திருமந்திரத்தின் உயர்ந்த ஞானத்தினால் சேதனர் ஆன்ம நலத்தை எளிதிற் பெற்று வீட்டின்பத்தை அனுபவிக்கின்றனர்.

இதுவே ஆசார்யனால் உபதேசிக்கப்படும் திருமந்திரத்தினால் பெறப்படும் ஞானத்தின் நிலையாகும்.

தானே வருந்திச் சம்பாதிக்கும் செல்வத்தையும், முன்னோர் சம்பாதித்துச் சேமித்து வைத்த செல்வத்தையும் உவமையாக இங்குக் காட்டியிருப்பது உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

## மூலம் : 8

**"பகவத் மந்த்ரங்கள்தான் அநேகங்கள்"**

**('இம்மூலத்தில் பகவானுடைய மந்த்ரங்கள் பலவாக உள்ளன என்பதைக் குறிப்பிடுகிறார்.')**

1) *பகவானுடைய மந்த்ரம் இஃது ஒன்று மட்டுமா? இன்னும் பல இல்லையோ?*

பகவானுடைய மந்த்ரம் திருமந்த்ரம் மட்டும் அன்று. இன்னும் பலவும் உள. எனினும், இத்திருமந்திரமே ஏற்றமுடையதாகும்.

பகவானுடைய குணங்கள் பல அங்ஙனமே, அக்குணங்களை விளக்கப்படுத்தும் அவதாரங்களும் அளவிறந்தன. அங்ஙனமே அக்குணங்களையும் அவதாரங்களையும் விளக்கமுறச் செய்யும் மந்திரங்களும் பலவாகும்.

"பகவானே! உன்னுடைய குணங்களைக் கணக்கிட்டுச் சொல்லுதற்கியலாது. நீ அளவற்ற குணங்களையுடையவன்.

அங்ஙனமிருப்பினும் உனக்கு ஆறு குணங்களே முக்கியமானவை" என்பதை "தவா நந்த குணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா" என்னும் விஷ்ணு தர்ம ஸ்லோகம் குறிப்பிடுகிறது.

பகவானின் குணங்கள் பல; அவதாரங்கள் பல. இவற்றைப்போலவே, மந்திரங்களும் பல. எனினும், இத்திருமந்திரமே உயர்ந்தது என்று விளக்குகிறார்.

## மூலம் : 9

**"அவைதான் வ்யாபகங்கள் என்றும் அவ்யாபகங்கள் என்றும் இரண்டு வர்க்கம்"**

*1) பகவானுடைய மந்திரங்கள் யாவும் ஒரே தன்மையை உடையனவா?*

*அன்று, இம்மந்திரங்களுள் சில வியாபகங்களாகவும், சில அவ்வியாபகங்களாகவும் உள்ளன.*

*2) வியாபகங்கள் - விளக்குக.*

*எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ள பகவானை விளக்கமாகச் சில மந்திரங்கள் தெரிவித்தலின், அவை வியாபகங்கள் என்று கூறப்பட்டன.*

*3) அவ்வியாபகங்கள் - விளக்குக.*

*ஈசுவரனுடைய அவதாரங்களில் அமைந்த குணங்கள், லீலைகள் முதலியவற்றுள் ஏதாவதொன்றைத் தெரிவித்தலின், சில மந்திரங்கள் அவ்வியாபகங்கள் என்று கூறப்பட்டன.*

## மூலம் : 10

**"அவ்யாப்கங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்"**

1) வயாபக மந்திரங்கள் மூன்று யாவை? அவை ஏன் சிறந்தனவாகக் கூறப்படுகின்றன?

"நாராயண", "வாசுதேவ", "விஷ்ணு" என்பவை மூன்றும் வ்யாபக மந்திரங்களாம்.

பகவானுடைய அவதாரங்களில் அமைந்து குணலீலைகளுள் ஏதோ ஒன்றைத் தெரிவிக்கும் அவ்யாபக மந்திரங்களைக் காட்டிலும் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கும் பகவானுடைய தன்மையைத் தெரிவிக்கும் இவை மூன்றும் விஷ்ணு காயத்ரியில் கூறப்படுகின்றமையின் சிறந்தனவாகும்.

"நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி

தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்"

என்று விஷ்ணு காயத்ரி கூறுகிறது.

"நாராயணனை உபாசிக்கின்றோம்; வாசுதேவன் என்னும் நாராயணனைத் தியானிக்கின்றோம்; விஷ்ணுவானவர் நமக்கு அந்த நாராயண தியானத்தை நன்றாக நிறைவேற்றி வைக்கட்டும்"

என்பது மேற்காணும் விஷ்ணு காயத்ரி வாக்யத்தின் பொருளாகும்.

## மூலம் : 11

**"இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்"**

1) வயாபக மந்திரங்கள் மூன்றினுள்ளும் திருமந்திரம் எவ்வாறு முக்கியமானதாகும்?

எங்ஙனம் நாராயணனைக் காட்டிலும் மேலான தெய்வம்இல்லையோ, அங்ஙனமே திருவஷ்டாக்ஷரத்தைக்

காட்டிலும் மேலான மந்திரங்கள் இல்லை என்று சாத்திரங்கள் வரையறுத்துக் கூறுகின்றன.

2) விஷ்ணு, வாசுதேவ என்னும் இருமந்திரங்களின் இயல்பை விளக்குக.

"ஓம் நமோ விஷ்ணவே, ஓம் நமோ பகவதே வாஸு தேவாய" என்று பிரணவ நமஸ்ஸுகள் எல்லா மந்திரங்களுக்கும் இருப்பன போன்றே, இம்மந்திரங் களுக்கும் பொதுவாக உள்ளன.

விஷ்ணு மந்திரத்திற்கு விஷ்ணு நாமமும், வாசுதேவ மந்திரத்திற்கு வாசுதேவநாமமும் முக்கியமானவை. ஆதலின் அந்த முக்கியத்துவம் தோன்ற, விஷ்ணு வாசுதேவ நாமங்களையே விஷ்ணு மந்திரம் என்று சொல்லலாம் என்று ஆசார்யர்கள் கூறுகின்றனர்.

## மூலம் : 12

**"மற்றையவை இரண்டுக்கும் அசிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு."**

1) அசிஷ்ட பரிக்ரஹம் என்றால் என்ன?

வைணவ அதிகாரிகளால், பெரும்பான்மையும் ஒப்புக்கொள்ளப்படாத முறையே அசிஷ்ட பரிக்ரஹம் எனப்படும்.

நாராயண மந்திரத்திற்கு ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி முதலியன சொல்லப்படும்.

ஸ்வரூபம் என்பது ஈசுவரனுடைய திவ்யாத்தும சொரூபம். ரூபம், என்பது பகவானுடைய திவ்ய மங்கள விக்கிரகம். குணம் என்பது ஆன்ம குணம், விக்கிரக குணம் என்று இருவகைப்படும்.

ஞானம், சக்தி முதலியன ஆன்ம குணங்கள் எனப்படும். அழகு, மென்மை முதலியன விக்கிரக குணங்கள் எனப்படும். விபூதி என்பது நியமிக்கப்படும் பொருளைக் குறிக்கும்.

நாராயண மந்திரத்திற்கு இந்த நான்கும் சொல்லப்படும். விஷ்ணு, வாஸுதேவ என்னும் மந்திரங்களுக்கு ஸ்வரூபம் ஒன்று மட்டுமே சொல்லப்படும்.

வைணவர் அல்லாத வேறு சில சமயத்தவர் இவ்விரண்டு மந்திரங்களைக் காரணம் காட்டிப் "பிரமத்திற்கு ஞான சொரூபம் ஒன்று உள்ளது. ரூபமும் குணமும் இல்லை" என்று விதண்டாவாதம் பேசுவார்.

இதனால்தான், இவ்விரண்டு மந்திரங்களுக்கும் அசிஷ்ட பரிக்ரஹம் உண்டு என்று கூறுகிறார்.

**2) 'விஷ்ணு, வாஸுதேவ என்னும் மந்திரங்களுக்கு அபூர்த்தி யுண்டு' என்று கூறுவதன் காரணத்தை விளக்குக.**

'எங்கும் நிறைந்த பொருளாக இருப்பவன் எம்பெருமான்' என்பதைத் தெரிவிக்கும் மந்திரம் 'வியாபக மந்திரம்' எனப்படும்.

'நாரம்' என்னும் சொல்லுக்கு 'என்றும் நிலைத்து இருப்பனவற்றின் திரள்' என்று பொருள்.

'அயனம்' என்னும் சொல்லுக்கு இருப்பிடம் என்று பொருள். எனவே, 'நாராயண' என்னும் சொல்லுக்கு 'என்றும் நிலைத்து இருப்பனவற்றின் திரளில் நிறைந்திருப்பவன்' என்பது பொருளாகிறது.

ஆனால் விஷ்ணு, வாஸுதேவ எனப்படும் இவ்விரு மந்திரங்களிலும் 'எங்கும்' எனப்படும் பொருள் வெளிப்படையாக இல்லை. 'எங்கும்' என்னும் சொல்லை வலிய வருவித்தே பொருள் கொள்ள வேண்டியுள்ளது.

எனவே, இவ்விரு மந்திரங்களுக்கும் அபூர்த்தி (முழுமையின்மை) உண்டு என்று சொல்லப்படுகிறது.

3) நாராயண மந்திரத்திற்குப் பூர்த்தியுண்டு என்பதை விளக்குக.

விண்ணும் மண்ணும் அவற்றிலுள்ள பொருள்களும் ஈசுவரனால் நியமிக்கப்படும் பொருள்கள். இப்பொருள்கள் அனைத்திலும் ஈசுவரன் இருக்கிறான்.

எனவே, எல்லாப் பொருள்களிலும் ஈசுவரன் இருக்கிறான் என்பதும், ஈசுவரனுள் எல்லாப் பொருள்களும் இருக்கின்றன என்பதும் தெளிவாகிறது.

எல்லாப் பொருள்களிலும் ஈசுவரன் இருத்தலால் அவற்றை வியாப்பியப் பொருள் என்பர்.

ஈசுவரனை வியாபகப் பொருள் என்பர்.

இங்ஙனம் எல்லாப் பொருள்களிலும் இருக்கும் இருப்பையே வியாப்தி என்றும், ஈசுவரன் ஒவ்வொரு பொருளிலும் அந்தர்யாமியாய் (கரந்து நின்று ஆள்பவன்) இருக்கும் நிலையை வியாபித்திருக்கும் விதம் என்றும், உடலுக்கு உயிர் போன்று ஒவ்வொரு பொருளிலும் அவன் ஆன்மாவாயிருந்து அந்தந்தப் பொருளின் சத்தையை (உளதாகும் தன்மையை) நிர்வகிப்பதையே பயன் என்றும் சாத்திரம் கூறும்.

'நாராயண' பதத்தில் 'நாரம்' என்பது வியாப்பியப் பொருள்களையும் வியாபகமான பரமபுருஷனுடைய கல்யாண குணங்களையும் குறிக்கும்.

நாரா:- அயநம் - யஸ்ய - ஸ: என்னும் பஹுவ்ரீஹி ஸமாஸம் (அன்மொழித்தொகை) ஈசுவரன் அந்தர்யா

*மியாய் இருக்கும் நிலையைக் காட்டும். நாரங்களை அயனமாக உடையவன் எவனோ அவனே நாராயணன் என்னும் பொருளைத் தரும்.*

*நாராயணாம் - அயநம் - ய - ஸ: என்னும் தத்புருஷ ஸமாஸம் (வேற்றுமைத் தொகை) ஒவ்வொரு பொருளின் சத்தையை (உளதாகும் தன்மையை) நிர்வகிப்பதாகிய வியாப்தி பலத்தைத் தெரிவிக்கும். அதாவது நாரங்களுக்கு இருப்பிடமானவன் என்னும் பொருளைத் தரும்.*

*இவ்வாறு தெளிவான பொருளைத் தருவதனால், நாராயண பதத்திற்குப் பூர்த்தி உண்டு என்பர்.*

*தெளிவாய்த் தெரிவியாமையின் விஷ்ணு, வாஸு தேவ என்னும் மந்திரங்களுக்குப் பூர்த்தி இல்லையென்று ஆச்சான்பிள்ளை அருளிச் செய்கிறார்.*

## மூலம் : 13

**"இத்தை வேதங்களும், ரிஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்"**

1) *இந்த நாராயண மந்திரத்திற்குப் பெரியோர்களின் அங்கீகாரம் உண்டா?*

*உண்டு. வேதங்கள், ரிஷிகள், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் முதலான அனைவரும் இத்திரு மந்திரமாகிய நாராயண மந்திரத்தை விரும்பினர் என்பதற்குப் பல்வேறு ஆதாரங்களும் உள.*

**2) வேதங்கள் இம்மந்திரத்தை விரும்பின என்பதனை விளக்குக.**

*விஷ்ணு காயத்ரி, தைத்ரியோப நிஷத்து, மஹோபநிஷத்து, ஸுபாலோப நிஷத்து என்பவை பலவும்*

நாராயண மந்திரத்தைச் சிறப்பித்துச் சொல்லுகின்றமையின் எல்லா வேதங்களும் இதை விரும்பின என அறியலாம்.

விஷ்ணு காயத்ரியில் நாராயண என்னும் சொல்லுக்கே முதன்மை கொடுக்கப்பட்டுள்ளது. நாராயண என்னும் சொல்லுக்குப் பின்னரே விஷ்ணு, வாஸுதேவ என்னும் சொற்கள் சொல்லப்பட்டுள்ளன.

பரப்பிரம்மம், பரதத்துவம், பரஞ்சோதி, பரமாத்துமா என்னும் நான்கு சொற்களும் ஈசுவரனைக் குறிக்கும் என்னும் போது நாராயண பதத்தை இட்டே நாராயணானுவாகம் சொல்லுகின்றது.

"உலக முடிவு காலத்தில் பிரமனும், சிவனும், சுவர்க்கம், பூமி முதலானவையும் ஆகாசம் முதலிய பூதங்களும், அவைகளாய் உண்டாகிய பௌதிகங்களும் இல்லை. நாராயணன் ஒருவன் மட்டும்தான் இருந்தான்" என்று மஹோபநிஷத்து நாராயண சப்தத்தைச் சிறப்பிக்கின்றது.

"கண்ணும் காணப்படும் பொருள்களும், செவியும் கேட்கப்படும் பொருள்களும், திக்குகளும், மூலைத் திக்குகளும் நாராயணனே" என்று ஸுபாலோபநிஷத்து உறுதியாகக் கூறுகின்றது.

"எவனுக்கு ஜீவாத்மா, பூமி, மிருத்தியு முதலியன சரீரமாய் இருக்கின்றனவோ எவன் எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தராத்துமாவாயும், அவற்றினுடைய குற்றங்கள் தன்னிடம் அண்டாதவனாகவும், நிகரற்றவனாகவும் இருக்கிறானோ அவனே நாராயணன்" என்று ப்ருஹதாரண்யம் சிறப்பிக்கிறது.

இவ்வாறு பலபிரமாணங்கள் (எடுத்துக் காட்டுகள்) நாராயணனுடைய முதன்மையையும் சிறப்பையும்

தெரிவிப்பதுடன் இத்திருமந்திரத்தையே விரும்பின என்பதனையும் அறிகிறோம்.

3) ரிஷிகள் இத்திருமந்திரத்தை விரும்பினர் என்பதற்குச் சான்று தருக.

எங்ஙனம் எல்லாத் தேவர்களுள்ளும் நாராயணனைக் காட்டிலும் மேலான தெய்வம் இல்லையோ, அங்ஙனமே எல்லா மந்திரங்களுள்ளும் திருவஷ்டாக்ஷரத்தைக் காட்டிலும் மேலான மந்திரம் இல்லை என்பதை,

"யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத்பர: ।

ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷராத்பர: ॥

என்னும் சுலோகம் விளக்குகிறது.

அனைத்து வேதங்களினுடைய சாரமான அர்த்தத்தைப் பிரதிபலிப்பதும், சம்சாரமாகிற கடலைக் கடக்கச் செய்வதுமான திருவஷ்டாக்ஷர மந்திரமானது மீண்டும் பிறவாமல் இருக்கும்படி விரும்பும் முமுட்சுகளான மனிதர்களுக்குப் புகலாகும். 'நமோ நாராயணாய' என்னும் மந்திரமானது எல்லாப் பொருள்களையும் உறுதியாக அளிக்கும் என்பதை,

"ஸர்வ வேதாந்த ஸாரார்த்தஸ் ஸம்ஸாரார்ணவதாரக: ।

கதிரஷ் டாக்ஷரோ த்ருணாம் அபுநர்ப்பவகாங்க்ஷிணாம்: ॥

என்னும் சுலோகம் தெளிவுபடுத்துகிறது.

இவ்வாறு, ரிஷிகள் தாங்கள் இயற்றிய ஸ்லோகங்களில் யாவரும் ஒரே கருத்துடன் இத்திருமந்திரத்தைச் சிறப்பித்துள்ளனர்.

*4) ஆழ்வார்கள் நாராயண மந்திரத்தைப் போற்றிப் புகழ்ந்துள்ளதைச் சான்றுடன் விளக்குக.*

"வண்புகழ் நாரணன்", "செல்வ நாரணன்", "வாழ் புகழ் நாரணன்" என்று நம்மாழ்வார் நவில்கின்றார்.

"நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்று பெரியாழ்வார் பேசுகின்றார்

"நான்கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்று திருமங்கையாழ்வார் தெளிவாகப் பகர்கிறார்

"ஞானச் சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு", "அரன் நாராணன் நாமம்'', ''பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன்", "நாமம் பல சொல்லி நாராயணா", "நமோ நாராயணாயவென்று" என்பவனவாக முதலாழ்வார்கள் மூவரும் நாராயண மந்திரத்தை நாவாரப் போற்றியுள்ளதைத் திவ்ய ப்ரபந்தங்கள் தெளிவுபடுத்துகின்றன.

*5) ஆசார்யர்கள் நாராயண மந்திரத்தைப் போற்றியுள்ளதைக் குறிப்பிடுக.*

''இதர மந்த்ரங்களை அநாதரித்து இத்தையே தந்தாமுக்குத் தஞ்சமாக அநுசரித்து உபதேசவேளையிலும் தந்தாமைப் பற்றினவர்களுக்கும் இத்தையே உஜ்ஜீவன ஹேதுவாக உபதேசித்துப் போருகையாலே அவ்வாழ்வார்களைப் பின் சென்ற ஆசார்யர்கள் எல்லாரும் விரும்பினார்கள் என்கை" என்பார் மணவாள முனிகள்.

## மூலம் : 14

**"வாச்யப்ரபாவம் போலன்று, வாசகப்ரபாவம்"**

*1) திருமந்திரத்திற்குப் பொருளான ஈசுவரனுக்குப் பெருமை அதிகமா? திருமந்த்ரத்திற்குப் பெருமை அதிகமா?*

*எம்பெருமானுடைய மேன்மையைக் காட்டிலும், எம்பெருமானைக் குறிக்கும் திருமந்திரத்தின் மேன்மை அதாவது திருநாமத்தின் மேன்மை மிக மிக உயர்ந்ததாகும்.*

## மூலம் : 15

**"அவன் தூரஸ்த்தனானாலும், இது கிட்டி நின்றுதவும்"**

*1) திருநாமத்தின் பெருமை யாது?*

*இத்திருநாமத்திற்கு உரியவனாக எம்பெருமான் அருகில் இல்லாமல் தொலைவில் இருப்பினும், எம்பெருமானைக் குறிப்பிடும் இத்திருநாமம் தன்னைப் பக்தியுடன் சொல்பவர்களுடைய விருப்பங்களை அருகிலிருந்து நிறைவேற்றும்.*

## மூலம் : 16

**"த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே?"**

*1) எம்பெருமான் தொலைவில் இருந்த போதும் அவன் திருநாமம் உதவி புரிந்த இடம் உண்டோ?*

*உண்டு. துரியோதனனுடைய பெரிய அரச சபையில் துரௌபதியின் ஆடையினைத் துச்சாதனன் பற்றி இழுக்கலானான். அப்போது துரௌபதை கண்ணனின் திருநாமத்தை உச்சரித்துக் கைகூப்பித் தொழுதாள். அழுதாள்.*

*'கோவிந்தன் என்னும் திருநாமத்தைப் பெற்றவனே! செந்தாமரை மலர் போன்று கண்களையுடையவனே! உன்னையே சரண் என்று அடைந்தேன்! அந்தப் பேராபத்தினின்று என்னைக் காப்பாயாக!" என்று கூவியவாறே கோவிந்த நாமத்தை உச்சரித்தாள்.*

அப்போது கோவிந்தன் தொலைவில் இருந்த போதும், அப்பெருமானுக்கு வாசகமாய் இருந்த கோவிந்த நாமமே அவள் அருகில் இருந்து அவள் ஆடைகளைப் பெருகச் செய்து அவள் மானத்தைக் காத்தது.

**2) துரெளபதை துதித்தபோது சரணாகதிக்குப் பயனாகக் கோவிந்தன் அருகில் வந்தே உதவினான் என்று ஏன் சொல்லக்கூடாது?**

கோவிந்தனே - கண்ணனே வந்து உதவியதாக எந்தப் புராணத்திலும் சொல்லப்படவில்லை.

"கோவிந்தா! என்று துரெளபதை அரற்றியபோது நானே சென்று உதவவில்லை. அச்செயல் இன்றும் என் மனத்தை விட்டு நீங்காது துன்புறுத்துகின்றது!" என்று கண்ணனே கூறியுள்ளதாகச் சரித்திரம் சாற்றுகிறது.

எனவே, பெருமானே நேரில் வரவில்லையென்பதும், அவன் திருநாமமே துரெளபதியின் மானத்தைக் காத்தது என்பதும் தெளிவான செய்திகள்.

*3) நாராயண நாமத்தின் சிறப்பைக் கூறவந்த இடத்தில், கோவிந்த நாமத்தின் சிறப்பைக் கூறுவானேன்?*

'நாராயண' எனும் நாமத்தின் சப்தத்தில் அடங்கியுள்ள பல பொருள்களுள் இரண்டொன்றைக் கொண்டிருக்கும் இக்கோவிந்த நாமமே இத்துணைப் பெரிய நன்மையைப் புரிந்ததென்றால், 'நாராயண' எனும் திருமந்திரத்தைப் பற்றி விளக்கிச் சொல்லவும் வேண்டுமோ? என்பதைக் குறிக்கவே கோவிந்த நாமத்தின் சிறப்பை இங்கே கூறினார்.

## மூலம் : 17

"சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது"

**1) இத்திருமந்திரத்தைச் சொல்ல வேண்டிய முறைப்படிச் சொல்லாவிடினும் பயன் தருமா?**

தரும். இத்திருமந்திரத்தை உச்சரிக்க வேண்டிய முறைப்படி உச்சரிக்காவிடினும் தன் பயனைத் தந்தே நிற்கும்.

தன் குழந்தைகளுக்கு இத்திருநாமத்தை இட்டு அழைக்கினும், பரிகாசமாகவோ, இழிவாகவோ, பொருளுணர்ச்சியின்றியோ சொல்லினும் அழைத்தாரைக் காக்கும் தன் தன்மையிலிருந்து மாறாது.

**2) தன் குழந்தைகளுக்கு எம்பெருமான் திருநாமங்களையே இடவேண்டும் என்று பெரியோர் கூறுவதற்குக் காரணம் ஏதேனும் உளதா?**

உளது. அஜாமிளன் என்னும் பெயரையுடைய ஒருவன் முற்காலத்தில் வாழ்ந்து வந்தான். அவன் கடவுளைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காதவன், கொடுமைகள் செய்வதையே தன் தொழிலாகக் கொண்டிருந்தவன். அவனுக்கு மரணம் சம்பவிக்கும் நேரம் நெருங்கி வந்து கொண்டிருந்தது.

அஜாமிளனுக்குப் பிள்ளை ஒருவன் இருந்தான். அவன் பெயர் நாராயணன். சாகுந்தருவாயில் இருந்த அஜாமிளன் பிள்ளைப் பாசத்தால் தன் பிள்ளையை 'நாராயணா!' என்று அழைத்தவாறே கண்களை மூடலானான்.

அப்போது, 'நாராயணா' எனும் நாமத்தை நவின்றதன் பலன் அவனுக்குக் கிட்டிற்று. பகவானின் திருநாமத்தை உச்சரித்ததால் பகவானின் தூதுவர்கள் வந்து அஜாமிளனைச் சூழ்ந்து கொண்டனர். அதே நேரத்தில் எமனுடைய தூதுவர்களும் அஜாமிளனை நெருங்கி வந்தனர். எமதூதர்களுக்கும் பகவானுடைய தூதுவர்களுக்கும் இடையே அவனை அழைத்துச் செல்வதில் விவாதம் மூண்டது.

கொடுஞ் செயல் பல புரிந்த காரணத்தால், அவனைத் தாங்களே எமலோகம் அழைத்துச் செல்ல வேண்டும் என்று எமதூதர்கள் வாதிட்டனர்.

அந்திமக் காலத்தில் நாராயண நாமத்தை நவின்றதால் தாங்களே அவனைப் பகவானிடம் அழைத்துச் செல்ல வேண்டும் என்று பகவானுடைய தூதர்கள் வாதிட்டனர்.

இறுதியில் பகவானுடைய தூதுவரே அஜாமிளனின் ஆன்மாவை நல்லுலகத்திற்கு அழைத்துச் சென்றனர் என்று சரித்திரம் சொல்லுகிறது.

தன் மகனுக்கு "நாராயணன்" எனப் பெயரிட்டதால், அஜாமிளனுக்கு வந்த பெருவாழ்வு இது!

"செம்பெருந்தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால்

நம்பிகாள்! நாரணன் தம் அன்னை நரகம் புகாள்!"

என்பது பெரியாழ்வார் திருமொழி.

**3) இத்திருநாமத்தைப் பரிகாசமாய் உச்சரித்தும் பயன் அடைந்தவர் உளரோ?**

உளர். பரிகசித்தும் இகழ்ந்தும் சதாசர்வ காலமும் கண்ணனை ஏளனமாகக் கூறிவந்த சிசுபாலன் போன்றோரும் நற்கதி அடைந்தனர் என்று இதிகாசம் இயம்புகின்றதன்றோ!

**4) "திருமந்திரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி பிரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேண்டும்" என்று மூன்றாம் சூத்திரத்தில் கூறியிருக்க, இச்சூத்திரத்தில் "சொல்லும் கிரம மொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது" என்று கூறுவது முரண்பாடன்றோ?**

முரணன்பாடன்று! தன் தாயின் மனம் குளிரும் வகையில் கைங்கர்யங்களைச் செய்து வருவதோடு அறமார்க்கத்திலும் நின்று ஒழுக வேண்டுவது உத்தமமான மகனுடைய கடமையாகும்.

இதுபோலவே, திருமந்திரத்தின் மேன்மையை உணர்ந்து மிகுந்த அன்பு பாராட்டி மனமாசற்றவனாய் மனத்தை வேறெவ்விடத்திலும் செலுத்தாமல் உச்சரிக்க வேண்டும் என்பது மூன்றாம் சூத்திரத்தின் பொருளாகும்.

தான் பெற்றெடுத்த மகன் தன்னை அலட்சியம் செய்து அறியாமையாலோ ஆணவத்தாலோ அறம் தவறி நடப்பினும் அன்பும் அருளும் நிறைந்த அத்தாய் தன் மகனிடத்தில் பரிவு காட்டி நன்மையே செய்வாள். அதேபோன்று, அருளே வடிவாகிய எம்பெருமான் திருநாமங்களும் தம்மை முறைதவறி உச்சரிப்பார்க்கும் நன்மைகளையே புரியும் என்பது அனுபவம்.

## மூலம் : 18

**"இதுதான் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்"**

1) ***இத்திருமந்திரம் தன்னை உச்சரிப்பவரின் நிலைமைக்கு ஏற்ப எல்லா நன்மைகளையும் தரும் என்பது எவ்வாறு?***

திருமங்கையாழ்வார் என்பவர் பாகவதர்களுக்குத் ததியாராதனம் செய்வதையே தெய்வத் தொண்டாகக் கருதிச் செய்து வந்தார். தம்மிடமிருந்த பொருள்கள் அனைத்தும் தீர்ந்துவிட்டபடியால் பாகவத கைங்கர்யத்துக்கு வழிப்பறி செய்வதையே தொழிலாக மேற்கொண்டார்.

ஒருநாள், எம்பெருமானாகிய திருவாலி மணாளன் திருமங்கையாழ்வார் முன்தோன்றிக் காட்சியளித்தார். திருமங்கையாழ்வாரின் செவியில் திருமந்திரத்தை உபதேசித்தார். தாமறிந்த இந்த நாராயண மந்திரத்தின் மகிமையைத் திருமங்கையாழ்வார் நாவினிக்கப்பாடுகிறார்.

நாராயண நாமமானது பாகவத ஞானமாகிய குலத்தைத் தந்திடும்; அக்குலத்திற்கேற்ற தொண்டு எனப்படும் பெருஞ் செல்வத்தை அளிக்கும்; தொண்டர்கள் அனுபவிக்கின்ற மனத்துயர் அனைத்தையும் தரைமட்டமாக்கும்; மேன்மேலும் வளர்ந்தோங்கச் செய்கின்ற பரமபதத்தைக் கொடுக்கும்; பரமபதத்தை அருள்வதோடு பேரானந்தத் தையும் அளிக்கும்; வெற்றியைத் தரும்; மற்ற நன்மைகளையும் தரும்; பெற்ற தாயைக் காட்டிலும் நலன் பலவற்றை நல்கும்" என்று நாராயண நாமத்தின் நலந்தரும் இயல்பினை நாவினிக்கப் பாடுகிறார் திருமங்கையாழ்வார்.

"குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலம்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!

(- பெரிய திருமொழி)

மூலம் : 19

"ஐச்வர்ய கைவல்ய பகவல் லாபங்களை ஆசைப்பட்ட வர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்"

*1) இத்திருமந்திரம் விரும்பிய வண்ணம் விரும்பியவர்களுக்கும் கொடுக்குமா?*

*கொடுக்கும். இவ்வுலகச் செல்வம், பரலோகச் செல்வம், ஆன்ம அனுபவமாகிற கைவல்யம், பகவானை அடைந்து அனுபவிப்பதாகிற பகவல் லாபம் ஆகிய இவற்றுள் யார் யார் எதை எதை விரும்பி ஜபம், ஓமம் முதலியவற்றைச் செய்கின்றனரோ அதை அதை அவர்க்குத் தரும்.*

## மூலம் : 20

**"கர்ம ஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும்".**

*1) கர்மம், ஞானம், பக்தி முதலானவற்றை மேற்கொண்டொழுகுபவர்க்கு இத்திருமந்திரம் எவ்வகையில் உதவி செய்யும்?*

*கர்ம மார்க்கம், ஞானமார்க்கம், பக்தி மார்க்கம் முதலியனவற்றுள் எந்த நெறியைப் பின்பற்றி ஒழுகுபவரும் இத்திருமந்திரத்தைத் துணையாய்க் கொள்ளலாம். அவ்வாறு மேற்கொண்டு ஒழுகுவார்களேயானால் கர்ம மார்க்கத்துக்கோ, ஞான மார்க்கத்துக்கோ, பக்தி மார்க்கத்துக்கோ தடையாக இருக்கும் பாவங்களைப் போக்கும். தாங்கள் மேற்கொண்டொழுகும் மார்க்கத்தை நாளுக்கு நாள் வளரச் செய்து தங்களின் மன விருப்பத்தை முற்றுவிக்கும்.*

## மூலம் : 21

"ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்."

*1) பிரபன்னருக்கு இத்திருமந்திரம் எவ்வகையில் உபகார மாயிருக்கும்?*

*பிரபத்தியை (சரணாகதியை) மேற்கொண்டொழுகு பவர்க்கு இத்திருமந்திரம் ஈசுவரனே உபாயமாயும் (வழியாகவும், உபேயமாகவும் (அடையப்படும் பொருளாகவும்) இருக்கின்றான் என்னும் ஞானத்தைத் தோற்றுவிக்கிறது. ஆண்டவனுக்கு 'தான்' அடிமை என்னும் அவன் விருப்பப்படியே தான் நடக்கக்கடவன் என்னும் ஞானத்தையும் அளிக்கிறது.*

*மேலும் இத்திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து அனுபவித்துப் பொழுது போக்குகைக்குக் காரணமாகவும், "எனக்கு என்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடியே போக்கியமாகவும் இருக்கின்றது.*

## மூலம் : 22

**"மற்றெல்லாம் பேசிலும் என்கிறபடியே அறிய வேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு!"**

*1) இம்மந்திரத்தின் சிறப்பை விளக்குக.*

*ஆன்ம உய்வு பெறுவதற்கு இன்றியமையாது அறிய வேண்டிய அர்த்தங்கள் அனைத்தும் இம்மந்திரத்திற் குள்ளேயுண்டு.*

*எட்டெழுத்தோடும் கூடிய இத்திருமந்திரத்தில் எல்லாப் பொருள்களும் சொல்லப்பட்டுள்ளன என்பதைத் திருமங்கையாழ்வார் தெளிவாகத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். "நின்திருவெட்டெழுத்தும் கற்று மற்றெல்லாம் பேசிலும்" என்பது பெரிய திருமொழி.*

*"மற்றும் ஓர் தெய்வம் உளதென் றிருப்பாரோடு*
*உற்றிலேன், உற்றதும் உன்னடி யார்க் கடிமை*
*மற்றெல்லாம் பேசிலும் நின்திரு எட்டெழுத்தும்*
*கற்றுநான் கண்ணபுரத்துறை யம்மானே!"*

*திருமந்திரத்தைக் கற்றதனால் அறிந்து கொண்ட பொருள் திருமாலடியார்க்குத் தொண்டு செய்வதே - அதாவது அடியார் தொண்டே என்பதைத் திருமங்கையாழ்வார் சிறப்பாகத் தெளிவாக்குகிறார்.*

## மூலம் : 23

**"அதாவதஞ்சர்த்தம்"**

*1) திருமந்திரத்தில் இன்றியமையாது அறிய வேண்டுவன யாவை?*

*சேதனன் அறிய வேண்டிய அர்த்தங்கள் ஐந்து. இவற்றை அர்த்த பஞ்சகம் என்பர்.*

*அதாவது (1) ஆன்மாவின் இயல்பு (ஆன்ம சொரூபம்) (2) ஈசுவரனது இயல்பு (ஈசுவர சொரூபம்) (3) ஆன்மா அடையும் பயன் (பல சொரூபம்) (4) அப்பயனை அடைதற்கு உபாயம் (உபாய சொரூபம்) (5) அப்பயனை அடைவதற்குப் பகையாய் உள்ளவை (விரோதி சொரூபம்) எனப்படும் ஐந்தும் அர்த்த பஞ்சகம் என்று சொல்லப்படும்.*

*வேதங்களும் இதிகாச புராணங்களும் அர்த்த பஞ்சகத்தையே விளக்குகின்றன. அவ்வேத சாத்திரங்களின் சுருக்கமாக விளங்கும் இத்திருமந்திரமும் அர்த்த பஞ்சகத்தையே விளக்குகிறது. எனவே, இத்திருமந்திரத்தில் இன்றியமையாது அறிய வேண்டுவன அர்த்த பஞ்சகமாம்.*

## மூலம் : 24

**"பூர்வாசார்யர்கள் இதிலர்த்தமறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதிலர்த்த ஜ்ஞாநம் பிறந்த பின்பு, 'பிறந்தபின் மறந்திலேன்' என்கிறபடியே இத்தை யொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்".**

*1) பூருவாசார்யர்கள் "இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்" என்பது எங்ஙனம் பொருந்தும்?*

*வேத சாத்திரங்கள், ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் ஆகியவற்றில் நம் பூருவாசார்யர்கள் பொழுது போக்கினார்கள் என்பதே சரித்திரம் கூறும் உண்மை. எனினும் வேத சாத்திரங்கள், ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் இவற்றை அனுபவிக்கும்போது திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள பொருள் சிறப்பை ஒட்டியே தங்கள் பொழுதைப்போக்கினர்.*

*எனவே, இத்திருமந்திரத்தைக் கொண்டே பூருவாசார்யர்கள் பொழுது போக்கினர் என்பது முற்றிலும் பொருந்தும்.*

*2) "பிறந்தபின் மறந்திலேன்" என்னும் வாக்கை விளக்குக.*

*ஸ்ரீமந் நாதமுனிகள் முதலிய நம் பூருவாசார்யர்கள் இம்மந்திரத்தின் உண்மைப் பொருளை அறிவதற்கு முன்பு, "அன்று நான் பிறந்திலேன்" என்னும் திருமழிசையாழ்வாரின் வாக்கின்படித் தங்களை இவ்வுலகில் பிறந்தவர்களாகவே நினைத்திரார்கள்.*

*இதன் பொருளை நன்குணர்ந்து ஞானம் பெற்ற பின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்னும் திருமழிசையாழ்வாரின்*

வாக்கின்படியே இம்மந்திரத்தின் பொருளை வேறொன்றாலும் பொழுது போக்கலைச் செய்தறியார்கள்.

"பிறந்தபின் மறந்திலேன்" என்னும் வாக்கின் பொருள் இதுவேயாகும்.

***3) நிலையான ஆன்மாவிற்கு உடல் தொடர்புதான் 'பிறவி' எனச் சொல்லப்படுகிறது. ஆனால், இம்மூலத்தில் 'ஞான சம்பந்தமே பிறவி' என்னும் கருத்து காணப்படுகிறது. அது எவ்வாறு?***

ஸ்ரீமந் நாதமுனிகள் முதலிய நம் பூருவாசிரியர்கள் இம்மந்திரத்தின் உண்மைப் பொருளை அறிவதற்கு முன்பு "அன்று நான் பிறந்திலேன்" என்னும் திருமழிசையாழ்வாரின் வாக்குப்படித் தங்களை இவ்வுலகில் பிறந்தவர்களாகவே நினைத்திரார்கள்.

இதன் பொருளை நன்குணர்ந்து ஞானம் பெற்ற பின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்னும் ஆழ்வார் வாக்கின்படியே இம்மந்திரத்தின் பொருளை அனுபவத்தலில் மட்டுமே பொழுதுபோக்கி வந்தனர்.

திருமழிசையாழ்வார் ஏழு நூறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தார் என்று குருபரம்பரை கூறுகிறது. இவர் தாம் வாழ்ந்த ஆண்டுகளில் ஞானப்பிறவியைப் பெற்றபின்பு வாழ்ந்த வாழ்க்கையையே சிறப்பித்துக் கூறுகிறார்.

எனவே 'ஞான சம்பந்தமே பிறவி" என்பதையே பூருவாசாரியர்கள் கருதி வாழ்ந்தனர் என்பதனை அறிகிறோம்.

இக்கருத்தினை விளக்கும் திருமழிசையாழ்வாரின் திருச்சந்தவிருத்தம்:

*"நின்றது எந்தை ஊரகத்து, இருந்தது எந்தை பாடகத்து,*
*அன்று வெஃகணைக் கிடந்தது, என்இயலாத*
*முன்னெல்லாம்;*
*அன்றுநான் பிறந்திலேன்; பிறந்தபின் மறந்திலேன்;*
*நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே."*

*ஸ்ரீபாஷ்யகாரரும், "சரீரத்திற்குப் பிராணவாயு போன்று, சீவாத்துமாவிற்குப் பரமாத்துமஞானம் பிராணனாய் உள்ளது" என்று அருளிச் செய்துள்ளார்.*

*எனவே, ஞான சம்பந்தமே பிறவி என்பதும், உடல் தொடர்பு ஆன்மாவிற்குப் பிறவியாகாது என்பதும் ஆசார்யர்கள் கருத்தாக இருத்தலை உணரலாம்.*

## மூலம் : 25

**"வாசகத்திற் காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கடி ஈச்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை"**

***1) இத்திருமந்திரத்தைக் காட்டிலும் இத்திருமந்திரத்தினுடைய பொருளில் (பகவானிடத்தில்) நம் பூருவாசிரியர்கள் தம் மனத்தை மிகுதியும் செலுத்துவதற்குக் காரணம் யாது?***

*இத்திருமந்திரம் எல்லாப் பலன்களையும் தருதற்குக் காரணமாய் உள்ளது. கன்மம், ஞானம், பக்தி ஆகியவற்றுக்குத் துணையாய் நின்று அவற்றை முடித்துத் தருவதற்கு வன்மை பெற்றதாய் உள்ளது.*

*எனினும், பூருவாசாரியர்கள் இம்மந்திரத்தின் பொருளாகிய ஈச்வரத்தினிடத்திலேயே தம் மனத்தை மிகுதியாகச் செலுத்தினர்.*

*ஏனெனில், பகவானைத் தவிர வேறு உபாயங்கள் உண்டு என்று பூருவாசாரியர்களைத் தவிர மற்றவர்கள் கருதுகின்றனர்.*

ஆனால், பூருவாசாரியர்களோ ஈச்வரனே உபாயமும் உபேயமுமாக இருக்கிறான் என்று கருதுகின்றனர். எனவே, மந்திரத்தைக் காட்டிலும் மந்திரத்தின் பொருளாகிய பகவானிடத்திலேயே தங்கள் மனத்தைச் செலுத்த லானார்கள்.

**2) ஒன்று முதல் இருபத்தைந்தாம் சூத்திரம் வரை காணப்படும் கருத்துகளைத் தொகுத்துக் தருக.**

மோட்சத்தை அடைய விரும்புகின்றவன் அறிய வேண்டுவன மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரமச்லோகம் என்பன.

இம்மூன்றனுள் முதலில் அறிய வேண்டுவது திருமந்திரம். இத்திருமந்திரத்தின் பெருமைக்குத் தக்கவாறு இதை அன்புடன் காத்து அனுசந்திக்க வேண்டும். இம்மந்திரத்தினிடத்தும், இம்மந்திரத்தின் பொருளாகிய ஈச்வரனிடத்தும், இம்மந்திரத்தைத் தனக்கு உபதேசித்த ஆசார்யனிடத்திலும் பக்தி செய்ய வேண்டும்.

சமுசாரிகளை உய்வித்தற்பொருட்டுப் பகவான் தானே சீடனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளினன். சீடருடைய இலக்கணங்களை உலகத்தாருக்கு அறிவித்தற்பொருட்டே பகவான் சிஷ்யனுமாய் நின்றான்.

மற்றைய சாத்திரங்களால் உண்டாகும் ஞானத்தைக் காட்டிலும் திருமந்திரத்தால் உண்டாகும் ஞானமே சிறந்தது.

பகவந் மந்திரங்கள் 'வியாபகங்கள், அவ்வியாபகங்கள்' என்று இருவகைப்படும்.

இவற்றுள் வியாபக மந்திரங்கள் மூன்றும் சிறப்புடையன. இவற்றுள் பெரிய திருமந்திரம் முதன்மையானது. மற்றைய

மந்திரங்கள் இரண்டுக்கும் நிறைவில்லாத தன்மைகள் சில உள்ளன. இத்திருமந்திரத்தை வேதங்கள், ரிஷிகள், ஆழ்வார்கள், ஆச்சார்யர்கள் முதலான அனைவரும் விரும்பினர்.

பகவானுடைய பெருமையைக் காட்டிலும், பகவானைக் குறிக்கும் இம்மந்திரத்தின் பெருமையே உயர்ந்தது. பகவான் தொலைவில் இருப்பினும், இம்மந்திரம் அருகிலிருந்து பக்தர்களைக் காப்பாற்றும். இதற்குக் கோவிந்த நாமமே சான்றாகும்.

இம்மந்திரத்தை முறை தவறிக் கூறினாலும், இது தன் காத்தல் தொழிலிலிருந்து தவறாது. இது பக்தர்களின் எல்லா விருப்பங்களையும் நிறைவுறச் செய்யும். அவரவர் நிலைகளுக்கேற்பப் பலன்களை நல்கும்.

சேதனன் அறிய வேண்டிய அஞ்சர்த்தங்களும் இதில் உண்டு. நம் ஆசார்யர்கள் இதன் அர்த்தம் அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தவர்களாக நினைத்திலர். இதன் அர்த்தத்தை அறிந்த பின்பு இதைக் கொண்டே தங்கள் பொழுதைப் பயனுறச்செய்து கொண்டனர். இவர்கள் ஈசுவரனே உபாய உபேயம் எனக் கருதி வந்தனர். ஆதலால், இம்மந்திரத்தின் பொருளாகிய ஈசுவரனிடத்திலேயே மனத்தைச் செலுத்தி வந்தார்கள்.

இவ்வாறு காணப்படும் கருத்துகள் 1 முதல் 25 வரையுள்ள சூத்திரங்களில் காணப்படுகின்றன.

## மூலம் : 26

"இது தன்னில் சொல்லுகிற அர்த்தம், ஸ்வரூபமும், ஸ்வரூபா நுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும், உபாயமும் பலமுமென்னவுமாம்."

**1) இச்சூத்திரம் தெரிவிக்கும் செய்தி யாது?**

திருமந்திரத்திற்கு இரண்டு வகையான பொருள்கள் உள்ளதாக இச்சூத்திரம் தெரிவிக்கிறது.

இதில் இரண்டு வாக்கியங்கள் உள்ளன.

"இது தன்னில் சொல்லுகிற அர்த்தம், ஸ்வரூபமும், ஸ்வரூபாநு ரூபமான ப்ராப்யமும்" என்பது முதல் வாக்கியம்.

"ஸ்வரூபமும், உபாயமும், பலமுமென்னவுமாம்" என்பது இரண்டாம் வாக்கியம்.

**2) இத்திருமந்திரத்தால் அறியலாகும் இருவகையான பொருள்களை விளக்குக.**

1) ஆன்மாவுக்குச் சொரூபங்களாயுள்ள சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் எனப்படும் மூன்றையும் தெரிவிப்பது' என்பது முதற்பொருள்.

2) சேஷத்துவமாகிற சொரூபத்தையும், பகவானாகிற உபாயத்தையும், கைங்கரியமாகிற பலத்தையும், (பயனையும்) தெரிவித்தல் மற்றொரு பொருளாகும்.

**3) சேஷத்துவம் என்பதனை விளக்குக.**

சேஷத்துவம் என்பது அடியவன் என்னும் நிலை. அதாவது கட்டிப் பொன்னானது தன்னையுடையவனுக்குப் பெருமையைக் கொடுக்கும். அதனைப் பெற்றிருப்பவன் தான் விரும்பும் வண்ணம் அப்பொன்னைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதுபோலவே, ஜீவாத்மாவானது தன்னையுடைய ஈசுவரனுக்குப் பெருமையைக் கொடுக்கிறது. ஈசுவரன் விருப்பப்படியே தன்னை நடத்திச் செல்லவும் தகுதியுடையதாய் இருக்கிறது.



4) பாரதந்திரியம் - விளக்கம் தருக.

கட்டிப் பொன்னானது தன்னை உடையவன் உருக்கினாலும், அணிகலன்களாய்ச் செய்தாலும் அவன் விருப்பத்திற்கேற்பவே தன்னை ஒப்படைத்துக்கொள்கிறது.

அதுபோலவே சீவான்மாவானது தன்னை ஈசுவரன் எங்ஙனமெல்லாம் பணி கொண்டாலும் ஈசுவரன் விருப்பத்திற்கேற்பவே பணி செய்கிறது.

5) கைங்கரியமாவது யாது?

பகவான் உவக்கும் (மகிழும்) வண்ணம் பிரபன்னன் (அடியவன்) செய்யும் தொண்டே கைங்கரியம் எனப்படும்.

6) 'ஓம், நம நாராயணாய' என்னும் மூன்று பதங்கள் உணர்த்தும் செய்திகள் யாவை?

'ஓம்' என்னும் பிரணவத்தால் சேஷத்துவமும், 'நம'ஸ்ஸால் பாரதந்திரியமும், 'நாராயணாய' என்னும் பதத்தில் உள்ள 'ஆய' என்னும் வேற்றுமையால் கைங்கரியமும் சொல்லப்படுகின்றன.

7) இரண்டாம் வாக்கியத்தில் சொல்லப்படுவன யாவை?

பிரணவத்தால் சேஷத்துவமும், நமஸ்ஸால் உபாயமும் 'ஆய' பதத்தால் பலனும் (கைங்கர்யமும்) சொல்லப்படுகின்றன.

8) நம்ப் பதம் பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது யாங்ஙனம்?

நமஸ்ஸு என்பதை ந + ம என்று பிரிக்கலாம்.

இதில் ம : என்பது எனக்கு உரியவன் என்னும் பொருளைத் தரும்.

*நம என்னும் பதத்தின் பொருள் 'எனக்கு நான் உரியவன் அல்லன்" என்பதை இதனால் அறிகிறோம்.*

*"எனக்கு நான் உரியவன் அல்லன்" என்றால் "பிறனுக்கு - அதாவது ஈசுவரனுக்கு நான் உரியவன்" என்பது தெளிவாகக் கிடைக்கிறது. இம்முறையில் நம : என்பது ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கிறது என்பதைத் தெளிவாக அறிகின்றோம்.*

***9) "நம : என்பது உபாயத்தைத் தெரிவிக்கிறது" என்று இரண்டாம் வாக்கியத்தில் சொல்லப்படுகிறது. அஃது எப்படி?***

*'நம' என்பது ஞானத்தால் ஏற்பட்ட சுதந்தரத் தன்மையை நீக்குகிறது. சுதந்தரத் தன்மை காரணமாக ஏற்படுகின்ற 'தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும்' என்னும் எண்ணத்தை நீக்குகின்றது.*

*எனவே, சுதந்தரத் தன்மையை இழந்து நிற்கும் சேதனனுக்கு ஈசுவரனே காக்கும் கடவுளாகிறான். (இரட்சிப்பவனாகிறான்) இதனால் ஈசுவரனே காத்தலுக்கு உபாயனாகிறான் என்பது தெளிவு.*

*இவ்வாறு ஆராயுங்கால் 'நம' என்னும் பதத்தில், அர்த்த பலத்தால் (பொருட்சிறப்பால்) ஈசுவரனே உபாயம் என்னும் கருத்து பெறப்படுகிறது.*

## மூலம் : 27

**"பலமிருக்கும்படி ப்ரமேய சேகரத்திலும் அர்ச்சிராதி கதியிலும் சொன்னோம்"**

***1) சீவான்மாவிற்குப் பலன் என்று எதனைச் சொல்லுகிறார்?***

*சீவான்மாவானது அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதம் சென்று, பரிபூரணமாய்ப் பகவானை அனுபவித்து,*

அப்பரிபூரண அனுபவத்தால் உண்டாகும் அன்பினால் செய்யும் எல்லாத் தொண்டுகளினாலும் ஏற்படும் ஈசுவர முகமலர்ச்சியே சீவான்மாவிற்குப் பலன் என்று சொல்கிறார்.

## மூலம் : 28

### "இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்கும்"

1) **திருமந்திரத்திலுள்ள எழுத்துகளையும், சொற்களையும் பகுத்துக் கூறுக.**

'ஓம்' 'நம' 'நாராயணாய' என்பது திருமந்திரம். இதில் மூன்று சொற்கள் உள்ளன. அவை ஓம், நம: நாராயணாய என்பனவாகும்.

'ஓம்' என்பது ஓரட்சரம் (ஓரெழுத்து) கொண்டது. 'நம' என்பது இரண்டெழுத்துகள் கொண்டது. 'நாராயணாய' என்பது ஐந்து எழுத்துகளைக் கொண்டது. ஆக, இத்திருமந்திரம் எட்டு எழுத்துகளைக் (அஷ்டாக்ஷரம்) கொண்டுள்ளது என்பதை அறியலாம்.

2) **திருமந்திரத்தில் உள்ள எழுத்துகளின் எண்ணிக்கை பற்றி வேறு கருத்தும் நிலவுகிறதா? - விளக்குக.**

வேறு கருத்தும் உண்டு.

ஓம் எனும் பிரணவத்தைச் சேர்த்தே திருமந்திரம் எட்டு அக்ஷரங்களை உடையதாய் இருக்கிறது எனச் சாத்திரங்கள் யாவும் சாற்றுகின்றன.

ஆனால், சிலர் 'ஓம்' எனும் பிரணவத்தை நீக்கி 'நம' என்பதை இரண்டு எழுத்துகளாகவும், 'நாராயணாய' எனும் பதத்தை நார+அயநாய எனப் பிரித்து ஆறு எழுத்துகளாக வும் கொண்டு எட்டு எழுத்துகளாக உள்ளது திருமந்திரம் என்கின்றனர்.

ஆனால், பிள்ளையுலகாசிரியரும், மணவாள மாமுனிகளும், இவர்களுக்கு முன்பிருந்த ஆசார்யர்களும் 'ஓம்' எனும் பிரணவத்தைச் சேர்த்தே திருமந்திரம் எட்டு எழுத்துகளை உடையதாக உள்ளது என்றும், பிரணவத்தைச் சேர்த்தே யாவருக்கும் உபதேசிக்க வேண்டும் என்றும் வற்புறுத்திக் கூறியுள்ளனர்.

## மூலம் : 29

**"மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது."**

*1) மூன்று பதங்களும் குறிப்பன யாவை?*

மூன்று பதங்களும் மூன்று பொருள்களைக் குறிக்கின்றன.

## மூலம் : 30

**"அதாவது சேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்."**

*1) மூன்று பதங்களும் உணர்த்தும் பொருள்கள் யாவை?*

'ஓம்' எனும் பிரணவம் சேதனனுடைய சேஷத்துவத்தை உணர்த்துகிறது.

'நம' என்பது பாரதந்திரியத்தை உணர்த்துகிறது.

'நாராயணாய' என்பது சேதனன் ஈசுவரனுக்குப் புரிய வேண்டிய கைங்கர்யத்தை உணர்த்துகிறது.

*2) இப்பொருள்களை மனதிற்கொண்டு ஆசிரியர் வேறு சூத்திரத்தில் அருளிச் செய்துள்ளாரா?*

இம்மூன்று பொருள்களையும் மனதிற்கொண்டு 26ஆம் சூத்திரத்தில் (மூலத்தில்) முதற்பொருள்களை ஆசிரியர் அருளிச் செய்துள்ளார்.



## மூலம் : 31

**"இதில் முதற் பதம் ப்ரணவம்"**

*1) பிரணவத்தை முதலில் வைததே சொல்ல வேண்டும் என்பது ஏன்?*

*பிரணவத்தையே முதற் பதமாகக் கொள்ள வேண்டும் என்று நாராயண உபநிஷத்து கூறுகின்றது.*

*சிலர், பிரணவத்தை - அதாவது ஓம் என்பதனை நீக்கி, அதற்குப் பதிலாக 'அம்' எனும் பதத்தைச் சேர்த்து எட்டு எழுத்து மந்திரமாகச் சொல்லுவதைத் தவிர்ப்பதற்காகவே முதற் பதம் - பிரணவம் என்று கூறுகிறார் நூலாசிரியர்.*

*"அஷ்டாக்ஷரம் என்னும் மந்திரம் பிரணவத்தை முதற்பதமாகவும், நம: என்பதை மத்திய பதமாகவும், நாராயணாய என்பதைக் கடைசிப் பதமாகவும் கொண்டுள்ளது" என்றும், "ஓம் என்பதை முதலிலும், நம: என்பதை அதன் பிறகும், நாராயணாய என்பதை அதற்குப் பிறகும் சொல்ல வேண்டும்" என்று இயம்பியுள்ளமையின், திருமந்திரத்திலுள்ள பிரணவமே முதற்பாகம் என்று நாராயணோபநிஷத்து விளக்குகிறது.*

## மூலம் : 32

**"இது 'அ' என்றும் 'உ' என்றும், 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்."**

*1) ஓம் எனும் பிரணவத்தில் காணப்படும் எழுத்துகள் எத்தனை?*

*ஓம் என்பது பிரிந்திருக்கும் நிலையில் அ, உ, ம என்று மூன்று எழுத்துகளாய் உள்ளது. இம்மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாக மூன்று பொருள்களைத் தெரிவிக்கும்.*

*சேர்ந்திருக்கும் நிலையில் ஒரே எழுத்தாய், ஒரே பதமாய் ஒரு பொருளையே தெரிவித்து நிற்கும்.*

*2) மூன்று எழுத்துகள் உணர்த்தும் பொருள் யாது?*

*'அ' என்னும் எழுத்து (அகாரம்) பகவானைக் குறிக்கிறது. அகரத்தில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தை (அடியவனாம் தன்மையை) உணர்த்துகிறது.*

*உகாரம் அந்தச் சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவத்தை (மற்றவருக்கல்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருக்கும் தன்மையை) உணர்த்துகிறது.*

*மகாரம் ஞானவானாகிற சீவனைக் குறிக்கிறது. இவ்வாறு மூன்று எழுத்துகளும் மூன்று பொருள்களைத் தருகின்றன.*

3) **ஓம் என்பது ஓரெழுத்தே என்னும் பொருளில் 'ஓமித்யேகாக்ஷரம்' என்று நாராயண உபநிஷத்தும் சொல்லுகிறது. அப்படியிருக்க, மூன்று எழுத்துகள் கொண்டது ஓம் என்பது எங்ஙனம் பொருந்தும்?**

*ஓம் எனும் எழுத்துக்கு ஸம்ஹிதாகாரம் (சேர்ந்திருத்தல்) அஸம்ஹிதாகாரம் (பிரிந்திருத்தல்) என இருநிலைகள் உள்ளன.*

*பிரிந்திருக்கும் நிலையில் உள்ளபோது உள்ள உருவம் மூன்று எழுத்துகளாக உள்ளது.*

*சேர்ந்திருக்கும் நிலையில் உள்ளபோது உள்ள உருவம் ஓரெழுத்தாக உள்ளது.*

## மூலம் : 33

**"மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாப் போலே, மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது."**

1) **இச்சூத்திரத்தில் அமைந்துள்ள உவமானம், உவமேயம் இவற்றைத் தனித்தனியே எடுத்துக்காட்டுக.**

*"மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாப் போல" என்பது உவமானம்.*

*"மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது" என்பது உவமேயம்.*

2) **இதில் அமைந்து காணப்படும் உவமான உவமேயங்களைப் பொருத்தி விளக்குக.**

*தாழிக்கு வேதம்; அத்தாழியில் உள்ள தயிருக்கு அவ்வேதத்தில் சொல்லப்படும் அறம், பொருள், இன்பம், வீடுகளாகிற பலன்கள். நிறைத்து என்பதற்கு மேலெழுந்தவாரியாகத் தோன்றும் தோற்றம்; கடைந்து என்பதற்கு உள்ளே நுழைந்து ஆராயும் ஆராய்ச்சி; வெண்ணெய்க்கு எழுத்துகள் மூன்று; திரட்டுதலுக்கு எடுத்தல்.*

*இவ்வாறு உவமான உவமேயங்கள் பொருந்திக் காணப்படுகின்றன.*

3) **மூன்று வேதங்களிலிருந்தும் மூன்று அக்ஷரங்களையும் எடுத்தது என்பது எங்ஙனம் என்பதனை விளக்குக.**

*இருக்கு, யசுர், சாமம் (ரிக், யஜுஸ், ஸாமம்) என்பன மூன்று வேதங்கள்.*

*இருக்கு வேதத்தின் சாரம் பூ :*

*யஜுர் வேதத்தின் சாரம் புவ :*

*ஸாம வேதத்தின் சாரம் ஸுவ :*

*இம்மூன்றையும் கட்டிப் பொன்களுக்குச் சமமாகக் கொள்ள வேண்டும்.*

இம்மூன்று பொற்கட்டிகளையும் ஒன்றாகச் சேர்த்து உருக்கி, அதைச் சுத்தத் தங்கமாக்குவதற்கு ஓட வைத்தல் போன்று,

ஈசுவரன் தன் உறுதியான ஆற்றலினால் பூ: புவ: ஸுவ: எனப்படும் இம்மூன்று வ்யாஹ்ருதிகளையும் தூய்மையாக்கி ஓடவைத்தான்.

இதிலிருந்து முதலில் அகரத்தையும், இரண்டாவது உகரத்தையும், மூன்றாவது மகரத்தையும் தோன்றுமாறு செய்தான்.

இதை மனதிற் கொண்டே பிள்ளை லோகாசார்யார் "மூன்று தாழியிலிருந்த தயிரைத் தனித்தனியே கடைந்து அவற்றின் சாரமான வெண்ணெய்த் திரட்டினது போன்று, மூன்று அட்சரங்களை எடுத்தது" என்று அருளிச்செய்கிறார்.

## மூலம் : 34

**"ஆகையால், இது ஸகல வேத ஸாரம்"**

*1) பிரணவம் சகல வேத சாரம் எனப்படுவது ஏன்?*

மூன்று வேதங்களின் சாரமாகக் கிடைத்த பூ: புவ: ஸுவ: எனப்படும் எழுத்துகள் மூன்றையும் சேர்த்து, அதிலிருந்து சாரமாக அ, உ, ம எனப்படும் இம்மூன்று எழுத்துகளையும் தோற்றுவித்தான். ஆதலின், இது சகல வேதசாரம் எனப்பட்டது.

**2) இருபத்தாறாம் சூத்திரத்திலிருந்து முப்பத்து நான்காம் சூத்திரம் வரையும் கூறியவற்றைத் தொகுத்து வரைக.**

இத்திருமந்திரம் இரண்டு வகையான சிறப்புப் பொருள்களைத் தெரிவிக்கிறது. ஆன்மாவிற்குப் பலன்

அன்புடன் செய்யப்படும் தொண்டுகளினால் ஏற்படும் ஈசுவர முக மலர்ச்சியே. இத்திருமந்திரம் எட்டுத் திருவட்சரங்களையும், மூன்று பதங்களையும் கொண்டுள்ளது. இம்மூன்று பதங்களும் சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கர்யம் ஆகிய மூன்று பொருள்களையும் சொல்லுகின்றன. இம்மந்திரத்தின் முதல்பதம் பிரணவம். பிரணவத்தில் அ, உ, ம எனப்படும் எழுத்துகள் மூன்று உள்ளன. இம்மூன்று எழுத்துகளும் மூன்று வேதங்களிலிருந்தும் எடுக்கப்பட்டன. ஆகையால், பிரணவம் சகல வேதசாரம் எனப்பட்டது.

இச்செய்திகளே 26ஆம் சூத்திரம் முதல் 34ஆம் சூத்திரம் வரையுள்ள பகுதிகளில் கூறப்பட்டுள்ளனவாம்.

## மூலம் : 35

**"இதில் அகாரம் ஸகல ஸப்தத்துக்கும் காரணமாய், நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே, ஸகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வ ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது."**

1) **இம்மூலத்தைப் பிரித்துக் காட்டி விளக்க முடியுமா?**

முடியும். "அகாரம், சகல சத்தத்துக்கும் (எழுத்துகட்கும்) காரணமாய் இருப்பதால், சகல உலகங்கட்கும் காரணமாயுள்ள எம்பெருமானைச் சொல்லுகிறது" என்று ஒரு வாக்கியமாகப் பிரிக்கலாம்.

"அகாரம் காப்பவனாக விளங்கக் கூடிய எம்பெருமானைக் குறிக்கின்ற நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமா யிருக்கையாலே (சேர்ந்திருக்கும் தன்மையாலே) சர்வ ரட்சகனாகிய எம்பெருமானைக் குறிக்கிறது" என்று மற்றொரு வாக்கியமாகப் பிரிக்கலாம்.

இவ்வாறு இம்மூலத்தை இரண்டு வாக்கியங்களாகப் பிரிக்கலாம்.

**2) அகாரத்தின் சிறப்பினை விளக்குக.**

உலகியலில் கேட்கப்படும் ஒலிகள் லௌகீக சத்தங்கள்) அனைத்துக்கும் வேதமே காரணம்! வேதங்கட்குப் பிரணவமே காரணம்! பிரணவத்துக்கு அகாரமே காரணம்!

இவ்வகையில் ஆராய்ந்தால் எல்லா ஒலிகளுக்கும் அகாரமே காரணம் என்பதை அறியலாம்.

இந்த அகாரமே எல்லாப் பொருள்களுக்கும் காரணமாக உள்ள எம்பெருமானைக் குறிப்பிடுகிறது என்பது தெளிவு.

சித்து (உயிருள்ளன), அசித்து (உயிரில்லன) ஆகிய யாவற்றையும் தனக்குச் சரீரமாகக் கொண்டவன் பகவான் என்னும் பொருளை நாராயண பதம் குறிக்கும். எனவே, பகவானே எல்லா உயிர்களுக்கும் ரட்சகன் (காப்பவன்) என்பது தெளிவாகிறது.

இந்த நாராயண பதத்துக்கு அகாரமே சுருக்கமாக உள்ளது. எனவே, அகாரம் எல்லா உலகங்களுக்கும் ரட்சகனா யிருக்கும் எம்பெருமானைக் குறிக்கிறது என்பதை அறியலாம்.

இயல்பாகவே அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாக இருக்கிறது. அதுபோலவே, இயல்பாகப் பரம்பிரம்மமும் எல்லாப் பொருள்களுக்கும் காரணமாக இருக்கிறார். எனவே, அகாரம் காரணப் பொருளான எம்பெருமானையே தெரிவிக்கிறது. இது பிரகிருதி சத்தியால் குறிக்கப்படுகிறது என்று விளக்கிக் கூறுவர் சான்றோர்!

**3) அகாரமாகிய ஒலியே மற்றைய எழுத்தாகிற இ, உ முதலான எல்லா ஒலிகளுக்கும் காரணமாயிருக்கிறதா? விளக்குக.**

இல்லை. மற்றைய எழுத்தாகிற இ, உ முதலான எல்லா எழுத்துகளின் ஒலிகளுக்கும் அகரமாகிற ஒலி காரணமாக இல்லை.

அகார ஓசையிலிருந்தே மற்றைய ஓசைகளாகிற இ, உ முதலான ஓசைகள் உண்டாகின்றன என்பது எவ்வகையிலும் பொருந்தாது.

எனவே, இவ்வகாரம் மூல ஒலி (சுருக்கம், விரிவு) முறையில் காரணமாகிறது என்று கூறுதலே பொருந்துவதாகும்.

**4) சுருக்கம், விரிவு என்னும் முறையிலேயே அகார ஒலி காரணமாகிறது என்பதற்குச் சான்று தந்து விளக்குக.**

ஸம்க்ஷேப ராமாயணம் என்னும் பெயரில் இராம சரிதத்தை வால்மீகி முனிவர் சுருக்கமாகப் பாடியுள்ளார். இவரே பாலகாண்டம் முதல் பல காண்டங்களாக இராம சரிதத்தை விரிவாகவும் பாடியுள்ளார்.

அதுபோலவே, அகாரத்தைப் பிரணவமும், பிரணவத்தை வேதங்களும், வேதங்களை ஸ்மிருதி இதிகாச புராணங்களும் விரிவுபடுத்துகின்றன.

எனவே, அகாரம் மற்ற எழுத்துகளுக்குக் காரணமாக இல்லை. அதே சமயம், அந்த அகாரம் சுருக்கம், விரிவு என்னும் முறையில் காரணமாக உள்ளது என்றும் கொள்ள வேண்டும்.

“அகரமுதல எழுத்தெல்லாம்” என ஓதும் திருக்குறளின் கருத்தும் இதுவேயாம்.

பரமான்மா, ஆன்மா, உபாயம், உபேயம், விரோதி ஆகிய ஐந்து பொருள்களும் பிரணவத்தில் எவ்வாறு அடங்கியுள்ளனவோ, அவ்வாறே அப்பிரணவத்தின்

சுருக்கமாய் விளங்கும் அகாரத்திலும் மேற்கூறிய இவ்வர்த்த பஞ்சகம் அடங்கியுள்ளமை அறிந்து இன்புறலாம்.

**5) அகாரத்தில் இவ்வர்த்த பஞ்சகங்களும் அடங்கியுள்ள தன்மையை விளக்குக.**

அகாரம் ஈசுவரனைச் சுட்டுகிறது. அந்த ஈசுவரன் சேதனருக்கு உபாயமாயும், உபேயமாயும் இருக்கிறான். இந்நிலையில் அகாரத்தில் பரமான்மா, உபாயம், உபேயம் ஆகிய மூன்றும் அடங்கியுள்ளமை அறியலாம்.

சித்து (ஞானமுள்ளவை), அசித்து (ஞானமற்றவை) களைத் தனக்குச் சரீரமாக ஈசுவரன் பெற்றிருக்கிறான். எனவே சித்தாகிற ஆன்மாவும், அசித்தாகிற விரோதியும் அகாரத்தில் சொல்லப்படும் பரமான்மாவினிடத்தில் சரீரப் பொருளாய் அடங்கியுள்ளன.

அகங்கார (நான்) மமகாரங்களுக்கு (எனது) அசித்து காரணமாயிருத்தலின் அந்த அசித்து விரோதி எனப்படும்.

இவ்வாறு பார்க்கும்போது அகாரத்தில் பரமான்மா, உபாயம், உபேயம், ஆன்மா, விரோதி எனப்படும் ஐந்தும் சுருக்கமாக அடங்கியுள்ளமை புலனாகும்.

**6) அகாரத்திற்குப் பொருளாக உள்ள எமபெருமானின் இயல்புகள் யாவை?**

உலக காரணனாகவும், உலக ரட்சகனாகவும் உள்ளமையே எம்பெருமானின் இயல்புகளாம்.

குடம் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் உள்ளன. இம் மூன்று காரணங்களாகவும் இருப்பவன் எம்பெருமானே!

**7) மூன்று காரணங்கள் யாவை? விளக்கமாகக் கூறவும்.**

உபாதான காரணம் (முதற் காரணம்), ஸஹகாரி காரணம் (துணைக் காரணம்), நிமித்த காரணம் (தொழிற்காரணம்) என்பவை மூன்று காரணங்களாகும்.

மண் பாத்திரங்களைச் செய்யுங்கால் மண் உபாதான காரணம். தண்டம், சக்கரம் முதலியன ஸஹகாரி காரணங்கள். குயவன்-நிமித்த காரணம்.

இவ்வாறே, உலகைப் படைக்கும் பரம்பொருளும் உபாதான காரணமாகவும், ஸஹகாரி காரணமாகவும், நிமித்த காரணமாகவும் உள்ளான்.

ஸஹகாரி காரணமாகவும், நிமித்த காரணமாகவும் இருப்பதில் பகவானுக்கு யாதொரு குறையுமில்லை. ஆனால் அப்பரம்பொருளே, உபாதான காரணம் என்னும்போது, மண்ணுக்குள்ள விகாரங்கள் போன்ற விகாரங்கள் அப்பரம் பொருளுக்கும் உண்டாகுமல்லவா?

அவ்வாறாயின், பிரமம் விகாரமற்றது எனச் சொல்லும் வேதவாக்கியம் எவ்வாறு பொருந்தும் என்னும் கேள்வி எழக்கூடும்.

**8) 'பிரமம் விகாரமற்றது' எனச் சொல்லும் சுருதி வாக்கியம் எவ்வாறு பொருந்தும்?**

சித்து, அசித்துகளாகிற சரீரப் பொருள்களுள் ஒன்றையும் விடாமல் ஒவ்வொன்றிலும் ஆன்மாவாய் எழுந்தருளி யிருப்பவன் பரமான்மா என்பதை நாராயண சத்தம் சொல்லுகிறது.

சித்து, அசித்துகளைச் சரீரமாய்க் கொண்டுள்ள நிலையில் மேற் சொல்லியபடி பகவான் உபாதான காரணமாயிருப்பதால், சரீர ஆத்தும பாவத்தைக் குறிக்கும் நாராயண பதத்தில் உபாதான காரணத்வம் தெளிவாகிறது.

ஆக, உபாதான காரணமாயுள்ள பிரம்மத்திற்கு விகாரமில்லை, அப்பிரமத்திற்குச் சரீரமாயுள்ள சித்து அசித்துகளுக்கே விகாரமுண்டு என்பது தெரிகிறது.

எனவே, பிரமம் விகாரமற்றது என்பது பொருத்தமாகிறது.

## மூலம் : 36

**"ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும், அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்."**

*1) காத்தல் என்றால் என்ன? விளக்குக.*

காத்தல் (இரட்சித்தல்) என்பது விரோதமானவற்றைப் போக்குதலும், விருப்பமானவற்றை அடையுமாறு செய்தலும் என இருவகைப்படும்.

இவ்விரண்டினுள் ஏதேனும் ஒன்றை மட்டும் நிறைவேற்றினால், அது காத்தல் என்று சொல்லுவதற்கு உரியதாகாது.

உயிர்களின் துன்பங்களுக்குக் காரணமானவற்றைப் போக்குதலும் சுகங்களுக்குக் காரணமான நன்மைகளை நல்குதலும் காத்தல் எனப்படும். காத்தல் தொழிலைச் செய்யவல்லவன் பகவான் ஒருவனேயாம்!

அகாரத்திலும் காத்தல் சிறப்பாகச் சொல்லப்படுகிறது.

## மூலம் : 37

**"இவை இரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும்"**

*1) காத்தலின் தொழில் நிலை யாது?*

காத்தல் தொழிலை அனைவரிடத்திலும் எம்பெருமான் ஒரே மாதிரியாகச் செய்வதில்லை. விரோதமானவற்றைப்

போக்குதல், விருப்பமானவற்றை நல்குதல் ஆகிய இவ்விரண்டு செயல்களையும் சேதனருடைய நிலைக்கு ஏற்பவே எம்பெருமான் அருள்பாலிக்கிறார்.

## மூலம் : 38

**(1) "ஸம்ஸாரிகளுக்கு விரோதி சத்ரு பீடாதிகள்; அபேக்ஷிதம் அந்நபாநாதிகள்" (2) முமுக்ஷுக்களுக்கு விரோதி ஸம்ஸார ஸம்பந்தம்; அபேக்ஷிதம் - பரமபதப்ராப்தி (3) முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்யஹாநி; அபேக்ஷிதம் - கைங்கர்ய வ்ருத்தி"**

***1) சம்சாரிகளுக்கு விரோதியாகவும், விருப்பமானவையாகவும் உள்ளன யாவை?***

*சம்சாரிகளுக்கு விரோதியாவன: பகைவரால் ஏற்படும் துன்பங்கள் முதலியனவாம்.*

*சம்சாரிகளுக்கு விருப்பமானவை: சோறு, தண்ணீர், உடை முதலியனவாம்.*

***2) முமுட்சுகளுக்கு விரோதியாகவும், விருப்பமாகவும் உள்ளன யாவை?***

*முமுட்சுகளுக்கு விரோதியாக உள்ளது இந்த உடலுடன் இவ்வுலகில் இருப்பதாகிய சம்சார பந்தம்.*

*முமுட்சுகளுக்கு விருப்பமாக இருப்பது பகவானுடைய பூரண அனுபவத்திற்கு ஏற்றதான பரம பதத்தைப் பெறுதலாம்.*

***3) முத்தருக்கும் நித்தருக்கும் விரோதியாயும், விருப்பமாயும் உள்ளன யாவை?***

*முத்தருக்கும் நித்தருக்கும் விரோதியாய் இருப்பவை, பகவான் திருவடிகளில் தம் சொரூபத்திற்கு ஏற்பப் புரியும் கைங்கர்யங்களுக்கு உண்டாகும் தடைகளாம்.*

விருப்பமாய் இருப்பவை, தாங்கள் எப்போதும் விரும்பிச் செய்து கொண்டிருக்கும் கைங்கர்யங்களை மென்மேலும் வளரச் செய்தலாம்.

*4) பகவான் எந்த நிலையில் ரட்சகனாகிறான்?*

அந்தத்தச் சேதனரின் (சம்சாரிகள், முமுட்சுகள், முத்தர்நித்தர்) நிலைக்கு ஏற்பத் துன்பங்களைப் போக்கியும், இன்பங்களை ஆக்கியும் அருள் புரியும் நிலையில் பகவான் இரட்சகனாகிறான்.

*5) சம்சாரிகள் எனப்படுவோர் யார்?*

தேகமே ஆன்மா என்று ஆசை வைத்தும், தாமே சுயமாகச் செயல்படத்தக்கவர் (சுதந்தரர்) என நினைத்தும், ஐம்புலன்களால் நுகரப்படும் உலக இன்பங்களே அனுபவிக்கத் தக்கவை எனக் கருதியும் இருப்பவர்களே சம்சாரிகள் எனப்படுவர்.

*6) முமுட்சுகள் எனப்படுவோர் யார்?*

'உடல் ஆன்மா அன்று' என்ற உண்மையை உணர்ந்தவர்கள். பயனற்ற செயல்களில் வெறுப்புக் கொள்பவர்கள். பகவத் அனுபவத்தினால் பிறக்கும் அன்பிலும், அவ்வன்பின் காரியமான கைங்கர்யத்திலும் விருப்புற்றிருப்பவர்கள். இவ்வியல்பினரே முமுட்சுகள் எனப்படுவர்.

*7) முத்தர், நித்தியர் - விளக்குக.*

இவ்வுடலை விட்டுப் பரம பதத்தை அடைந்து எம்பெருமான் உகக்கும் கைங்கர்யங்களைச் செய்பவர்கள் முத்தர் எனப்படுவர்.

*பரமபதத்திலேயே என்றென்றும் நிலைத்திருப்பவர்கள் நித்யர்கள். சம்சாரத் தொடர்பிலிருந்து நீங்கிய பின்பே முக்தருக்குப் பகவத் அனுபவம் ஏற்படுகிறது.*

*ஆனால், நித்தியருக்கோ என்றென்றும் இடைவிடாது நித்தியமாய்ப் பகவத் அனுபவம் கிடைக்கிறது.*

***8) கேவலரைப் பற்றிப் பிள்ளை உலகாசிரியர் குறிப்பிடாததேன்?***

*சம்சாரிகள் தம் தாழ்ந்த நிலையிலிருந்து படிப்படியாக உயர்ந்து, ஞானம் பெற்றுத் தங்கள் சம்சாரத் தொடர்பிலிருந்தும் விடுபட்டு, எப்போதேனும் ஒரு சமயம் எம்பெருமானை அணுகி, அவனுக்குக் கைங்கர்யம் புரிந்து வாழும் பகவத் அனுபவம் பெறுவதுமுண்டு.*

*ஆனால், கேவலரோ, ஆன்ம அனுபவமாகிய சிற்றின்பமே வாழ்வு எனக் கருதி, இறை அனுபவமாகிய பேரின்பத்தை இழந்து நிற்கின்றனர். இவர்கள் ஒருபோதும் இறைபணி செய்து பேரின்பம் அடைய வேண்டும் என்று எண்ணுவதேயில்லை.*

*எனவேதான், பிள்ளை லோகாசாரியர் கேவலரைப் பற்றிக் குறிப்பிடவில்லை.*

## மூலம் : 39

**"ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்!" என்னுமிடத்தில் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்."**

***1) பிரபந்ந பரித்திராணம் என்னும் கிரந்தத்தில் இரட்சகன் ஈசுவரனே என்பதைப் பற்றிக் கூறியுள்ள கருத்தை விளக்குக.***

*எக்காலத்திலும் கைவிடாமல் கண்ணும் கருத்துமாய் நோக்கிக் கொண்டுபோகும் பகவான் ஒருவனே உயிர்களைக் காக்கும் வன்மை வாய்ந்தவன்.*

*முற்பிறவியினால் ஏற்பட்ட தொடர்பினால் அமைந்த உறவினரும், பெற்றெடுத்து வளர்த்த பெற்றோரும், மற்றைய தேவர்களும் உயிர்களைக் காக்கும் ஆற்றல் அற்றவர்கள்.*

*எனவே, ஈசுவரன் ஒருவனே உயிர்களைக்காக்கும் உண்மையான இரட்சகன் என்பதைப் பிரபந்த பரித்திராணம் என்னும் கிரந்தம் விளக்குகிறது.*

## மூலம் : 40

**"ரக்ஷிக்கும் போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே, இதில் ஸ்ரீஸம்பந்தமும் அநுஸந்தேயம்".**

***1) பகவான் தனித்து நின்றே உயிர்களைக் காத்தல் சிறப்புடையதா?***

*சிறப்புடையதன்று.*

*பகவான் தனித்து நின்று உயிர்களைக் காத்தலைக் காட்டிலும், பிராட்டியுடன் சேரந்திருந்து உயிர்களைக் காப்பதே சிறப்புடையதாகும்.*

*ஏனெனின், கருணையே வடிவானவர் பிராட்டி! எனவே காக்கும் கடவுளான எம்பெருமான் பிராட்டியுடன் சேர்ந்திருக்கும் நிலையில் காத்தல் தொழிலை மேற்கொள்வதே சிறப்புடையது.*

*எனவே, எம்பெருமானைக் குறிக்கும் அகாரத்தில் பிராட்டியாரின் தொடர்பும் உள்ளது என்பது தெளிவாகும்.*

***2) பிராட்டியைப் பிரிந்துள்ள நிலையில் எம்பெருமானின் காக்கும் திறன் மாறுபடுமா?***

*மாறுபடும்.*

*எம்பெருமான் இராமபிரானாக அவதாரம் செய்தார். அப்போது சீதாபிராட்டியைப் பிரியவேண்டிய நிலை*

ஏற்பட்டது. அதனால்தான் அறநெறியிலிருந்து வழுவித் தன்னை வதம் செய்ததாக வாலி கூறுகிறான்.

"கோவியல் தருமம் உங்கள்
குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத் தெழுத வொண்ணா உருவத்தாய்
உடைமை யன்றோ?
ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்றை திகைத்தனை போலும்
செய்கை"

தேவியை (சீதாபிராட்டியை)ப் பிரிந்த பிறகுதான் இராமபிரான் தான் செய்யும் செயல் சரியா தவறா எனத்தெரியாமல் திகைத்ததாக வாலி இராமபிரான் மீது குற்றம் சுமத்துகிறான்.

எனவே, பிராட்டியுடன் கூடியிருக்கும் போது காப்பவனாகவும், பிராட்டியைப் பிரிந்துள்ள நிலையில் காக்கும் திறனிலிருந்து பெருமான் மாறுபடுவதாகவும் இதிகாசம் இயம்புகிறது என்பதனை அறிகிறோம்.

**3) பகவான் அடியவரைக் காப்பாற்றாமல் புறக்கணிப்பது எப்போது? அப்போது பிராட்டியாரின் பங்கு என்ன?**

அடியவரின் அளவற்ற குற்றங்களைக் காணும் போதோ, தன்னுடைய சுயமான எண்ணத்தினாலோ (சுவாதந்தரியத்தினாலோ) அவர்களைக் காவாது புறக்கணித்தலும் கூடும்.

அப்போது, அடியவரிடம் அருள் காட்டுமாறு எம்பெருமானிடம் அன்புடன் எடுத்துக்கூறிப் புருஷகாரம் செய்ய எம்பெருமானின் அருகில் பிராட்டியார் இருந்தே ஆகவேண்டும். அப்போதுதான் காத்தல் தொழிலைப் பகவான் தடையின்றி மேற்கொள்ள முடியும்.

*4) புருஷகாரம் என்றால் என்ன?*

*ஒருவரை மற்றொருவர் ஏற்றுக்கொள்ளுமாறு செய்யும் செயலே புருஷகாரம் எனப்படும்.*

*அடியவரின் குற்றங்களைக் கண்டு பகவான் சீறிச் சினந்து உதறித்தள்ளுவதும் உண்டு. அப்போது அடியவர் மீதுள்ள கோபத்தைப் போக்கி அருளுமாறு ஆண்டவனிடம் வேண்டி அவர்களை அன்போடு அங்கீகரிக்குமாறு உதவுபவர் பிராட்டியாரே!*

*எனவே பிராட்டியாருக்குப் புருஷகார பூதை என்னும் திருநாமமும் உண்டு.*

***5) இந்த மூலத்தில் 'ஸ்ரீஸம்பந்தமும்' என்னும் தொடரில் 'ஸ்ரீ' என்பதனை விளக்குக.***

*'ஸ்ரீ' என்னும் பதம் 'ச்ரயத இதி ஸ்ரீ' என்று ஆகும்போது பிராட்டியார் எம்பெருமானை எப்போதும் சேவித்துக் கொண்டு (ஆச்ரயித்துக்கொண்டு) அவனை விட்டுப் பிரியாமல் இருக்கிறாள் என்னும் பொருளைத் தரும்.*

*'ச்ரியத இதி ஸ்ரீ' என்று பொருள் கொள்ளும் போது அடியவரால் எப்போதும் பிராட்டியார் சேவிக்கப்படுபவராய் (ஆச்ரயிக்கப்படுபவராய்) இருக்கிறார் என்றும் பொருள்தரும்.*

*இதன்றால், எம்பெருமானைக் குறிக்கும் அகாரத்திலும் இவர் என்றும் அமைந்திருக்கிறார் என்பதனையும் அறியலாம்.*

## மூலம் : 41

**"அத்ர பகவத் ஸேநாபதிமிச்ரர் வாக்யம்:- "அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது."**

**1) அகாரத்தில் பிராட்டியாரின் தொடர்பு உண்டு என்பதனைச் சான்றோர் வாக்கால் எவ்வாறு சான்று காட்டி நிறுவுகிறார்?**

ஸ்ரீஸேநாபதி ஜீயர் என்பவர் பண்டைக்காலத்தில் வாழ்ந்து வந்த ஸ்வாமிகள். அந்த ஸ்வாமிகளின் கூற்றை இம்மூலத்தில் குறிப்பிடுகிறார் பிள்ளை உலகாசிரியர்.

'அகல கில்லேன் இறையும்' எனச் சொல்லிக்கொண்டு ஓரிமைப்பொழுதும் ஈசுவரன் மார்பை விட்டுப் பிரியாமல் வாழ்கின்ற பிராட்டியார், அவன் மார்பை விட்டுப் பிரியும் போதல்லவா, அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்தை விட்டுப் பிரிவது?" என்று கூறும் ஞானாதிகரான ஸ்ரீஸேநாபதி ஜீயரின் அருள் வாக்கைச் சான்றாகக் காட்டுகிறார் ஆசிரியர்.

**2) "அகல கில்லேன்" என்று தொடங்கும் ஆழ்வார் பாசுரத்தைக் காட்டுக.**

"அகல கில்லேன் இறையும்என்(று) அலர்மேல்மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்க ணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன் றில்லா அடியேன்உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!"

இப்பாசுரம் நம்மாழ்வாரின் பத்தாம் திருவாய்மொழியில் காணப்படும் பத்தாவது பாடல்.

எம்பெருமானை விட்டு ஒரு சிறிது நேரமும் பிரிந்திராமல் சேர்ந்தே இருப்பவர் பிராட்டி என்பதனை, "அகலகில்லேன்

இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா!" என்னும் தொடர் நன்கு தெளிவாக்குகிறது.

எம்பெருமான் தோன்றும் இடங்களில் எல்லாம் பிராட்டியும் தோன்றுதல் உண்மையாதலால், எம்பெருமான் திருமார்பில் ஸம்பந்தம் போன்றே எம்பெருமானைக் குறிக்கும் இவ்வகாரத்திலும் பிராட்டியின் சேர்க்கை என்றும் உண்டு என்பதனை அறிகிறோம்.

## மூலம் : 42

**"பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப் போலே, ப்ரதம சரம பதங்களை விடாதேயிருக்குமிருப்பு."**

*1) எம்பெருமான் தோன்றும் இடங்களில் எல்லாம் பிராட்டியாரும் தோன்றுவார் என்பதனை ஆசிரியர் எங்ஙனம் நிலை நாட்டுகிறார்?*

பெருமானைக் குறிப்பது அகாரம். ஆன்மாக்களைக் குறிப்பது மகாரம். பெருமானுக்கும் ஆன்மாவுக்கும் இடையில் உள்ள பிராட்டியைக் குறிப்பது உகாரம்.

அகாரம், மகாரம் அகிய இவ்விரண்டிலும் பிராட்டியாருக்கு இடையீடு இல்லாத தொடர்பு உண்டு என்கிறார் ஆசிரியர்.

இதற்கொரு உதாரணமும் காட்டுகிறார்.

மனைவியானவள் தன் கணவனை மகிழ்வித்தற் பொருட்டு அவன் படுக்கையைப் பற்றி நிற்பாள். தன் குழந்தையைக் காப்பதற்காக அம் மகவின் தொட்டிலையும் பற்றி நிற்பாள். மனைவி என்னும் நிலையில் கட்டிலையும், தாய் என்னும் நிலையில் தொட்டிலையும் பற்றி நிற்பது உத்தமப் பெண்டிரின் நல்லியல்பு.

இதுபோலவே பிராட்டியாரும் இன்பம் தருதல் பொருட்டுத் தம்பதியாகிய பெருமானைக் குறிக்கும் பதமான அகாரத்தையும், காத்தல் பொருட்டு அடியவரைக் குறிக்கும் பதமான மகாரத்தையும் விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறார்.

இதில் பிரதம பதம் அகாரம். சரம பதம் (இறுதிப்பதம்) மகாரம். இடைப்பதம் உகாரம்.

பெருமானையும் ஆன்மாக்களையும் பிராட்டியார் பற்றி நிற்கும்பாங்கினை ஆசிரியர் இவ்வுவமை மூலம் நன்கு விளக்குகிறார்.

**2) பெருமானைக் குறிக்காத மகாரத்தில் பிராட்டியாரும் தோன்றுவதை உதாரணமாய்க் கூறியுள்ளது எங்ஙனம் பொருந்தும்?**

"எம்பெருமான் தோன்றும் இடங்களில் எல்லாம் பிராட்டியார் தோன்றுவது உண்மை. ஆதலால் இவருக்கு அடியவர் கூட்டத்தில் தொடர்பு இல்லை. பெருமானிடத்திலேயே பிராட்டியாருக்குத் தொடர் புள்ளது" என்று சிலர் கூறுகின்றனர்.

இக்கருத்தைப் பிள்ளை உலகாசிரியர் மறுக்கிறார். பிராட்டியாருக்கு அடியவர் கூட்டத்திலேயே தொடர்பு உள்ளது என்பதைத் தெரிவிப்பதற்காகவே பிராட்டியார் மகரத்தில் பொருந்தியிருப்பதை ஆசிரியர் இங்கு வெளிப்படுத்துகிறார். இதனால் மகாரமே தன் ஒலிக்கும் தன்மையால் பிராட்டியாரைத் தெரிவிக்கிறது என்றும், அகரமே பிராட்டியாரைக் கூறவில்லை என்பதனையும் அறிகிறோம்.

**3) பெருமானுக்கு அடிமையாய் உள்ளவை பிராட்டிக்கும் அப்படியே அடிமையாய் உள்ளன என்று கூறுவதால் வரும் குறை யாது?**

பெருமானுக்கு 'ஈசுவரன்' என்னும் திருநாமம் உள்ளது போலவே, பிராட்டியாருக்கும் 'ஈசுவரி' என்னும் திருநாமம் உள்ளது. எனவே, பெருமானுக்குச் சேதனாசேதனங்கள் அடிமைப்பட்டிருப்பதைப் போலவே, பிராட்டியாருக்கும் அவை அடிமைப்பட்டிருக்கின்றன என்று சொல்வதில் குறை உள்ளது.

எவ்வாறெனில், பிராட்டியார் பெருமானுக்குப் பத்தினியாய் இருப்பதாலேயே பெருமானுக்குரியன யாவும் பிராட்டிக்கும் அடிமைப் பட்டிருக்கின்றன. எனவே சேதனா சேதனங்களுக்குப் பிராட்டியார் நேரடியாகத் தலைமைத் தன்மை ஏற்க முடியாது.

"பிராட்டியார் விஷ்ணு பத்தினியாய் இருத்தலின், அவர் இந்த உலகிற்கு ஈசுவரியாவார்" என்று வேதமும் கூறுவது இப்படியே!

**4) பிராட்டியார் உலகமாதா என்று வணங்கப்படும் நிலையில் அவருக்கு 'உயிருள்ளன, உயிரில்லாதன' யாவும் அடிமைப் பட்டிருக்கிறது என்று சொல்வதிலும், பிராட்டியார் தலைவியாக இருக்கிறார் என்று சொல்வதிலும் உள்ள தடை யாது?**

இது உண்மைதான். இதிலும் ஒரு தடை இருக்கத்தான் செய்கிறது குடும்பத்தாருக்குத் தந்தை தலைவனாக உள்ளான். அதுபோலவே தாய் என்னும் உறவினால் தலைவியும் முதன்மை பெற்றவளே!

ஆயினும், தலைவன் தன் விருப்பம் போல் எதையும் செய்யும் ஆற்றலும் உரிமையும், உடையவன், தாய்க்கு



அப்படியில்லை. தலைவன் எண்ணியவாறுதான் தலைவி செயல்பட முடியும். தன் விருப்பப்படிச் செயல்படும் தலைவி உத்தமபத்தினி என்று பிறரால் பாராட்டப்படமாட்டாள்.

ஈசுவரனும் ஈசுவரியும் உலக மக்களுக்குத் தந்தையாகவும், தாயாகவும் இருந்தாலும் ஈசுவரனுடைய குறிப்பறிந்தே உலக மாதா எதையும் செய்தல் வேண்டும். இதனால் ஈசுவரிக்கு முதன்மை இல்லை என்பது தெளிவாகிறது.

எனவே, பிராட்டியினுடைய மாத்ருத்வம் (தாயின்நிலை) பிரதானம் (முதன்மை) இல்லாதது என்றும், பெருமாளின் பித்ருத்வமே (தந்தையின் நிலை) முதன்மையானதென்றும் உணரலாம்.

**5) பெருமாள், பிராட்டி ஆகிய இருவரையும் தலைவர்களாக ஏற்றுக் கொள்வதால் வரும் குறையாது?**

ஓரிடத்திற்குத் தலைவர் ஒருவர்தான் இருக்கமுடியும். தலைவர் இருவர் என்பது எங்கும் காணாத ஒன்று. அப்படியே ஒன்றுக்கு மேற்பட்ட தலைவர்கள் இருந்தாலும் அவர்களுள் ஒருவர்தான் முதன்மை பெற்றிருக்க முடியும். மற்றவர் அவரைவிடச் சிறிது குறையுடையவராகத்தான் இருக்கமுடியும்.

மேலும் சித்து அசித்து முதலானவற்றுக்குத் தலைவராக உள்ளவர் அவற்றைப் படைக்கவும் காக்கவும் ஆற்றல் பெற்றவராக இருத்தல் வேண்டும். இச்செயல்களுக்கு அனுக்கிரகம் (அருளல்) நிக்கிரகம் (அழித்தல்) ஆகிய இரண்டும் தேவை.

அருளல், தண்டித்தல் ஆகிய இரண்டு ஆற்றல்களையும் உடையவர் பெருமான் ஒருவரே!

*பிராட்டியாரோ தண்டித்தல் என்பதனையே அறியாதவர்; அருளே வடிவாக உடையவர்.*

*எனவே பெருமான் மட்டுமே தலைவராக இருக்கமுடியும் என்பதும், பெருமானும் பிராட்டியுமாகிய இருவரும் தலைவர்களாக இருத்தல் முடியாது என்பதும் உணரப்படும்.*

## மூலம் : 43

**"ஸ்ரீநந்த கோபரையும் க்ருஷ்ணரையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போலே".**

**1) *பிராட்டியார் செயல்படுவதனை ஆசிரியர் எங்ஙனம் உவமிக்கிறார்?***

*மனைவி என்னும் நிலையில் யசோதைப் பிராட்டியார் தம் கணவரான நந்தகோபரை இன்புறுத்தும் செய்ல்களில் ஈடுபடுகிறார்.*

*தாயார் என்னும் நிலையில் தம் மகனான கண்ண பிரானைக் காத்தலுக்குரிய செயல்களில் ஈடுபடுகிறார்.*

*அதுபோலவே, பிராட்டியாரும் செயல்படுகிறார் என்று விளக்குகிறார். அகாரப்பொருளான ஈசுவரனுக்கும் மகாரப் பொருளான சேதனனுக்கும் இடையில் இருந்து கொண்டு பிராட்டியார் இருவரையும் பற்றி நின்று செயல்படுகிறார் என்று ஒப்பிட்டுக் கூறுகிறார்.*

**2) *இக்கருத்தைக் கவினுற விளக்கும் ஆண்டாள் பாசுரத்தைக் காட்டுக.***

*"அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்*
*எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்!.*
*கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே!*

எம்பெரு மாட்டி! யசோதா! அறிவுறாய்!
அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்காது எழுந்திராய்!
செம்பொன் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்!"

(திருப்பாவை 17)

நந்தகோபர் முதலிலும், யசோதை இடையிலும், கண்ணபெருமான் கடைசியிலும் துயின்று கொண்டிருப்ப தாக இப்பாசுரம் வரிசைப்படுத்துகிறது.

நந்தகோபருக்கும் கண்ணனுக்கும் இடையில் யசோதை செயல்படுதல் (கண்வளருதல்) போல, பெருமானுக்கும் சேதனனுக்கும் இடையில் இருந்து கொண்டு பிராட்டியார் செயல்படுகிறார் என்னும் கருத்து இப்பாடலால் தேறி நிற்றலை அறியலாம்.

## மூலம் : 44

**"ஒருவன் அடிமை கொள்ளும்போது க்ருஹிணிக் கென்றன்றே ஆவணையோலையெழுதுவது? ஆகிலும், பணி செய்வது க்ருஹிணிக்கிறே, அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி."**

1) பிராட்டியாருக்குச் சேதனன் அடிமை (சேஷம்) எனக்கொள்ளுதல் எங்ஙனம் பொருந்தும்?

அகாரத்தில், சேதனன் பெருமானுக்குச் சேஷபூதன் (அடியவன்) என்று சொல்லப்படுகிறது. ஆனால், பிராட்டிக்குச் சேதனன் அடியவன் என்று சொல்லப்படவில்லை. ஆயினும், பிராட்டியாருக்கும் சேதனன் அடியவன் என்பது பொருந்தும்.

விலை ஒலை எழுதிக் கொண்டு ஒருவனை அடிமையாக்கிக் கொள்ளும் போது, வீட்டுக்குரிய தலைவன் அந்த அடிமை தனக்குத்தான் அடிமை என்று எழுதி வாங்கிக் கொள்வான். அவ்வீட்டுத் தலைவியாகிய தன் மனைவிக்கும் அவன் அடிமை என்று குறிப்பிடமாட்டான்.

ஆனாலும், அந்த அடிமை பணிவிடை செய்வது பெரும்பாலும் அந்த வீட்டுத் தலைவியின் மனமகிழ்ச்சிக்கு ஏற்பவே அமையும். இது உலக அனுபவம்.

எனவே பதிக்குச் சேஷமாயிருக்கும் யாவும் பத்தினிக்கும் சேஷமே என்பது நியாயமே ஆகும்.

இங்ஙனம் பதிபத்தினி நியாயப்படிப் பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கும் நாம் பிராட்டிக்கும் அடிமையாயிருந்து தொண்டு செய்தல் வேண்டும் என்பது பொருத்தமான கருத்தேயாகும்.

எனவே விஷ்ணுவின் பத்தினியார் என்னும் தன்மையில் நாம் பிராட்டிக்கும் அடிமையே என்பது தெளிவாகிறது.

## மூலம் : 45

**"ஆகப் பிரித்து நிலையில்லை"**

***1) இதுவரை கூறப்பட்டவற்றால் அறியலாகும் உண்மை யாது?***

இதுவரை கூறப்பட்டவற்றால் பெருமானும் பிராட்டியும் என்றும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாமல் சேர்ந்தே இருக்கின்றனர் என்னும் உண்மையை அறிய முடிகிறது.

## மூலம் : 46

**"ப்ரபையையும் ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே".**

1) **பெருமானும் பிராட்டியும் சேர்ந்தே இருக்கின்றனர் என்பதனை விளக்கும் உவமைகளை விவரி.**

பெருமானும் பிராட்டியும் சேர்ந்தே உள்ளனர் என்பதற்கு இரண்டு உவமைகள் காட்டப்பட்டுள்ளன.

ஒளியும், சூரியனும் சேர்ந்தே இருத்தல் போலவும், மணமும் மலரும் சேர்ந்தே இருத்தல் போலவும் பெருமானும் பிராட்டியும் ஒன்றியே உள்ளனர் என்று உவமிக்கிறார்.

சூரியனிலிருந்து ஒளியைப் பிரிக்க முடியாது. மலரிலிருந்து மணத்தைப் பிரித்தல் இயலாது. இவற்றைப்போலவே பெருமானுக்கும் பிராட்டிக்கும் பிரித்து நிலை கிடையாது என்பது தெளிவு.

## மூலம் : 47

**"ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது"**

1) **பெருமான் பிராட்டி ஆகிய இவ்விருவருடைய சேர்க்கையையே சேதனன் விரும்பிப் பற்ற வேண்டும் என்பதை விளக்குக.**

இதுகாறும் கூறிய காரணங்களால் பெருமான் பிராட்டி ஆகிய இருவரையும் சேர்த்தே சேதனன் பற்றுதல் வேண்டும் என்பதனை அறிகிறோம். பிராட்டியையோ பெருமானையோ தனித்தனியே பற்றுதல் கூடாது என்பது தெளிவாகிறது. சேதனன் தன் அறியாமையினால் இவ்விருவருள் யாரேனும் ஒருவரை மட்டுமே பற்றுவானேயானால் அவன் தீமையே அடைவான் என்பது திண்ணம்.

சூர்ப்பநகை, பெருமானை மட்டுமே பற்ற எண்ணினாள். இராவணன் பிராட்டியை மட்டுமே பற்ற எண்ணினான்.

இவ்வாறு தனித்தனியே பற்ற நினைத்ததால் இவ்விருவரும் மாண்ட கதை நாடே அறியும்.

இவ்விருவரையும் ஒருசேரப் பற்றிய விபீடணன் நல்வாழ்வு பெற்று உயர்ந்தானன்றோ!

எனவே, இவ்விருவரின் சேர்த்தியே சேதனனுக்கு வேண்டற் பாலதாம்.

**2) முப்பத்திரண்டாம் சூத்திரம் முதல் நாற்பத்தேழாம் சூத்திரம் வரையும் உணர்த்துகின்ற செய்திகளைத் தொகுத்து வரைக.**

திருமந்திரத்துக்கு முதல் பதம் பிரணவம். இப்பிரணவத்தில் அ, உ, ம என்னும் மூன்று எழுத்துகள் அமைந்துள்ளன. இம்மூன்று எழுத்துகளும் மூன்று வேதங்களிலிருந்து எடுக்கப்பட்டன. இப்பிரணவம் வேதங்களின் சாரம். இவ்வெழுத்துகளுள் அகரம் என்பது அனைத்துலகங்களையும் காத்தருளும் எம்பெருமானைச் சொல்கிறது.

காத்தல் என்பது ஆன்மாவுக்கு விரோதிகளாய் உள்ளவற்றைப் போக்கி, ஆன்மா விரும்பும் பொருள்களை அளித்து உதவுதலேயாம்; விரோதமானவற்றைப் போக்குதல், விருப்பமானவற்றை அளித்தல் ஆகிய இரண்டும் சேதனன் நின்ற நிலைக்கு ஏற்பவே அமையும்;

சம்சாரிகள், முமுட்சுகள், முத்தர், நித்தியர் ஆகிய இவர்கட்கு விரோதிகளாகவும், விருப்பமானவையாகவும் உள்ளவை எவை என்பது;

பெருமானைத் தவிர மற்றவர் காப்பாற்றுவதற்கு உரியரல்லர் என்பது பிரபந்த பரித்ராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது; காத்தருளும் போது பிராட்டியின்

*சந்நிதியும் வேண்டற்பாலது; எனவே இவ்வகாரத்தில் பிராட்டியின் தொடர்பும் உள்ளது; பிராட்டியார் பகவானை விட்டுப் பிரிந்தால்தான் இவ்வகாரத்தையும் விட்டுப் பிரிவார் என்பது ஸேநாபதி மிச்ரர் கருத்தாகும்;*

*கணவனுடைய கட்டிலையும், பிள்ளையினுடைய தொட்டிலையும் விடாத தாயைப்போன்று பிராட்டியார் பகவானையும் சேதனனையும் விடாமல் பற்றியிருக்கிறார் என்பதற்கு யசோதைப் பிராட்டியார் தக்க சான்றாகிறார்;*

*ஈசுவரனுக்கு அடிமைப்பட்ட நாம் பிராட்டியாருக்கும் அடிமையாயிருத்தல், வீட்டுத்தலைவனுக்குப் பணி புரிய வந்தவன் அவ்வீட்டுத் தலைவிக்கும் பணிபுரிதல் போன்றது;*

*ஆதலின் பகவானிடத்திலிருந்து பிராட்டியைப் பிரிக்க இயலாது; சூரியனும் ஒளியும் மலரும் மணமும் போன்று பெருமானும் பிராட்டியும் சேர்ந்தே உள்ளனர் இச்சேர்த்தியே நம்மால் விரும்பப்படுவது எனப்படும் செய்திகள் 32 முதல் 47 வரை உள்ள சூத்திரங்களில் காணப்படும் கருத்துகளாகும்.*

## மூலம் : 48

**"இதிலே சதுர்த்தி ஏறிக்கழியும்".**

1) *அகாரத்தில் உள்ள நான்காம் வேற்றுமையுருபின் நிலை யாது?*

*அகாரத்தில் உள்ள நான்காம் வேற்றுமையுருபு புணர்ந்து கெட்டிருக்கிறது.*

## மூலம் : 49

**"சதுர்த்தி ஏறினபடி என்னென்னில்".**

## மூலம் : 50

"நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே"

1) *வேற்றுமைகள் பல இருக்க, இவ்வகாரத்தில் நான்காம் வேற்றுமையுருபு புணர்ந்து கெட்டதற்குக் காரணம் யாது?*

*'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையை (சதுர்த்தியை) இறுதியில் பெற்றுள்ள 'நாராயணாய' (நாராயண + ஆய) என்னும் பதத்தின் சுருக்கமே அகாரமாம். எனவே, நாராயண பதத்திலுள்ள நான்காம் வேற்றுமையுருபு அகாரத்திலும் அடங்கியிருக்கிறதென்று ஊகித்தல் வேண்டும்.*

*இவ்வாறு யூகிக்கவில்லையானால், நாராயண பதத்தின் சுருக்கம் அகாரம் என்பது பொருந்தாது.*

## மூலம் : 51

"இத்தால் ஈச்வரனுக்கு சேஷமென்கிறது."

1) *இந்த வேற்றுமையால் பெறப்படும் பொருள் யாது?*

*இந்த வேற்றுமையால் சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் என்பது பெறப்படுகிறது.*

2) *பெருமானுக்குச் சேதனன் எம்முறையில் சேஷபூதனா யிருக்கிறான்?*

*பொன்னின் நிலையில் சேதனன் பெருமானுக்கு அடியவனாய் உள்ளான். பொன்னை உடையவன் அதனை எவ்வாறெல்லாம் உருக்கியும் தட்டியும் அணிகலன் களாகவோ வேறுவிதமாகவோ செய்து கொண்டாலும், அவன் விருப்பப்படியே அது தன்னை அவனுக்கே உரியதாக்கிக் கொள்கிறது.*

*அதுபோலவே, அடியவனும் பெருமானின் விருப்பப்படியே தன்னை நடத்திச் செல்லத் தன்னைப் பெருமானுக்கே அர்ப்பணித்துக் கொள்கிறான்.*

*இங்ஙனம் இருத்தலே சேதனனுடைய சொரூபமாகும்.*

*3) இதற்குச் சான்று தருக.*

*பாட்டன் வீடு சென்று அயோத்தி திரும்பிய பரதனிடம் முடிசூட்டிக்கொள்ளுமாறு குலகுரு வசிட்டர் கூறுகிறார். அதற்குப் பரதன் பதில் கூறுகிறான். "ஆசார்யரே! அரசாட்சி எவ்வாறு இராமபிரானுக்கு உடைமைப்பொருளோ, அவ்வாறே, நானும் அவருக்கு உடைமைப் பொருளே! எனவே நான் எவ்வாறு முடிசூட்டிக்கொண்டு அரசாள முடியும்? அரசுதான் என்னை ஆளட்டுமே" என்று பரதன் பதில் கூறினான்.*

*இராமபிரானைத் தலைவனாக வைத்துத் தன்னை உயிரற்ற பொருளாகக் கருதிக் கூறும் பரதனின் கூற்றே நல்ல சான்றாகும்.*

## மூலம் : 52

**"சேஷத்வம் துக்க ரூபமாகவன்றோ நாட்டிற்காண்கிற தென்னில்".**

## மூலம் : 53

**"அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக் குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே"**

## மூலம் : 54

**"அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது."**

## மூலம் : 55

"சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்."

***1) அடிமைத் தொழில் துக்கரூபமாகவன்றோ நாட்டில் காணப்படுகிறது?***

*அடிமைத்தொழில் துக்கரூபமானது என்று கருதுவதால்தான் அப்படித் தோன்றுகிறது. அனைவரிடத்திலும் துக்கம் தருவதாக அடிமைத் தொழில் இருப்பதில்லை.*

*விருப்பமில்லாமல் செய்யும் போதுதான் அடிமைத் தொழில் துக்கம் தருவதாக உள்ளது. விருப்பத்துடன் செய்யும்போது அதுவே பேரின்பமாகத் தோன்றுகிறது.*

*பகவானுக்குச் செய்யும் அடிமைத் தொழில் சுகரூபமாகவே காணப்படும்.*

*தான் பெண்பால் ஒருத்தியிடம் கொண்ட காதல் மிகுதியால் காளிதாசர் தண்ணீர் முகந்து தருதல் முதலான தொண்டுகள் பலவும் உவப்புடன் செய்தார் என்று வரலாறும் கூறுகிறதன்றோ!*

***2) அவ்வாறு கூறப்படுமானால், அடிமைத்தொழில் என்பது துக்கம் தரும் செயல் இல்லை என்று கூறமுடியுமா?***

*உலக நடைமுறையில் அடிமைத்தொழில் என்பது துக்கம் தரும் செயலே! பிறருக்கு அடிமையாய் இருந்து ஏவல் செய்வது என்பது துன்பமானதே என்று நீதிநூல்களும் கூறுகின்றன.*

*மனு, தருமர் முதலான பெரியோர்களும் அடிமை செய்தலைக் கடைப்பட்ட தொழில் என்றே கூறியுள்ளனர். எனவே, உலக நடைமுறையைப் பொருத்தவரையில் அடிமைத் தொழில் துக்கம் தரும் செயலே!*

ஆனால், துன்பம் கலவாத பேரின்பத்தை அளிக்கும் முத்தி நிலையில் இவ்வடிமைத் தொழில் அடியவனுக்கு ஆனந்தத்தையே அளிக்கிறது.

**3) ஆனந்தத்தை அளிக்கும் பொருளில் அடிமைத்தொழில் சுகரூபமாகவே காணப்படும் என்பதனை விளக்குக.**

'ஈசுவரன் நிர்க்குணன்' என்று வேதாந்தம் கூறுகிறது. நிர்க்குணன் என்பதற்குப் பொருள் 'குணங்களில்லாதவன்' என்பது.

குணங்களற்ற பொருளில் மனக்கவர்ச்சி உண்டாகுமா? மனக்கவர்ச்சி இல்லாத இடத்தில் மகிழ்ச்சி எவ்வாறு ஏற்படும்? மகிழ்ச்சியை உண்டாக்காத போது எவ்வாறு அடிமைத்தொழில் செய்ய இயலும்? என்பன போன்ற வினாக்கள் எழுதல் இயல்பே!

நிர்க்குணன் என்பதற்குக் குணங்களே இல்லாதவன் என்று பொருள் கொண்டால் இத்தகைய குழப்பங்கள் தோன்றுதல் இயல்பே! பொருந்தாத குணங்கள் இல்லாதவன் என்பதுதான் இதற்குப் பொருத்தமான பொருள்.

பகவான் அனந்த கோடி கல்யாண குணங்களை உடையவன். பகவானின் குணவழகில் ஈடுபடும் சேதனன் தன் மனத்தைப் பகவானிடம் பறிகொடுத்து நிற்கிறான். அப்போது அடியவனுக்குப் பகவத் சேஷம் (இறையடிமை) சுகரூபமாகவன்றோ காணப்படும்!

**4) இதற்கு உலக நடைமுறையிலிருந்து சான்று காட்டுக.**

ஊழியன் ஒருவன் தன் முதலாளிக்கு அடிமைத் தொழில் செய்யும்போது அதனைப் பெரும் துக்கமாகக் கருதுகிறான்.

அவனே தன் மனைவி மக்களுக்கு அடிமைத் தொழில் செய்யும்போது மகிழ்ச்சியே கொள்கிறான்.

துஷ்யந்தன் சகுந்தலையிடம் தான் கொண்ட காதற் பெருக்கால், "உன் கால்களை என் மடிமீது வைத்துக்கொண்டு வருடி விடட்டுமா? உன் களைப்புதீர ஆலவட்டம் வீசட்டுமா?" என்றெல்லாம் அன்பொழுகக் கேட்டானாம்.

அயல் என்னும் போது துக்கமும், உறவு என்னும் போது சுகமும் தருதலையும் உலக நடைமுறையிலே காண்கிறோம்.

**5) அகாரத்தில் கல்யாண குணங்கள் சொல்லப்பட்டுள்ளனவா?**

அகாரத்தில், கல்யாண குணங்களை உடையவன் பகவான் என்பது அர்த்த பலத்தால் கிடைக்கிறது.

மண்பாண்டம் செய்யும் குயவனுக்கு அதற்கேற்ற அறிவும் ஆற்றலும் வேண்டும். ஆளும் மன்னனுக்குக் கருணை, அன்பு முதலான குணங்கள் வேண்டும்.

அதுபோலவே காரணப்பொருளாகவும், காக்கும் பொருளாகவும் உள்ள பகவானைச் சொல்லும் அகாரத்தில் 'பகவான் குணங்களையுடையவர்' என்பதனை அர்த்த பலத்தால் அறியமுடிகிறது.

**6) சேஷத்துவமே ஆன்மாவுக்கு ஸ்வரூபம் என்பது யாங்ஙனம்?**

ஒரு குடியில் தோன்றிய ஒருவன் தான் பிறந்த குடியினை விட்டு வெறொரு குடியில் சென்று வாழ்ந்தாலும், அவன் பிறந்த குடியின் குணம் அவனை விட்டு நீங்காது.

அதுபோலவே, இவ்வுலகில் வாழும்போதும், இறைவனுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆன்மாவானது

பரமபதம் சென்று இன்புற்றாலும் அங்கும் இவ்வடிமைத் தொழில் செய்யவே விரும்பும்.

எனவே சேஷத்துவமே (அடிமையாயிருத்தல்) ஆன்மாவுக்குச் சொரூபமாயுள்ளது என்பதனை அறியலாம்.

**7) அடிமை செய்தலே ஆன்ம சொரூபம் என்பதனை ஆழ்வார் கூற்றால் நிறுவுக.**

"ஒழிவில் காலமெல் லாம்உட னாய்மன்னி
வழுவி லாஅடி மைசெய்ய வேண்டும் நாம்
தெழிகு ரல்அரு வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதிஎந் தைதந்தை தந்தைக்கே!"

அடிமை செய்தலே ஆன்ம சொரூபம் என்பதனை நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் அற்புதமாக அருளிச் செய்கிறார்.

**8) 52 முதல் 55 ஆம் வரையுள்ள சூத்திரங்களின் கருத்துகளைக் கூறுக.**

உலக நடைமுறையில் அடிமைத் தொழில் துக்கரூப மாகவே உள்ளது. ஆயினும், அடிமைத் தொழில் அனைத்துமே, துக்க ரூபமாக இருக்கும் என்னும் நியதியில்லை. தனக்கு விருப்பமானவற்றிடம் செய்யும் அடிமைத்தொழில் சுகரூபமாகவே காணப்படுகிறது. காப்பவன் கடவுள் என்பதைச் சொல்லும் அகாரத்திலே, காத்தல் தொழிலுக்கு இன்றியமையாத திருக்குணங்களும் அர்த்த பலத்தினால் கிடைப்பதனால் குணங்களுக்கு வசப்பட்டே அடிமைத் தொழிலும் செய்யப்படுகிறது. எனவே, அடிமைத்தொழிலே ஆன்மாவுக்குச் சொரூபமாயுள்ளது என்று பிள்ளை உலகாசிரியர் சேஷத்துவம் பற்றிய செய்திகளை இவ்வைந்து சூத்திரங்களில் உறுதிபடத் தெரிவிக்கிறார்.

## மூலம் : 56

"சேஷத்வமில்லாத போது ஸ்வரூபமில்லை."

1) *இம்மூலத்தில் 'இல்லாத போது' என்று ஒரு தொடர் காணப்படுவதால், 'உள்ளபோது' என்பதும் ஒன்று உண்டு என்பது பெறப்படுமன்றோ?*

ஆம், பெறப்படும்.

சேஷத்துவம் உள்ள போதுதான் ஆன்மாவுக்குச் சொரூபம் உள்ளது என்பதை 55ஆம் சூத்திரத்தில் குறிப்பிட்டார்.

இச்சூத்திரத்தில் சேஷத்துவமில்லாதபோது ஆன்மாவுக்குச் சொரூபமில்லை என்று தெளிவாக்குகிறார்.

ஆன்மாவுக்கு இயல்பாகவே ஞானத்தன்மை, ஆனந்தத்தன்மை ஆகியவையும் உள்ளன. ஆயினும் அவை ஆன்மாவுக்குச் சொரூபமாகா. அடிமைத்தொழில் செய்யும் போது மட்டுமே ஆன்மாவுக்குச் சொரூபம் உள்ளதாகிறது எனத் தெளிவுபடுத்துகிறார்.

தான் அடிமை என்னும் ஞானமும், இறைவனுக்குச் செய்யும் தொண்டினால் ஏற்படும் ஆனந்தமும் ஆன்மாவுக்கு இயல்பாக அமைந்து கைங்கர்யம் செய்யும்போதுதான் ஆன்மாவுக்குச் சொரூபம் உளதாகிறது.

'சேஷத்துவம் இல்லாதபோது' என்னும் தொடர் 'சேஷத்வஞானம் இல்லாத போது' என்னும் பொருளைத் தரும்.

இரணியன், சிசுபாலன் முதலானோர் தாங்கள் சுதந்தரர்களே, பகவானுக்குத் தாங்கள் அடியவர் அல்லர் என்று கடைசிவரையும் சேஷத்வஞானம் இல்லாமலேயே காலங்கழித்தனர்..

ஆனால் இவர்களும் தங்களின் மோட்ச காலத்தில் பகவானுக்கு அடிமைத் தொழில் செய்து கொண்டிருந்தவர்களே என்பதை நாம் அறிவோம்.

எனவே, அடிமையாயிருந்து பகவானுக்குக் கைங்கர்யம் செய்வது ஆன்மாவை விட்டுப் பிரிக்க முடியாத ஒன்று என்பது தெளிவு.

## மூலம் : 57

**"ஆத்மாபஹாரமாவது - ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம் போதில்லையாய் விடும்."**

***1) சேதனன் எந்த நிலையில் ஆன்மாவைக் களவு செய்தவனாகின்றான்?***

*தான் சுதந்தரன்; யாருக்கும் அடியவன் இல்லை என்று எப்போது சேதனன் எண்ணுகிறானோ, அப்போதே அவன் ஆன்மாவைக் களவு செய்தவனாகிறான்.*

*எல்லா உலகங்களுக்கும் தலைவனாயிருப்பவன் இறைவன். இறைவனுக்குரிய உடைமையாக இருப்பது ஆன்மா.*

*ஆன்மாவைத் தன்னுடைமை என்று கருதி எப்பொழுது தான் சுதந்தரன் என்று சேதனன் எண்ணத் தொடங்குகிறானோ, அப்பொழுதே அவன் இறைவனுக்குரிய ஆன்மாவை அபகரித்த கள்வனாகி விடுகிறான்.*

*எனவே, சேஷத்வ ஞானமில்லாதபோது ஒருவன் ஞானத்தன்மை ஆனந்தத் தன்மை பெற்றிருந்தாலும் கூட அவன் ஏதுமில்லாதவனாகவே, மரணமடைந்தவனுக்குச் சமமாகவே ஆகிவிடுகிறான்.*

*தான் ஒருவருக்கும் அடங்கியவன் அல்லன்; தனக்கே உரியவன்; தான் சுதந்தரன் என்பன போன்ற எண்ணங்கள்,*

ஒருவனுக்குத் தான் பகவானுக்கு அடிமைப் பட்டவன் என்னும் ஞானமில்லாதபோதே தோன்றும். இந்நிலையில் தான் சேதனன் பகவானுக்குரியதான ஆன்மப்பொருளைத் தனக்குரியதெனக் கருதும் கள்வனாகிறான்.

**2) அகாரப்பொருள் பற்றிப் பிள்ளை உலகாசிரியர் கூறிய செய்திகளைச் சுருக்கித் தருக.**

பிரணவத்தில் முதல் பதமான அகாரத்தில் நான்காம் வேற்றுமை புணர்ந்து கெட்டிருக்கிறது. இங்ஙனம் நான்காம் வேற்றுமை புணர்ந்ததற்குக் காரணம், இவ்வகாரம் நாராயண பதத்துக்குச் சுருக்கமாக இருத்தலால்தான்!

இவ்வேற்றுமை பகவானுக்குச் சேதனன் சேஷபூதன் என்பதைத் தெரிவிக்கிறது. ஒருவருக்கு அடிமை பூண்டிருத்தல் துன்பமுடையதாயினும், தாம் விரும்பிய பொருளில் அடிமைப்பட்டிருத்தல் இன்பமாய்க் காணப்படுதல் போன்று குணங்களோடும் கூடிய இறைவனுக்கு விரும்பிச் செய்யும் இவ்வடிமைத் தொழிலும் இன்பமுடையதாகவே தோன்றும்.

இங்ஙனம் அடிமை செய்தலே ஆன்மாவுக்குச் சொரூபம். இஃது இல்லையேல் ஆன்மாவுக்குச் சொரூபம் இல்லை.

தான் சுதந்தரன் என்னும் எண்ணம் தோன்றினால், அஃது ஆன்மாவைக் களவாடியதாகக் கருதப்படும்.

இச்செய்திகளையே 48ஆம் சூத்திரம் முதல் 57ஆம் சூத்திரம் வரை விளக்குதலைக் காணலாம்.

**அகாரப்பொருள் முற்றுப் பெற்றது.**

# உகாரப்பொருள்

## மூலம் : 58

**"ஸ்தானப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்"**

*1) ஸ்தானப்பிரமாணம் என்றால் என்ன?*

ஒரு சொல் இருக்க வேண்டிய இடத்தில் வேறொரு சொல் வந்து அச்சொல்லின் பொருளே இதற்கும் பொருளாவது ஸ்தானப் பிரமாணம் எனப்படும்.

***2) உகாரத்துக்கு இங்குப் பொருள் யாது?***

இங்கு உகாரத்துக்கு ஏவகாரப் பொருளையே கொள்ள வேண்டும். ஏவகாரம் என்பது ஏகாரம். ஏகாரம் இங்குப் பிரிநிலைப் பொருளில் வந்துள்ளது.

எனவே, இங்கு உகாரத்துக்குப் பிரி நிலைப் பொருளையே கொள்ளுதல் வேண்டும்.

## மூலம் : 59

**"இத்தால், பிறர்க்கு சேஷமன்றென்கிறது."**

*1) இந்த அவதாரணத்தால் சொல்லப்படும் பொருள் யாது?*

இந்த அவதாரணத்தால் (பிரிநிலையால்) சேதனன் மற்றவர்க்கு அடிமைப்பட்டவன் அல்லன் என்பது சொல்லப்படுகிறது.

சேதனன் ஈசுவரன் ஒருவனுக்கே அடிமைப்பட்டவன் என்னும் கருத்தை உகாரம் தெரிவிக்கிறது என்று ஆசிரியர் தெரிவிக்கிறார்.

தந்தைக்கு உரியவனாக இருக்கும் மகன் தாய்க்கும் உரியவனாக இருக்கிறான். எனவே, தந்தைக்குச் செய்தல் போன்றே தாய்க்கும் மகனானவன் தொண்டு செய்கிறான். அவ்வாறே பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் சேதனன் மற்றவர்க்கும் அடிமையாயிருக்கலாம் என்னும் ஐயம் தோன்றலாம் அன்றோ!

இந்த ஐயத்தைப் போக்கவே பிரணவத்தில் உள்ள உகாரம் பிரிநிலைப் பொருளிலேயே உள்ளது என்றும், எனவே சேதனன் எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டுத் தொண்டு புரியக் கடமைப்பட்டவன் என்றும் ஐயம் திரிபற உகாரத்தின் பொருளை ஆசிரியர் விளக்குகிறார்.

## மூலம் : 60

**"பெரிய பிராட்டியார்க்கு சேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்."**

1) *இம்மூலத்தில் "சேஷமென்கிறதென்றும்" எனக் காணப்படும் தொடரில் உள்ள 'என்றும்' என்பதன் பொருள் யாது?*

திருமகளாருக்குச் சேதனனானவன் சேஷபூதன் (அடியவன்) என்று இவ்வுகாரம் சொல்லுகிறது என்று இயம்புவாரும் உண்டு என்பது இம்மூலத்தின் பொருளாகும்.

இம்மூலத்தில் 'என்றும்' என்பது 'என்று சொல்பவரும்' என்னும் பொருளைத் தருகிறது.

'என்று சொல்பவரும்' என்னும் தொடரில் உள்ள உம்மை 'என்று சொல்லாதவரும்' என்று பொருள் கொள்ளுமாறும் உள்ளது.

*2) உகாரம் பெரிய பிராட்டியாரைச் சொல்லும் என்பதற்கு ஆதாரம் உள்ளதா?*

உள்ளது. அகாரம் பெருமானைச் சொல்லுவதைப் போலவே, உகாரம் திருமகளாரையும், பெருமானுக்கும் பிராட்டிக்கும் அடிமைப்பட்டிருக்கும் சேதனனை மகாரமும் சொல்லுகிறது.

"அகார: சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்

வாசக இஷ்யதே:

உகார சித்ஸ்வரூபயா: ச்ரியோ

வாசீ ததா விது:"

என்று பாஞ்சராத்திரம் கூறுகிறது.

உகாரம் பிரிநிலை ஏகாரப் பொருளைக் கொள்ளாமல், திருமகளார் என்னும் பொருளை உகாரம் பெற்று, இவ்வுகாரம் பெரிய பிராட்டியாருக்குச் சேஷமென்கிறது என்று தீர்மானிப்பவரும் உண்டு என்பது இதனால் கூறப்படுகிறது.

## மூலம் : 61

**"அதிலும் அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதாநம்."**

*1) சேதனனுக்குத் தலைசிறந்த நிலையாது?*

*இறையடிமைக்கு விரோதமாய் உள்ள மற்றவருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்தும் நீங்குதலே அடியவனுக்குத் தலைசிறந்த நிலையாகும்.*

*"கண்ண புரமொன் றுடையானுக்கு அடியேன்*

*ஒருவர்க் குரியேனோ."*

*என்பார் திருமங்கையாழ்வார்.*

*"பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்" என்னும் உறுதிப்பாடே அடியவனின் தலைசிறந்த பண்பாகும்.*

***2) உகாரத்திற்குப் பிள்ளையுலகாசிரியர் எவ்வாறு பொருள் கொள்ளுகிறார்?***

*உகாரத்திற்குப் பிராட்டியார் என்று பொருள் கொள்ளாமல், மற்றவருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து நீங்குதலையே (அன்னியசேஷத்வம் கழிகையையே) பொருளாகக் கொள்கிறார் ஆசிரியர்.*

*பெரிய பிராட்டியாருக்கு அடிமை பூண்டொழுகுதல், மற்றவருக்கு அடிமைப்படாதிருத்தல் ஆகிய இவ்விரண்டிலும், பெரிய பிராட்டியாருக்கு அடிமைப் பட்டுள்ளான் என்பதைவிட இறைத்தொண்டுக்கு விரோதமாய் உள்ள மற்றவருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து நீங்கியுள்ளான் என்று வலியுறுத்திக் கூறுதலே சிறந்த பொருளாகும் என்றும் விளக்கியருள்கிறார் ஆசிரியர்.*

## மூலம் : 62

**"தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வர சேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை".**

*1) அன்னியருக்கு அடிமைப்படுதலின் கொடுமையை எங்ஙனம் உவமிக்கிறார்?*

பெருமானுக்கு மட்டுமே அடிமைப்பட்டிருப்பது ஆன்மப் பொருள். இதனை இவ்வுலக மக்களுக்கு உரியதாக்குவது என்பது மிகவும் கொடியது.

இந்திரன் முதலான தேவர்களுக்குப் படைப்பதற்கென்று வைத்துள்ள அவியுணவை (தேவருணவை) அற்பமானதும் அழகற்றதும் தாழ்ந்ததுமான நாய்க்கு இடுவதற்கு ஒப்பானதாகும் என்று இறைவனுக்குரியதான ஆன்மப் பொருளை இவ்வுலக மக்களுக்கு உரியதாக்குவது என்று ஆசிரியர் உவமிக்கிறார்.

*2) இக்கருத்தினை உள்ளடக்கிய ஆண்டாள் பாசுரம் ஒன்றைக் காட்டுக.*

"வானிடை வாழும்அவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப
ஊனிடை ஆழிசங் குத்தமர்க்கென்
றுன்னித் தெழுந்தஎன் தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!"

"பகவானுக்கென்றே மிக்க பொலிவுடன் விளங்கும் என் அங்கங்கள் அவனுக்கே உரியன. மானிடருக்கென்று அவற்றை உரிமையாக்கல் இயலாது. அவ்வாறு வாயளவில் பேசப்பட்டாலும்கூட உயிர்வாழாது மடிவது திண்ணம்" என்று தான் பகவானுக்கு அடிமைப்பட்டவள் என்னும் கருத்தை ஆண்டாள் பாசுரம் அழகுற விளக்கும் பாங்கு அறிந்து இன்புறலாம்.

மூலம் 63:

"பகவச் சேஷத்வத்திலும் அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதாநம்"

*1) ஆன்மாவுக்குப் பிரதானமாவது எது?*

*மற்றவருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து நீங்குதலே ஆன்மாவுக்குப் பிரதானமாம்.*

*இறைத்தொண்டுக்கு விரோதியாய் உள்ள மற்றவருக்கு அடிமைப்படும் தன்மையிலிருந்து நீங்குதலானது, பெரிய பிராட்டிக்கு அடிமைப்பட்டிருத்தலைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தது. மேலும் பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலை விடவும் மிகவும் முக்கியமானதும் உயர்ந்ததுமானதும் எதுவென்னில், அன்னியருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து நீங்குதலேயாம்.*

*இவ்வாறு நீங்குதலே ஆன்மாவுக்குரிய தலைமைப் பண்பாம்.*

## மூலம் : 64

"மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்கையாலே.

*1) மறந்தும் புறந்தொழா மாந்தர் என்பதன் பொருளினை விளக்குக.*

*பகவானுடைய திருநாமத்தை மறந்தாலும், மற்றவருக்கு அடிமைத்தொழிலைச் செய்யாதவர்கள் என்பது இதன் பொருளாகும்.*

*"திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்*
*மறந்தும் புறந்தொழா மாந்தர் இறைஞ்சியும்*

*சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனும்தன்*
*தூதுவரைக் கூவிச் செவிக்கு"*

*(68, நான்முகன் திருவந்தாதி, திருமழிசையாழ்வார்.)*

*"ஓ! தூதுவர்களே! பகவானுடைய திருநாமத்தைச் சொல்வதற்கு மறந்தார்களானாலும், மற்றவரைத் தொழாமல் இருக்கும் பாகவதர்களைக் காண்பீர்களே யானால், அவர்களிடம் உங்கள் ஆணையைச் சிறிதும் செலுத்தாதீர்கள்! மறந்தும் கூட அவர்களிருக்கும் இடத்திற்கு நீங்கள் செல்ல வேண்டா. ஒருகால், அவர்களே உங்கள் முன் எதிர்பாராமல் வந்துவிட்டாலும், அவர்களை வலமாக வணங்கிப் பரம சாதுக்களாகச் செல்லுங்கள்! என்னுடைய இந்தக் கட்டளையை எக்காரணங்கொண்டும் மீறக்கூடாது" என்று எமதர்மன் தன் தூதுவர்களுக்குக் கட்டளையிட்டருளினான் என்பது ஆழ்வார் பாசுரக் கருத்தாம்.*

## மூலம் : 65

**"இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது."**

*1) உகாரம் வற்புறுத்திக்கூறும் பொருள் யாது?*

*அன்னியருக்கு ஆன்மா அடிமைப்படுதல்கூடாது என்பதனை உகாரம் வற்புறுத்திக் கூறுகிறது.*

*"ஆன்மாவானது தனக்கும் உரிமையுடையதன்று; தன்னை ஒழிந்த மற்றவருக்கும் உரிமையுடையதன்று; பகவான் ஒருவனுக்கே உரிமையுடையது" என்பதனை இந்த உகாரம் தெளிவாகத் தெரிவிக்கின்றது.*

*பிராட்டியார், அடியவர் (பாகவதர்) ஆசார்யர் ஆகியோருக்கும் ஆன்மா அடிமைப்பட்டிருக்கும். இவர்கள்*

நீங்கலாக மற்றவருக்கு ஆன்மா அடிமையன்று என்பதனையும் இதனால் நன்கு உணரலாம்.

2) **58ஆம் சூத்திரம் முதல் 65ஆம் சூத்திரம் வரை கூறப்பட்டுள்ளவற்றைத் தொகுத்து வரைக.**

ஏகாரம் இருக்க வேண்டிய இடத்தில் இருக்கிறது இவ்வுகாரம். இவ் உகாரத்துக்கு ஏகாரப்பொருளையே கொள்ள வேண்டும். இதனால் சீவான்மா பிறருக்கு அடிமைப்பட்டவன் அல்லன் என்பது பெறப்படுகின்றது. இவ்வுகாரத்தைப் பெரிய பிராட்டியாருக்கு வாசகமாகக் கொண்டு, பிராட்டியாருக்கு அடிமையாயிருப்பதுதான் இதற்குப் பொருள் எனச் சிலர் கருதுகின்றனர்.

அங்ஙனம் அடிமையாய் இருப்பதனை அறிவிப்பதனைக் காட்டிலும் அன்னியருக்கு ஆன்மா அடிமைப்படுதலை மறுத்துக் கூறுதலே சிறந்தது. ஆன்மப் பொருளைச் சமுசாரிகளுக்கு உரிமையாக்குதல் என்பது, தேவர்களுக்கென்று சமைத்த உணவை நாய்க்கு இடுவதற்குச் சமமானது.

பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தலைக் காட்டிலும் மற்றவர்க்கு அடிமைப்படாதிருத்தலே சிறந்தது.

'பகவானுடைய திருநாமத்தை மறந்தாலும், மற்றவருக்குத் தான் அடிமையாய் இருந்து பணிவிடை செய்யாதிருத்தல் வேண்டும்' என்று சொல்லப்படுகிறது. இதனால் ஆன்மாவானது தனக்கும் உரியதன்று; பிறர்க்கும் உரியதன்று; ஆண்டவன் ஒருவனுக்கே ஆன்மா உரிமையுடையது" எனப்படும் செய்திகள் 58ஆம் சூத்திரம் முதல் 65ஆம் சூத்திரம் வரையில் விளக்கப்பட்டுள்ளன.

**உகாரப்பொருள் முற்றிற்று.**

# மகாரப் பொருள்

## மூலம் : 66

"மகாரம், இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞாந வாசியுமாயிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது."

**(இனி பிரணவத்தின் மூன்றாம் எழுத்தான மகாரத்தைப் பிள்ளை உலகாசிரியர் விவரித்துச் சொல்லுகிறார்.)**

*1) மகாரம் எதனைச் சொல்கிறது?*

*மகாரம் ஆன்மாவைச் சொல்கிறது. 'ம்' என்னும் எழுத்து வடமொழியில் இருபத்தைந்தாம் எழுத்தாகவும், ஞானத்தைக் குறிக்கும் சொல்லாகவும் இருப்பதனால், மகாரம் ஆன்மாவைச் சொல்லுகிறது.*

*2) மகாரம் இருபத்தைந்தாம் அக்ஷரம் என்பது எப்படி?*

*வடமொழியில் 'க' இனம் ஐந்து; 'ச' இனம் ஐந்து; 'ட' இனம் ஐந்து; 'த' இனம் ஐந்து; 'ப' இனம் ஐந்து இவற்றுள் இருபத்தைந்தாம் அக்ஷரமே மகாரமாகும்.*

*3) மகாரம் ஆன்மாவைக் குறிக்கிறது என்பது எங்ஙனம் பொருந்தும்?*

*'க' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால் பூதம் ஐந்தும்; 'ச' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால்*

கன்மேந்திரியங்கள் ஐந்தும்; 'ட' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; 'த' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐந்தும்; 'ப' இனத்தைச் சேர்ந்த நான்கு எழுத்துகளால் மனம், அகங்காரம், மகத்துவம், மூலப்ருகிருதி ஆகிய நான்கும் இவ்வினத்தைச் சேர்ந்த இருபத்தைந்தாம் அட்சரமாகிய மகாரத்தால் ஆன்மாவும் சொல்லப்படுகிறது.

*4) இந்த மகாரம் ஞானத்தைக் குறிக்கும் சொல் என்பது எப்படி?*

இந்த மகாரம் "மந - ஜ்ஞாநெ" அல்லது "மநு - அவபோதநெ" என்னும் பெயர் அடிகளிலிருந்து பிறத்தலின் இந்த மகாரம், ஞானம் என்னும் பொருளைக் குறிக்கிறது.

ஞான சொரூபமுடையவனுமாய் ஞானத்தையே குணமாக உடையவனுமாய் உள்ள ஆத்மாவையே மகாரம் குறிக்கிறது என்பதையும் தெளியலாம். முற்றும் உப்புக் கட்டியே போன்று பொருள் முற்றும் ஞானசொரூப மாயுள்ளது.

## மூலம் : 67

**"இது தான் ஸமஷ்டி வாசகம்".**

*1) மகாரம் ஏக வசனமாயிருக்கையாலே ஒரே ஆத்மாவைத் தானே குறிக்கும்?*

மகாரம் என்பது ஒரே ஆத்மாவைக் குறிப்பதன்று; ஆத்மாக்களின் கூட்டத்தையே குறிப்பதாகும்.

பகவத் கைங்கர்யம் என்பது எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவானதாகையால் பத்தர், முத்தர், நித்தியர் ஆகிய மூன்று வகையான ஆத்மக் கூட்டங்களையும் இம்மகாரம் குறிக்கிறது.

## மூலம் : 68

**"ஜாத்யேக வசநம்."**

*1) இம்மகாரம் ஒருமையைக் குறிக்குமா? பன்மையைக் குறிக்குமா?*

*மகாரம் ஒருமையே! ஆனாலும் இங்குப் பன்மைப் பொருளையே தரும்.*

*'இந்தக் கடையில் குடை விற்கப்படும்' என்றால் ஒரு குடைதான் விற்கப்படுமா? இல்லையே! பல குடைகள் விற்கப்படும் என்னும் பொருள் எல்லாரும் அறிந்ததுதானே!*

*அதுபோலவே மகாரம் (ஆன்மா) இங்கு ஒருமையைக் குறித்தாலும் பன்மைப் பொருளாக ஆத்மாக்களின் கூட்டங்களையே சுட்டும்.*

## மூலம் : 69

**"இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று."**

***1) இம்மகாரத்தால் சொல்லப்படுவன யாவை?***

*ஆன்மா அறிவுடையவன் (ஞாதா) என்றும் ஞானமற்ற உடலைக் காட்டிலும் வேறுபட்டவன் என்றும் மகாரத்தால் சொல்லப்படுகிறது.*

*ஆத்மாவுக்கு அடிமைத்தன்மை (சேஷத்வம்), ஜ்ஞாத்ருத்வம் (ஞானமுடைமை), ஆனந்தத்தன்மை (ஆனந்தித்வம்) ஆகிய மூன்று இயல்புகளும் உள்ளன.*

*எனினும், இங்கு ஆத்மாவின் ஞானத்தன்மையே சொல்லப்படுகிறது.*

*ஆன்மா ஞானமாகவே இருக்கிறது என்று கூறினால் அவ்வான்மா பஞ்ச பூதத்தாலாகிய சரீரத்திற்கு வேறுபட்டது என்று கூறலாம்.*

*ஆனால், பரமபதத்தில் ஞானமாகவே இருக்கும் சுத்த சத்துவத்தினாலாகிய சரீரத்திற்கு வேறுபட்டது என்று சொல்ல முடியாது.*

*சுத்த சத்துவம் ஞானமாய் இருக்கிறதேயன்றி, ஞானமுடையதாய் இல்லை என்பதனையும் உணரவேண்டும்.*

## மூலம் : 70

**"தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வ சேகரத்திலே சொன்னோம்."**

*1) ஆன்மா தேகத்திலிருந்து வேறுபட்டது என்று கூறப்படுவது எவ்வாறு?*

*"இந்த உடல் ஆன்மா அன்று; ஆன்மாவின் வேறுபட்டது" என்பதனைப் பலகாரணங்கள் காட்டித் 'தத்துவ சேகரம்' என்னும் பெயருடைய நூலில் விளக்கியுள்ளதாக ஆசிரியர் கூறுகின்றார்.*

*உடலை 'நான்' என்று கூறும் வழக்கம் உலகத்தில் உள்ளது. ஆனாலும் உடல் ஆன்மா ஆகாது.*

*பத்து ஆண்டுகளுக்கு முன்பிருந்த திருவரங்க விமானம் இன்னும் அப்படியே இருக்கிறது. ஆனால் பத்து ஆண்டுகளுக்கு முன்பிருந்த இந்த உடலானது இன்றும் அப்படியே இருக்கிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில், நாளுக்கு நாள் மாறுபடும் இயல்பினை உடையது உடல்.*

'பத்து ஆண்டுகளுக்கு முன்பு பார்த்த ஒன்று அப்படியே இருக்கிறது' என்று அறிவதற்கு அன்றும் இன்றும் மாறாத ஒன்று இருந்தே தீர வேண்டுமல்லவா? என்றும் மாறுபடாது இருக்கும் அந்த ஒன்றைத் தான் 'ஆன்மா' என்று சொல்லுகிறோம்.

கண் பார்க்கிறது. கை தொடுகிறது. ஆனால் பார்த்தல் முதலான தொழில்களை அறிவற்ற பொருள்களாகிய மெய் வாய் கண் மூக்கு செவி ஆகியவை செய்தாலும் அவற்றால் அறிய முடியாது. ஏனெனில் இவை ஐந்தும் மாறுபடும் தன்மையும், அழியும் இயல்பும் உடையன.

எனவே மாறாததும் அழிவற்றதுமாகிய ஒன்றினால்தான் உணர்தல், சுவைத்தல், பார்த்தல், கேட்டல், முகர்தல் முதலியனவற்றை அறியமுடியும். அந்த ஒன்றைத்தான் ஆன்மா என்கின்றனர்.

எனவே, தேகத்திலிருந்து வேறுபட்ட ஒன்றே ஆன்மா என்பது தெளிவு.

## மூலம் : 71

**"மணத்தையும் ஒளியையும் கொண்டு பூவையும் ரத்நத்தையும் விரும்புமாபோலே, சேஷமென்று ஆத்மாவை யாதரிக்கிறது; அல்லாத போது "உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே தியாஜ்யம்; அது தோன்ற சேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது."**

1) *தருமமாகிய சேஷத்வத்தை முதலில் குறிப்பிட்டு விட்டுப் பின்பு தருமியாகிற ஆன்மாவைச் சொல்லுவதேன்?*

மணத்திற்கு இருப்பிடம் என்று மலரையும், ஒளிக்கு இருப்பிடம் என்று இரத்தினத்தையும் மக்கள்

விரும்புகின்றனர். அதுபோல, அடிமைச் செயலுக்கு (சேஷத்துவத்திற்கு) ஆன்மா இருப்பிடமாய் இருத்தலால் அறிஞர்கள் ஆன்மாவை ஆதரிக்கின்றனர்.

அடிமைச் செயலுக்கு ஆன்மா இருப்பிடமாக இல்லையென்றால், "உயிரினால் குறைவிலம்" என்னும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியின்படியே பகவானுக்குச் செயல்படாத ஆன்மாவால் யாதொரு பயனுமில்லையென்று ஆன்மாவையே கைவிடுவர்.

ஆகவே, அறிஞர்களால் சிறப்பிக்கப்படும் இச்சேஷத்துவத்தில் ஆர்வம் தோன்றுதற் பொருட்டே, முதலில் சேஷத்துவத்தைச் சொல்லிப் பின்பு ஆன்மாவைக் குறிப்பிடுகிறார்.

## மூலம் : 72

**ஆக, ப்ரணவத்தால் "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று."**

1) அகாரம், உகாரம், மகாரம் ஆகிய மூன்று பதங்களாலாகிய பிரணவத்தால் வெளியிட்ட பொருளைத் தொகுத்து வரைக.

"கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு" என்னும் தொடரால் நான்காம் வேற்றுமையைத் தன்னுள் கொண்டுள்ள அகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

"அடியேன்" என்னும் சொல்லால் பகவத் கைங்கர்யத்துக்கு இருப்பிடமாயுள்ள மகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

"ஒருவர்க்குரியேனோ" என்னும் தொடரால், பிறருக்கு அடிமைப்பட்டுத் தொழில் செய்தலை விலக்கும் உகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

திருமங்கையாழ்வார் வாக்காகிய இச்சொற்றொடரின் படியே ஆன்மாவுக்கும் பகவானுக்கும் உள்ள சேஷசேஷி பாவமாகிற தொடர்பு வெளிப்படுத்தப்படுகிறது.

**2) இத்தொடர் உள்ள திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் குறிப்பிடுக.**

"விடையேழ் அன்று அடர்த்து வெகுண்டு விலங்கலுற
படையால் ஆழிதட்ட பரமன் பரஞ்சோதி
மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக் கடியேன் ஒருவர்க்கு உரியேனோ!"

என்னும் பாசுரம் திருமங்கையாழ்வாரின் 8-9ஆம் திருமொழியில் மூன்றாம் பாடலாகக் காணப்படுகிறது.

## மூலம் : 73

**இத்தால், 'தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு' என்றதாயிற்று.**

**1) இம்மூலத்தால் உணரப்படும் பொருள் யாது?**

பிறரிடம் கொள்ளும் தொடர்பினை ஒழித்து, எம்பெருமான் ஒருவனிடமே மனம் நிலைத்திருக்கும் தன்மையை இம்மூலத்தால் உணர்கிறோம்.

'இத்தால்' என்னும் சொல் 'இந்தப்ரணவத்தால்' என்னும் பொருளைத் தரும்.

'தாமரையாள் கேள்வன் ஒருவனையே உணர்வு நோக்கியிருக்கும்' என்னும் தொடரால் பெருமானுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு உணர்த்தப்படுகிறது.

எம்பெருமான் அகாரத்தின் பொருளாக இருக்கிறான். பிராட்டியாருடன் கூடி இருக்கும் எம்பெருமான் சேதனன்

செய்யும் தொண்டினையும் ஏற்றுக்கொள்பவனாக இருக்கிறான்.

இதனால் பிராட்டியின் சம்பந்தமும் தேவை என்பதும் உறுதிப்படுகிறது.

இவையே இம்மூலத்தால் உணரப்படும் பொருள்களாகும். மேலும், பிறரிடம் கொள்ளும் தொடர்பினை ஒழித்து எம்பெருமான் ஒருவனிடமே மனம் நிலைத்திருக்கும் தன்மையை 'ஒருவனையே நோக்கும்' என்னும் தொடர் வலியுறுத்துகிறது.

'உணர்வு' என்பது பசுவத் கைங்கர்யத்துக்கு இருப்பிடமாய் மகாரத்தால் சொல்லப்படும் அறிவாகவே (உணர்வாகவே) இருக்கும் ஆன்மாவினைச் சுட்டுகிறது.

**2) இத்தொடர் காணப்படும் பாசுரத்தைக் கூறி விளக்குக.**

"உணர்வு தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும்" என்று பொய்கையாழ்வார் தாம் இயற்றியருளிய முதல் திருவந்தாதியில் குறிப்பிடுகிறார்.

"பெயரும் கருங்கடலே நோக்குமாறு ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும் - உயிரும்
தருமனையே நோக்கும்ஒண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு"

67 - முதல் திருவந்தாதி

"ஆறானது அலைகளோடு கூடியிருக்கின்ற கடலைநோக்கி நிற்கும். ஒளிமிக்க தாமரை மலர் சூரியனையே நோக்கி நிற்கும். உயிர்களானவை யமதருமனையே நோக்கி நிற்கும்" என்பது இப்பாசுரத்தின் தெளிந்த பொருளாகும்.

பெருமான் ஒருவனை மட்டும் நோக்கி நிற்கும் ஈசுவர ஞானமே உண்மை ஞானம் எனப்படும்.

'உணர்வு' என்பதற்குப் பெரியவாச்சான் பிள்ளை ஞானம் என்னும் பொருளையே கூறியுள்ளார்.

இந்த 'உணர்வு' என்னும் சொல்லுக்குப் பிள்ளையுல காசிரியரும் 'ஞானமாகவே இருக்கும் ஆன்மா' என்னும் பொருளையே கொள்கிறார்.

## மூலம் : 74

**"அகாரத்தாலும், மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும், உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று."**

1) ***காப்பவன் தன்மையை முக்கியமாகக் கொண்டு ஆசிரியர் விளக்கிக் கூறுவன யாவை?***

*பிரணவத்தால் கூறப்படும் நான்கினை இச்சூத்திரம் விளக்கிக் கூறுகிறது. அவையாவன:*

*அகாரம், காக்கும் கடவுளையும்; மகாரம் காக்கும் கடவுளால் பாதுகாக்கப்படும் ஆன்மாவையும்; நான்காம் வேற்றுமையுருபு ஆன்மாவைக் காப்பதற்குக் காரணமாகவுள்ள கைங்கர்யத் தொடர்பையும்; உகாரம், 'பெருமானைத் தவிர வேறு யாருக்கும் ஆன்மா அடிமையன்று' என்பதையும், ஆன்மாவானது பகவான் ஒருவனுக்கு மட்டுமே தன்னை அர்ப்பணித்துக் கொள்வதால் பெறுகின்ற பயனையும் சொல்கிறது.*

*இவ்வாறு காக்கும் கடவுள், காக்கப்படும் ஆன்மா, காத்தலுக்குக் காரணமான கைங்கர்யம், காத்தலின் பயன்*

ஆகிய நான்கினையும் பிரணவம் விளக்குகிறது என்பதனை இம்மூலத்தால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**2) 68 முதல் 74 வரையுள்ள மூலங்களில் கூறப்படும் செய்திகளைத் தொகுத்து வரைக.**

உகாரத்திற்கு அடுத்த மகாரமானது, இருபத்தைந்தாம் எழுத்தாகவும், ஞானத்துக்கு இருப்பிடமாகவும் உள்ளதனால் ஞானமே குணமாக உடைய ஆன்மாவைப் பற்றிச் சொல்லுகிறது.

ஆன்மாவைச் சொல்லுவதான இம்மகாரம் 'ம்' என்னும் ஒருமைச் சொல்லாக இருந்தாலும் ஆன்மாக்களின் திரளையே தெரிவிக்கிறது.

ஆன்மாவுக்கு அடியவனாயிருத்தல் (சேஷத்வம்), அறிவுடையவனாயிருத்தல் (ஞானத்ருத்வம்) ஞானவானாய் இருத்தல் (ஞானத்வம்) ஆகிய மூன்று தன்மைகள் இருப்பினும் ஆன்மா ஞானமுடையது என்பதனையே இம்மகாரம் இயம்புகிறது.

ஞானமற்ற தேகத்தைக் காட்டிலும் ஆன்மா வேறுபட்டது என்னும் விளக்கம் தத்துவ சேகரம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

மணத்தையும் ஒளியையும் தருவதனாலேயே மலரையும் மணியையும் மக்கள் விரும்புகின்றனர். அதுபோல, பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் காரணம் ஒன்றினால் மட்டுமே ஆன்மாவும் விரும்பப்படுகிறது.

சேஷத்துவம் இல்லையானால் ஆன்மாவால் எவ்விதப் பயனும் இல்லை. இந்நிலையில் இந்த ஆன்மா வெறுக்கப்படும் பொருளே!

அடியவனாம் தன்மையை உடைய காரணத்தால் மட்டுமே அடிமை நிலையை முதலிலும், ஆன்மாவை அதற்கடுத்தும் பிரணவம் பேசுகிறது.

ஆக, பிரணவத்தால் "கண்ணபுரம் ஒன்று உடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ", "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" எனப்படும் இப்பாசுரங்களின்படி, ஆன்மாவுக்கும் பெருமானுக்கும் உள்ள அடிமை, தலைமை எனப்படும் தொடர்பு (சேஷ சேஷிபாவம்) சொல்லப்படுகிறது.

அகாரம், காப்பவனான பெருமானையும்; மகாரம் காப்பாற்றும் ஆன்மாவையும்; நான்காம் வேற்றுமையுருபு காப்பதற்குக் காரணமான தொடர்பினையும்; உகாரம் காத்தலின் பயனையும் சொல்லுகிறது.

இச்செய்திகளே 66 முதல் 74 வரையுள்ள சூத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளன.

**(பிரணவத்தின் பொருள் முற்றும்.)**

# நம: பதப்பொருள்

## மூலம் : 75

"இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது."

*1) இதுவரை பிரணவத்தின் பொருளைக் கூறிவந்த ஆசிரியர் இனி எதனை விவரிக்கிறார்?*

*பிரணவத்துக்கு மேல் உள்ள பதங்களை விவரித்துச் சொல்கிறார்.*

*2) விவரித்தல் (விவரணம்) என்றால் என்ன?*

*முன்பு கூறிவந்த பொருளை மேலும் விரிவாகக் கூறி அதை உறுதிப்படுத்தச் சிலவற்றைச் சொல்லுதலே விவரித்தல் என்னப்படும்.*

## மூலம் : 76

"உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயண பதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்"

*1) பிரணவத்திலுள்ள எழுத்துகள் விளக்குவன யாவை?*

*(1) 'ஆன்மா பிறருக்கு அடிமைப்பட்டதன்று' என்பதனை விளக்குகிறது உகாரம்.*



பெருமானல்லாத பிற ஆன்மாக்களுள் தானும் ஒரு ஆன்மாவே என்பதை உணர்ந்த சேதனன் தனக்குத் தான் அடிமை என்னும் கருத்தை நீக்குகிறது நம: என்னும் பதம். ஆகையால் நம: என்பது உகாரத்தை விளக்குகிறது.

(2) காப்பவன் பெருமான்; காக்கப்படும் பொருள்கள் சேதன அசேதனங்கள்; காத்தல் தொழிலைச் செய்வதற்குப் பயன்படும் குணம் 'அடியவன்-தலைவன்' என்னும் தொடர்பு, அவரவர் தகுதிற்கேற்பக் காக்கும் திறன் ஆகிய இவை அனைத்தையும் தெளிவாக விளக்குவதால் அகாரத்தை நாராயணபதம் விளக்குகிறது.

(3) பகவத் கைங்கர்யம் (அடிமைத்தொழில்) செய்யாத போது அடிமைத்தன்மை (சேஷத்வம்) இல்லையாதலின் அதைக் குறிக்கும் சதுர்த்தியோ, அல்லது நித்தியப் பொருள்களைக் குறிக்கும் 'நார' பதமோ மகாரத்தை விளக்குவதாகும்.

## மூலம் : 77

**"அடைவே விவரியாதொழிகிறது, விரோதி போய் அநுபவிக்க வேண்டுகையாலே"**

*1) பிரணவத்தில் உள்ள எழுத்துகளை வரிசையாக விவரிக்காமல் வரிசை மாற்றி விவரிப்பானேன்?*

மூலம் 76ல் அகாரத்தை முதலில் விவரிக்காமல் உகாரத்தையே விவரிக்கிறார்.

ஏனெனில், பகவத் அனுபவத்திற்குப் பகையாய் உள்ள அகங்கார மமகாரங்கள் கழிந்தால்தான் பகவத் அநுபவம் கிடைக்கும்.

அகங்கார மமகாரங்கள் நம: என்னும் பதத்தாலே கழிக்கப்படுகிறது. நம: என்னும் பதத்தினை உகாரம்

சுட்டுகிறது. எனவேதான், அகாரத்தை முதலில் கூறாமல் உகாரத்தினை முதலில் கூறுகிறார்.

*2) 75 முதல் 77 வரையுள்ள மூலங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.*

"இனி, பிரணவத்தை விவரிக்கிறது. உகாரத்தை நமப்பதமும், அகாரத்தை நாராயண பதமும், மகாரத்தைச் சதுர்த்தியும் நார பதமும் விரிவுபடுத்துகின்றன. அகாரத்தை முன்னும், உகாரத்தைப் பின்னும் விளக்க வேண்டியிருப்பினும், அங்ஙனம் விளக்காததற்குக் காரணம் அகங்கார மககாரங்கள் நீங்கிய பின்பே பகவானை அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்பதனாலேயே" எனப்படும் செய்திகள் 75 முதல் 77 வரையுள்ள மூலங்களில் சொல்லப்பட்டுள்ளன.

## மூலம் : 78

**"நமஸ்ஸு - 'ந' என்றும் 'ம' என்றும் இரண்டு பதம்".**

*1) பிரணவத்தின் நடுப்பதமான நம: என்பதனைப் பிரித்துக்காட்டுக.*

நம: என்பதில் 'ந', 'ம:' என்னும் இரண்டு எழுத்துகள் உள்ளன. இவ்விரண்டு எழுத்துகள் தனித்தனிப் பொருளைத் தருதலால் பதங்கள் எனப்பட்டன.

## மூலம் : 79

**"ம: என்கிற வித்தால், தனக்கு உரியன் என்கிறது; ந என்று அத்தைத் தவிர்க்கிறது."**

*1) ந, ம: என்னும் இரண்டு பதங்களுக்கும் பொருள்கள் யாவை?*

ம: என்னும் பதம் 'தனக்குத்தான் உரியன்' என்று பொருள் தரும். ஆனால், ந என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப்

பொருளைத் தந்து 'தனக்குத் தான் உரியன் அல்லன்' என்று பொருள் தரும்.

## மூலம் : 80

**"ஆக, நம: என்கிற வித்தால் தனக்குரியன் அன்றென்கிறது."**

***1) நம: என்னும் தொடர்மொழி உணர்த்தும் பொருள் யாது?***

*சேதனன் 'தனக்குத்தான் உரியவன் அல்லன்' என்னும் பொருளை நம: என்னும் தொடர்மொழி உணர்த்துகிறது.*

## மூலம் : 81

**"பிறருக்குரியனானவன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்கியதையுங்கூட அழியும்."**

***1) சேதனன் தனக்குத்தானும் உரியவனல்லன்; பிறருக்கும் உரியவன் அல்லன் என்பதனை உகாரம் தெரிவிக்கிறது என்பதனை அறிந்தோம். இவ்விரு பொருள்களுள் தனக்குத்தான் உரியவன் அல்லன் என்பதை மட்டும் விளக்கிக் கூறுவானேன்?***

*'தான் பிறருக்கு அடிமை', 'தான் தனக்கு அடிமை' என்னும் இவ்விரண்டையும் ஒப்பிட்டு நோக்குங்கால், தான் பிறருக்கு அடிமை என்று எண்ணுவதைக் காட்டிலும் தான் தனக்கு உரியன் என்னும் சுதந்தர உணர்வு மிகுந்த தீமையை விளைவிக்கும்.*

*ஏனெனில், பிறருக்கு அடிமை பூண்டொழுகும் ஒருவன் ஏதோ ஒரு வகையில் பிறருக்கு அடியவனாக உள்ளான். அவ்வாறு பிறருக்கு அடிமையாய் இருக்கும் ஒருவனைத் தகுந்த காரணங்கள் காட்டி அவ்வடிமை நிலையிலிருந்து அவனை மீட்கலாம்.*

காரணத்தன்மை, காப்பாற்றும் தன்மை, தலைமைத் தன்மை ஆகியவை வாய்க்கப்பெற்ற பகவானுடைய சீரிய குணங்களை எடுத்துக்காட்டி, அவனைப் பிறருக்கு அடிமை செய்யும் நிலையிலிருந்து பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் அடிமை நிலைக்குத் திருப்புதல் எளிதாக முடியும். அவனும் பகவத் கைங்கர்யத்தின் பெருமையை உணர்ந்து தொண்டு செய்வதில் ஈடுபடுவான்.

ஆனால், "நான் சுதந்தரன், எவருக்கும் அடிமைப் பட்டவன் அல்லன்" என்று இறுமாந்து நிற்கும் ஒருவனை எந்தக் காரணத்தைக் காட்டியும் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபடச் செய்வது அரிதினும் அரிதாம்.

எனவேதான், 'சேதனன் தனக்குத்தான் உரியன் அல்லன்' என்னும் பொருளை மட்டும் முக்கியமாக விளக்குகிறார்.

**2) இக்கருத்தினை விளக்கச் சான்று ஒன்று தருக.**

அகளங்க சோழன் என்பவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை ஆண்டு வந்தான். அம்மன்னனுக்குக் கையாள்களாக வில்லியர்மூவர் இருந்தனர். அம்மூவருள் ஒருவர் உறங்காவில்லி என்பவர்.

ஒருநாள், உறங்காவில்லி உறையூரிலிருந்து திருவெள்ளறை என்னும் தலத்துக்குத் தன் பத்தினியுடன் சென்று கொண்டிருந்தான். அவளோ மிகப்பேரழகி! உச்சி வெயில் நேரத்தில் காவிரி மணலில் இருவரும் நடந்து சென்றனர். சுடுமணலில் பத்தினி பெரிதும் வருந்தினாள். அவள் பாதங்கள் வெப்பத்தால் கொப்பளித்தன. இதைக் கண்டு வில்லி பெரிதும் வருந்தினான். அரசனால் தனக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்ட பட்டாடையை மணலில் விரித்தான். அப்பட்டாடை மீது தன் மனைவியை நடந்து

வருமாறு செய்தான். அவள் தலைமேல் வெயில் படாமல் இருக்கக் குடையும் பிடித்து வந்தான்.

இந்தப் புதுமையைக் காவிரிக்கரையில் இருந்த இராமாநுசர் கண்டார். அவர்கள் இருவரையும் தம் அருகே அழைத்து விசாரிக்கலானார்.

"சுவாமி! அடியேன் திருவெள்ளறையைச் சேர்ந்தவன். உறையூரில் சோழ மன்னனிடம் தொழில் செய்து வருகிறேன். இப்போது திருவெள்ளறைக்குச் சென்று கொண்டிருக்கிறேன்" என்று வில்லி கூறினான்.

"தொழில் செய்யப்போகும்போது மனைவியையும் கூடவே அழைத்துச் செல்வதேன்?" என்று இராமாநுசர் வினவினார்.

"சுவாமி! எவ்விடத்தும் காண முடியாத இப்பேரழகியைப் பிரிந்து செல்ல என்மனம் விரவில்லையே! என்ன செய்வது?" என்றான் வில்லி.

"அப்படியாயின் இவளைக் காட்டிலும் ஒப்பற்ற பேரழகுடைய பொருளைக் கண்டால், அப்பொருளில் உன் மனம் ஈடுபடுமா?" என்று உடையவர் கேட்டார்.

"ஈடுபடும்!" என்றான் வில்லி.

இராமாநுசர் வில்லியை அழைத்துக் கொண்டு திருவரங்கப்பெருமானின் திருக்கோயிலுக்குச் சென்றார்; புன்னகை தவழும் முகத்துடன் பள்ளி கொண்டிருக்கும் திருவரங்கப் பெருமானின் திவ்ய மங்கள விக்ரகத்தைக் காணுமாறு அருள் புரிந்தார்!

திருவரங்கப் பெருமானைச் சேவித்த அளவில் வில்லியும், அவர்தம் பத்தினியும், தம்மையே மறந்து நின்றனர்.

கண்ணிமைக்காமல் அக்கரியவனின் வனப்பில் கண்களைப் பதித்து நின்றனர்; திருவடி முதல் திருமுடி வரையிலும், திருமுடியிலிருந்து திருவடி வரையிலும் மாறி மாறிச் சேவித்து மனங் குளிர்ந்தனர்.

திருவரங்கப்பெருமானின் திருவருளுக்கு ஆளாக்கிய இராமாநுசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான் வில்லி. அவன் மனம் தன் மனைவியின் பேரழகை மறந்து திருவரங்கப் பெருமானின் பேரழகில் ஒன்றியது. அப்பெருமானுக்கே அடிமை செய்து வாழ வில்லி உறுதி பூண்டான்.

அன்று முதல் இவர்களுக்கு முறையே பிள்ளை உறங்காவில்லிதாசர் என்றும், பொன்னாச்சியார் என்றும் திருநாமமிட்டு இவர்களை அன்புடன் இராமாநுசர் ஆதரித்து வரலானார்.

பிறருக்கு அடிமையாய் இருக்கும் ஒருவன் ஆண்டவனுக்கு அடிமையாவது என்பது எளிது என்பதனை இவ்வரலாற்றால் நன்கு உணரலாம்.

## மூலம் : 82

**"இத்தால், விரோதியைக் கழிக்கிறது."**

***1) நமஸ்ஸால் உண்டாகும் பயன் யாது?***

*இந்த நம: என்பது விரோதியைக் கழிக்கிறது.*

## மூலம் : 83

**"விரோதிதான் மூன்று"**

***1) விரோதிகள் எத்தனை வகைப்படும்?***

*விரோதிகள் மூன்று வகைப்படும்*

## மூலம் : 84

"அதாவது - ஸ்வரூப விரோதியும், உபாய விரோதியும், ப்ராப்ய விரோதியும்."

*1) மூவகை விரோதிகள் யாவை?*

*சொரூப விரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி என்பவை மூவகை விரோதிகளாம்.*

*2) சொரூப விரோதி என்றால் என்ன?*

*ஓம் எனும் பிரணவத்தில் பகவானுக்கு மட்டுமே அடிமைப்பட்டிருப்பதே ஆன்ம சொரூபம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆன்ம சொரூபத்துக்கு விரோதியே சொரூப விரோதி எனப்படும்.*

*அதாவது, அடிமைத் தன்மை என்னும் சொரூபத்துக்கு அகங்கார மமகாரங்கள் விரோதிகளாம்.*

*3) உபாய விரோதி என்றால் என்ன?*

*நம: என்னும் பதத்தில் கிடைத்த பொருளாகிய உபாயத்திற்கு விரோதியாய் உள்ளது உபாய விரோதி எனப்படும்.*

*4) ப்ராப்ய விரோதி என்றால் என்ன?*

*நாராயண என்னும் பதத்தில் சொல்லப்படும் பலனுக்கு விரோதியாய் உள்ளது ப்ராப்ய விரோதி எனப்படும். ப்ராப்யம், உபேயம், பலன், புருஷார்த்தம் இவை ஒரு பொருள் சொற்கள்.*

## மூலம் 85:

''ஸ்வரூப விரோதி கழிகையாவது - 'யானேநீ என்னுடைமையும் நீயே' என்றிருக்கை; உபாய விரோதி

**கழிகையாவது – 'களைவாய் துன்பம் களையாதொழிவாய்' களைகண் மற்றிலேன்' என்றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது – 'மற்றை நம் காமங்கள் மாற்று;' என்றிருக்கை."**

***1) கழிகை என்றால் என்ன?***

*நீங்குதல் என்பது பொருளாம்.*

***2) இம்மூலம் கூறுவது யாது?***

*மூன்று விரோதிகளும் நீங்குதலுக்குரிய வழிகளைக் கூறுகிறது.*

***3) சொரூப விரோதி கழிகை என்பதனை விளக்குக.***

*இறைவனுக்கு மட்டுமே தொண்டு செய்யும் தன்மையைத்தான் ஆன்ம சொரூபம் என்பர்.*

*இத்தொண்டு செய்யும் தன்மைக்கு விரோதியாவது, 'யான் எனக்கு உரியன்' என்று நினைக்கும் அகங்காரமும், 'இப்பொருள் என்னுடையது' என்று எண்ணும் மமகாரமும் ஆகும்.*

*இவ்விரண்டும் நீங்கப் பெறுதலே சொரூப விரோதி கழிகை.*

*"யானேநீ; என்னுடைமையும் நீயே" என்பது ஆழ்வார் வாக்கு. இதில் "யானே நீ" என்பதற்கு யான் நீயே என்று பொருள் கொள்ள வேண்டும். அப்படிப்பொருள் கொண்டால், நான் பகவானுக்கே உரிமையுடையவன் என்னும் பொருள் கிடைக்கும்.*

*"என்னுடைமையும் நீயே" என்பதற்கு என்னுடைமை களும் பகவானுக்கே உரிமையுடையவை என்பது பொருளாகும்.*

*இவ்வாறு எண்ணுதலே சொரூப விரோதி கழிகையாகும்.*

**4) உபாய விரோதி கழிகை என்பதனை விளக்குக.**

உபாயம் என்பது பகவானைக் குறிக்கும். பகவானையே பற்றி நிற்றலுக்குப் பகையாய் உள்ளவையே உபாய விரோதி எனப்படும். "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று பகவானையே பற்றி நிற்பது உபாய விரோதி நீங்குதல் எனப்படும்.

"உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேன் இனிப்போய் ஒருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயை அழிவு கண்டாய்" என்று பெரியாழ்வார் அருளிச் செய்தபடி, 'வேறொருவன் மனையைத் தேடிச் செல்வேன் அல்லேன்' என்றிருத்தலே உபாயவிரோதி நீங்கிய நிலையாம்.

**5) ப்ராப்ய விரோதி கழிகை என்பதனை விளக்குக.**

"மற்றை நம் காமங்கள் மாற்று" என்று இருத்தலே ப்ராப்ய விரோதி கழிகையாம்.

பிராப்பியம் என்பது பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் பொழுது அவன் உவப்பிற்கு ஏற்பச் செய்தலாம்.

பிராப்பியத்துக்கு விரோதியாவது, பகவானுக்குச் செய்யும் தொண்டினைத் தனக்கு இன்பமூட்டுதற் பொருட்டுச் செய்தலாம்.

பிராப்பிய விரோதி கழிகையாவது, "மற்றைய நம்காமங்கள் மாற்று" என்னும் ஆண்டாள் பாசுரத்தின்படி, பகவானுடைய உவப்பிற்கு மாறாக உள்ள விருப்பங்களைப் போக்க வேண்டும் என்று ஆண்டவனை வேண்டியிருத்தலாம்.

நிலா, தென்றல், மலர், சந்தனம் முதலானவை பிறருக்குப் பயன்படுங்கால் தமக்குப் பயனேதும் இல்லாதிருத்தல்

போன்று, தன்னலமின்றிப் பகவத் கைங்கர்யம் செய்தல் வேண்டும்.

தன்னலமற்ற நிலையில் செய்யப்படும் கைங்கர்யமே உபேய விரோதி கழிகை எனப்படும்.

## மூலம் : 86

**"ம: என்கை ஸ்வரூப நாசம்; நம; என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்."**

*1) சொரூப நாசம் என்றால் என்ன?*

சீவான்மாவின் அழிவே சொரூபநாசம் எனப்படும். சீவான்மா முக்காலத்தும் அழிவற்ற பொருளே! எனினும், சீவான்மாவின் அழிவே சொரூப நாசம் என்பது எப்படிப் பொருந்தும் எனில், .

பொருள் வளம் படைத்த கோடீசுவரன் ஒருவன் முன்னிலையில் ஏழை ஒருவன் இருந்தால், அந்த ஏழையை ஏதும் இல்லாதவனாகவே அனைவரும் மதிப்பர். உயிருடன் இருப்பினும் அவன் பிணத்துக்குச் சமமே!

அதுபோலவே, ஆன்மாவானது பரமான்மாவின் தொடர்பு இல்லாதபோது அந்த ஆன்மா இருப்பினும் இல்லாததாகவே கருதப்படும். அதுவே சொரூபநாசம் எனப்படுகிறது.

பரமாத்மாவின் தொடர்பு இல்லாத நிலையில் ஆன்மா அழிவையே அடைகிறது. அந்த அழிவைத்தான் சொரூபநாசம் என்கின்றனர்.

*2) 'ம: என்கை சொரூப நாசம்' என்பதனை விளக்குக.*

பரமான்மாவின் தொடர்பை அகற்றுவதற்குக் காரணமாய் உள்ளவை நான் என்னும் அகங்காரமும், எனது

என்னும் மமகாரமும் ஆம். இவ்வகையில் ஆன்மாவின் சொரூப நாசத்திற்குக் காரணமாயுள்ளவை இவ்வகங்கார மமகாரங்களே என்பது தெளிவாகிறது.

அகங்கார மமகாரங்களைக் குறிக்கும் சொல் ம: என்பது. எனவே, "ம: என்கை சொரூபநாசம்" என்கிறார் ஆசிரியர்.

சீவனுடைய அழிவையும், அவ்வழிவுக்குக் காரணமான அகங்கார மமகாரங்களையும் தெரிவிப்பது ம: என்னும் சொல்லே ஆகும். எனவே, 'ம:' என்னும் சொல்லும், சொரூபநாசம் என்பதும் ஒன்றே என்பது தெளிவு.

**3) 'நம: என்கை சொரூப உஜ்ஜீவனம்' என்பதனை விளக்குக.**

நான் என்னும் அகங்காரமும், எனது என்னும் மமகாரமும் அற்ற நிலையே நம: என்பது. அகங்கார மமகாரங்கள் அற்ற நிலையிலேயே ஆன்மாவுக்கு வாழ்வு கிடைக்கிறது என்பதனையே, "நம: என்கை சொரூப உஜ்ஜீவனம்" என்கிறார் ஆசிரியர்.

## மூலம் : 87

**"இதுதான்... ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்."**

**1) இந்த நமப்பதம் வேறு எவற்றை விளக்கும்?**

சொரூபம், உபாயம், பயன் என்பனவற்றுக்குப் பகைகளாகிற அகங்கார மமகாரங்களை நீக்குதல் மட்டுமின்றிப் பகவத் கைங்கர்யம், பகவானாகிற உபேயம், பகவானின் உவப்புக்கெனவே செய்யப்படும் கைங்கர்யமாகிய பலன் ஆகியவற்றையும் இந்த நமப்பதம் விளக்கிக்காட்டும்.

## மூலம் : 88

" 'தொலைவில்லி மங்கலம் தொழும்' என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று: 'வேங்கடத்துறைவார்க்கு நம:' என்கையாலே உபாயம் சொல்லிற்று: 'அந்திதொழும் சொல், என்கையாலே பலம் சொல்லிற்று."

1) *பிரணவத்தில் சொரூபம் சொல்லப்படுவதைப் போலவே, நமப்பதத்திலும் இந்தச் சொரூபம் சொல்லப்படுகிறது என்பதனை விளக்குக.*

*பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் ஆன்ம சொரூபம் பற்றிப் பிரணவத்தில் சொல்லப்படுகிறது. பகவானுக்குச் செய்வதைப் போலவே, பாகவதர்களுக்குத் தொண்டு செய்வது பற்றியும் பிரணவத்தால் உணரலாம்.*

*அடியவனாக இருந்து தொண்டு செய்யும் ஆன்ம சொரூபம் உள்ளபடியே அகங்கார மமகாரங்கள் முதலில் நீங்குதல் வேண்டும். அகங்கார மமகாரங்களாகிற பகைகள் நீங்குகிற இடமாகிற நமப் பதத்திலேயே ஆன்ம சொரூபம் நன்கு விளக்கம் பெறும்.*

2) *இதற்குச் சான்றாக ஆழ்வார் பாசுரம் ஒன்றைக் காட்டி விளக்குக.*

*"துவளில் மாமணி மாட மோங்கு*
*தொலைவில் லிமங்க லம்தொழும்*
*இவளை நீர்இனி அன்னை மீர்!உமக்*
*காசை யில்லை விடுமினோ!*
*தவள வொண்சங்கு சக்கர மென்றும்*
*தாமரைத் தடங்கண் களென்றும்*
*குவளை யொண்மலர்க் கண்கள் நீர்மல்க*
*நின்று நின்று குமுறுமே!"*

தலைவியின் நிலையைத் தாயாரிடம் தோழி சொல்லுவதாக அமைந்தது இப்பாசுரம்.

குற்றமற்ற சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்கள் உயர்ந்து காணப்படும் தலமாகிய தொலைவில்லி மங்கலம் என்னும் திருநகரை இவள் தொழுகிறாள் என்பது பாசுரக் கருத்து.

பரம்பொருளை வணங்குவது என்பது ஒருவகைப் பக்தி. ஆனால், தலைவியானவளோ பரம்பொருள் உவந்து திருக்கோயில் கொண்டிருக்கும் திருத்தலத்தைத் தொழுது அத்தலத்திற்கும் அடிமைப் பட்டிருக்கிறாள் என்னும் கருத்தும் இப்பாசுரத்தில் விளங்குகிறது.

எனவே, 'தொழும்' என்னும் சொல் அடிமை செய்யும் ஆன்ம சொரூபமாகிய ஆழ்வார் நிலையைக் குறிப்பதனைக் கண்டு மகிழலாம்.

**3) நமப்பதத்தில் உபாயம் சொல்லப்படுகிறது என்பது எங்ஙனம்?**

துன்பம் நீங்கி இன்பமாக இருப்பதற்கு என்ன செயலைச் செய்யவேண்டுமோ, அச்செயலில் தொடர்பு அற்று இருத்தல் என்பதே நம: என்னும் பதத்தின் சாரமான பொருளாகும். இவ்வாறிருத்தல்பாரதந்திரிய நிலை எனப்படும்.

பாரதந்திரிய நிலையைக் கைக்கொண்டு ஒழுகுபவனுக்கு ஈசுவரனே உபாயப்பொருள் ஆகின்றான். இந்த நிலையில் நம: என்பது உபாயப் பொருள் ஆகிறது என அறியலாம்.

**4) "வேங்கடத்துறைவார்க்கு நம: என்கையாலே உபாயம் சொல்லிற்று" என்பதனை விளக்குக.**

வேங்க டங்கள்மெய்ம் மேல்வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லன வேசெய்வார்
வேங்க டத்துறை வார்க்கு நமவென்ன
லாம்க டமைவ துசுமந் தார்கட்கே.

என்பது நம்மாழ்வார் திருவாய் மொழி.

மூன்றாம் திருமொழியில் மூன்றாம் பத்தியில் ஆறாவதாக அமைந்துள்ளது இப்பாசுரம். உபாயமாவதற்கு இப்பாசுரம் தடையில்லை.

அடியவன் தன் அடிமைத் தொழிலைச் செய்யும்போது "அடியேன் திருவேங்கடத்துறையும் எம்பெருமானுக்கே உரியவனல்லாமல், எனக்கு நான் உரியேன் அல்லன்" என்று தன்னுடைய பாரதந்திரிய நிலையை நினைத்தே அவ்வடிமைத் தொழிலைச் செய்கிறான்.

இவ்வாறு நினையாமல் எளிமை வாய்ந்ததும், தன்னால் அடையத்தக்க பொருளாக உள்ளதுமான நம: என்பதைச் சொல்லளவில் சொல்லினும் அதை எம்பெருமான் தன் பெருமைக்கேற்ப இவ்வடியவன் பெரிய கைங்கர்யம் செய்து விட்டதாகவே மகிழ்கிறான்.

இதனால், நம: என்னும் பதத்தைச் சொல்லியவனின் முன்வினை அழிகிறது; பின்வினை ஒட்டாமல் போய்விடுகிறது.

நம: என்பது உபாயப் பொருளாதலை இப்பாசுரம் இவ்வாறு எடுத்து இயம்புகிறது.

5) நமப்பதம் பயனையும் சொல்லுகிறது எங்ஙனம்?

பகவானுக்குச் செய்யும் கைங்கர்யம் தன் நன்மைக்கென எண்ணாமல் பகவானின் உவப்புக்காகவே என்று கருதிச் செய்ய வேண்டும்.

இவ்வாறு செய்யும்போது நம: என்பது தன் நன்மைக்கே என்பதனை நீக்குகிறது. அவ்வகையில் பகவானுடைய முகமலர்த்தியைக் காட்டுவது கைங்கர்யமே என்பது கருத்தாகிறது. இதனால் நம: என்பது பயனையும் சொல்லுகிறது என்பதனையும் அறியலாம்.

*6) இக்கருத்துக்கு ஆதரவான ஆழ்வார் பாசுரம் ஒன்றை விளக்குக.*

"உண்டு களித்தேற் கும்பர்என் குறைமேலைத்
தொண்டு உகளித்துஅந்தி தொழும்சொல்லுப் பெற்றேன்
வண்டு களிக்கும் பொழில்சூழ் திருப்பேரான்
கண்டு களிப்பக் கண்ணுள்நின் றகலானே!"

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி.

இதில், 'அந்தி தொழும் சொல்', 'அந்தி' என்பவற்றைச் சொரூப ஞானமானது முதிர்ந்தநிலை என்று கொள்ளவேண்டும். இவ்வாறு பொருள் கொண்டால், சொரூப ஞானமானது முதிர்ந்த நிலையில் பகவானைத் தொழும்போது அவன் முகமலர்த்திக்குச் செய்யும் செயல்கள் ஆன்மாவிற்குப் பயனாதலை அறியலாம்.

## மூலம் : 89

**" 'உற்றதும் உன்னடியார்க்கடிமை' என்கிறபடியே, இதிலே பாகவத சேஷத்வமும் அநுஸந்தேயம்".**

*1) இந்நமப்பதம் பாகவத கைங்கர்யம் பற்றியும் தெளிவுபடுத்துகிறதா?*

ஆம். பகவானுக்கு ஆன்மா அடிமைப்படுதல் இயல்பு. அதுபோலவே, பகவானுடைய கைங்கர்யத்துக்கு எல்லையாக விளங்கும் பாகவத கைங்கர்யமும்

கடைப்பிடிக்க வேண்டும் என்பது நமப்பதத்தால் உணர்த்தப்படுகிறது.

எட்டெழுத்தோடும் கூடிய திருமந்திரம் கற்றதால் தான் பெற்றபேறு, 'உன்னடியார்க்கடிமை' என்பதே ஆகும் என்று திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

**2) "உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்னும் தொடர் அமைந்த பாசுரத்தை எடுத்துக்காட்டுக.**

*"மற்றும்ஓர் தெய்வம் உளதென் றிருப்பாரோடு*
*உற்றிலேன் உற்றதும் உன்னடி யார்க்கடிமை*
*மற்றெல்லாம் பேசினும் நின்திரு எட்டெழுத்தும்*
*கற்றுநான் கண்ண புரத்துறை யம்மானே!*

*பெரியதிருமொழி (8-10-3)*

**3) பகவத் கைங்கர்யத்துக்கு எல்லை நிலமான பாகவத கைங்கர்யமும் இந்நமப் பதத்திலேயே தெளிவாக விளங்குகிறது என்று அருளிச் செய்யும் பிள்ளையுலகாசிரியர் கருத்துக்கு உலக நடையிலிருந்து சான்று தருக.**

அன்புடன் தங்களுக்குத் தொண்டு செய்வதைக் காட்டிலும், தங்கள் குழந்தைகளுக்குப் பிறர் செய்யும் அன்பான தொண்டினையே உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் விரும்புவார்கள்.

அதுபோலவே, பகவானும் அன்புடையோர் தனக்குத் தொண்டு செய்யும் போது மகிழ்வடைதலைக் காட்டிலும் தன்னடியார்களுக்குப் பிறர் தொண்டு செய்வதைக் காணும்போதுதான் பெரிதும் மகிழ்ச்சியடைகின்றான்.

எனவே, இப்பாகவத கைங்கர்யமே நமப்பதத்தில் தோன்றும் உட்பொருள் என்றும், உயிர்நிலை என்றும் கொள்ளுதல் வேண்டும்.



**4) பாகவத கைங்கர்யத்தையே ஆழ்வார்களும் ஆழமாகச் சிந்தித்துள்ளனர் என்பதற்குச் சான்று காட்டுக.**

"அடியார்ந்த வையம் உண்டு ஆல்இலை அன்ன வசஞ்செய்யும்
படியாது மில்குழ விப்படி யெந்தைபி ரான்தனக்கு
அடியார் அடியார் தம்அடி யார்அடி யார்தமக்
கடியார் அடியார் தம்அடி யார்அடி யோங்களே!"

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி.

இப்பாசுரத்தில் அடியார்க்கு அடியாராக இருத்தலே பெருமைக்குரியது என்பதை நம்மாழ்வார் அற்புதமாக விளக்குகிறார்.

பிரளய காலத்தில் உலக்ங்களையெல்லாம் உண்டு, ஓர் ஆல் இலையில் கண்வளர்ந்து, ஒப்பில்லாத சின்னஞ்சிறு பாலகனாக உள்ள எங்கள் பெருமானுக்கு, 'அடியார்க்கு அடியார் அவ்வடியார்க்கு அடியார்' என்னும் முறையில் இறுதியடியாராக விளங்கும் அடியார்க்கு நாங்கள் அடியார்கள் என்று நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் அடியவராய் இருக்கும் தன்மையின் சிறப்பை அருளிச்செய்கிறார்.

மேலும், 'நின் திருவெட்டெழுத்தும் கற்று உற்றதும் உன்னடியார்க்கடிமை' செய்வதற்காகவே என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்கிறார்.

"தேவு மற்றறியேன் குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே" என்று பரம பாகவதரான மதுரகவியாழ்வார் தம் வாழ்நாள் முழுவதும் நம்மாழ்வாரையே தெய்வமாகக் கருதி, அவருக்குத் தொண்டு செய்து வந்தார். இவர் இயற்றியருளிய 'கண்ணிநுண்

சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தம் நமப்பதத்தின் பொருளையே காட்டுகிறதென்பர் ஞானியர்!

## மூலம் : 90

**"இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்".**

1) *பாகவத கைங்கர்யம் என்பது நமப்பதத்தில் மட்டுமின்றி மற்றைய பதங்களிலும் சொல்லப்படுகிறதா?*

*பாகவத கைங்கர்யம் என்பது நமப்பதத்தால் மட்டுமின்றி அகாரத்தால் கிடைக்கிறதென்று சிலரும், உகாரத்தால் கிடைக்கிறதென்று சிலரும் சொல்லுகின்றனர்.*

2) *பாகவத சேஷத்வம் என்பது அகாரத்தாலும் கிடைக்கிறது என்பது எங்ஙனம்?*

*அடியார்க்குக் கைங்கர்யம் செய்தல் என்பது பகவானுக்கு அடிமை பூண்டொழுகும் தன்மையைச் சொல்லுகிற அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமையால் கிடைக்கிறது என்று சிலர் சொல்கின்றனர்.*

*ஒருபொருள் ஒருவனுக்குச் சொந்தமுடையதாய் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அவன் அந்தப் பொருள் மீது அனுபவித்தல், விற்றல், தானம் செய்தல் முதலான எல்லா வகையிலும் சொந்தம் கொண்டாடலாம்.*

*அவ்வாறு தன்னுடைய எல்லா விருப்பங்களுக்கேற்பவும் அப்பொருளினை அவன் அனுபவிக்கும்போதுதான் அப்பொருள் அவனுக்கு முழுவதும் சொந்தமாகிறது.*

*அதுபோலவே, பகவானுடைய சொத்தாக - உடைமைப் பொருளாக இருக்கும் சீவான்மாவானது தன்னைப் பகவானுக்கும், பாகவதர்களுக்கும் முழுமையாக*

உரிமையாக்கும்போதுதான் சீவான்மாவின் அடிமைத் தன்மை பூர்த்தி பெறுகிறது.

இவ்வாறு விளக்கிக் கூறி அகாரத்திலும் பாகவத சேஷத்வம் உள்ளது என்பர் சிலர்.

**3) உகாரத்திலும் பாகவத சேஷத்துவம் உள்ளது என்பார் கூற்றை எடுத்துக்காட்டுக.**

சேதனன் மற்றவருக்கு அடிமைப்பட்டவன் அல்லன்; பகவான் ஒருவனுக்கே அடிமைப்பட்டவன் என்பது உகாரத்தின் பொருள் என்பது தெளிவு.

அப்படியிருக்க, சேதனன் ஆண்டவனுக்கு மட்டுமின்றி அடியவருக்கும் அடிமைப்பட்டவன் என்னும் பொருளை உகாரம் எவ்வாறு தெரிவிக்கிறது என்பதற்குச் சிலர் கூறும் கருத்தினைக் காண்போம்.

நறுமணம் என்னும் தொடரை எடுத்துக் கொள்வோம். அதில் நறு, மணம் என்று இரண்டு சொற்கள் உள்ளன.

நறு என்பது நல்லது என்னும் பொருளைத்தரும். மணம் என்பது வாசனை. வாசனையைப் போன்றது சீவனுடைய அடிமைத்தன்மை.

வாசனையின் தன்மையாக உள்ளது நன்மை. வாசனையின் நல்ல தன்மையைப் போன்றதே சீவன் பிறருக்கு உரியவனாக இல்லாமல் பகவானுக்கு மட்டுமே உரியவனாயிருத்தல். பிறர் என்று இங்குக் குறிக்கப்படுவது அடியவர்கள் அல்லாத மற்றவரையே குறிக்கும் என்று உணர்தல் வேண்டும். அப்படி உணர்ந்தால் சீவான்மா வானது பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையைப் பெற்றிருத்தல் போலவே பாகவத கைங்கர்யத்துக்கும் உரித்தாய் உள்ளது என்று உணர்கிறோம்.

இவ்வாறு உகாரம் பாகவத சேஷத்வத்தையும் உணர்த்துகிறது என்றும் சிலர் சொல்லுவர்.

*4) அப்படியாயின் பிள்ளை உலகாசிரியர் உள்ளக் கிடக்கை யாது?*

அகாரத்திலும் உகாரத்திலும் பாகவத சேஷத்வம் கிடைக்கிறது என்பதை ஆசிரியர் ஏற்றுக்கொள்ளவில்லை.

நமப்பதத்திலேயே பாகவத சேஷத்வம் சொல்லப்படுதல் மிகவும் சிறப்புடையதென்று ஆசிரியர் கருதுகிறார்.

அகங்கார மமகாரங்கள் நீங்கப்பெறாத ஒருவன் தன்னைப் போலவே உண்டும் உடுத்தும் உறங்கியும் காணப்படும் அடியார்களுக்குத் தான் ஏன் அடிமைப்பட வேண்டும் என்று எண்ணுதலும் கூடுமன்றோ?

இந்நிலையில் அவனுடைய அகங்கார மமகாரங்கள் நீங்காதன்றோ!

எனவேதான், அகங்கார மமகாரங்கள் நீங்கும் நமப்பதத்திலேயே பாகவத சேஷத்வம் சொல்லப்படுவது சிறப்புடையது என்று ஆசிரியர் கருதுகிறார்.

## மூலம் : 91

**"ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கே யாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொது வாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே தனக்கேயாக எனைக்கொள்ள வேணுமென்கிறது நமஸ்ஸால்".**

*1) நமப்பதத்தால் ஏற்படும் நினைவுகளாக ஆசிரியர் கூறுவன யாவை?*

அ) பெருமான் சுதந்தரத் தன்மையை இயல்பாகக் கொண்டவன். எனவே எம்பெருமான் தனக்கே உரியவனாய் இருப்பவன்.

ஆ) அசித்து (அறிவற்ற பொருள்) ஞானமில்லாத ஒன்று. எனக்கு நான் உரியன் என்று நினைப்பதற்கும் இயலாத அசித்து மற்றவருக்கே உரிமையுடையதாயிருக்கும்.

இ) ஆன்மாவானது தனக்கும் பிறருக்கும் பயன்படுவதாயிருக்கும் என்பதும் நமப்பதத்தின் பொருளை அறிவதற்கு முன்பு பிரணவத்தில் உண்டான நினைவுகளாம்.

ஈ) அப்படியில்லாமல் "மற்றவருக்கே பயன்படும் அசித்தைப் போன்று, பெருமானுக்கே என்னைப் பயனாக்கிக் கொள்ள வேண்டும்" என்பதும் நமப்பதத்தால் ஏற்படும் நினைவுகளாம்.

**2) நமப்பதத்தின் பொருளை உணர்வதற்கு முன்னே சேதனர்களுக்கு இருக்கக் கூடிய நினைவுகளாக ஆசிரியர் கூறுவன யாவை?**

தத்துவங்கள் மூன்று. அவை சித்து (அறிவுடையவன்) அசித்து (அறிவற்ற பொருள்) ஈசுவரன் (பகவான்) என்பன.

இம்மூன்றனுள் இறைவன் சுதந்தரத்தன்மையுடைய வனாதலால், அவன் தனக்கே உரிமையுடையவனாயிருப்பன் என்றும்; அசித்தானது அறிவற்ற பொருளாதலால் அது மற்றவருக்கே உரிமையுடையதாயிருக்குமென்றும்; சேதனன் தனக்குத்தான் உரியனாகவும் பரமனுக்கும் பாகவதர் களுக்கும் உரியனாகவும் இருப்பான் என்றும் நமப்பதத்தின் பொருளை உணர்தற்கு முன்னே இருக்கக்கூடிய நினைவுகளாம்.

*3) நமப்பதத்தின் பொருளை உணர்ந்ததற்குப் பின்னர் ஏற்படும் நினைவுயாது?*

*பிறருக்கே பயன்படுதலை இயல்பாகக் கொண்டுள்ள அசித்தைப்போன்று, "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்றபடித் தன்னைப் பகவானுக்கே பயன்படுத்திக் கொள்ளுமாறு சீவான்மா பகவானை வேண்டிக்கொள்ளும் நினைவைப் பெறுகிறது.*

## மூலம் : 92

**"அதாவது, போக தசையில் ஈச்வரனழிக்கும் போது நோக்கவேணும் என்று அழியாதொழிகை"**

*1) இம்மூலம் கூறும் கருத்து யாது?*

*91ஆம் மூலத்தின் ஈற்றடியில் "தனக்கேயாக எனைக்கொள்ள வேணுமென்கிறது நமஸ்ஸால்" என்று காணப்படும். இவ்வடியில் காணப்படும் 'தனக்கேயாக' என்பதனை விளக்குகிறது இந்த மூலம்.*

*2) இம்மூலத்தின் பொருளை விளக்குக.*

*பகவான் அடியவனோடு கலந்து மகிழும்போது, தன்னிடம் கொண்டுள்ள அன்பின் மிகுதியினால் பகவான் தன் நிலையிலிருந்தும் இறங்கி வருதலும் உண்டு.*

*அப்போது அடியவன் தன்னுடைய அடிமைத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இதனால் பகவான் தன்னிடம் இன்பம் துய்த்தலுக்குச் சேதனன் தடையாக இருக்கக் கூடாது என்பதே இதன் தேறிய பொருளாகும்.*

*பகவானுக்கே ஆனந்தம் ஏற்படுமாறு தன்னை விநியோகப்படுத்திக் கொள்ளுதல் - அர்ப்பணித்துக் கொள்ளுதல் என்பது இதுவேயாம்.*

**3) பகவான் தன்னைத் தானே அடியவனிடம் விநியோகப் படுத்திக் கொண்டு ஆனந்தம் பெற்றமைக்குச் சான்று தருக.**

மிக உயர்ந்த பக்திக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர் குசேலர். இவரும் கண்ணபிரானும் இளமைக்காலத்தில் ஒரே குருவினிடம் ஒன்றாகப் பயின்றவர்கள். குசேலருக்கு மக்கள் பேறு மிகுதியால் வறுமை வந்து சேர்ந்தது.

எனவே, தன் மனைவியின் தூண்டுதலால் குசேலர் கண்ணன் மாளிகைக்குச் சென்றார். குசேலர் வருகையைக் காவலர் கண்ணபிரானுக்கு அறிவித்தனர்.

கண்ணபிரான் ஓடோடி வந்தார். தன் நெற்றியில் அணிந்திருந்த திலகம் தரையில் படுமாறு குசேலரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்; அன்புடன் அவரை உள்ளே அழைத்துச் சென்றார். குசேலரின் திருவடிகளைக் கண்ணபிரான் தன் மடிமீது வைத்துக்கொண்டார்.

"நடந்த கால்கள் நொந்தனவோ!" என்று பரிவுடன் பகர்ந்தவாறே குசேலரின் திருவடிகளை மெல்லப்பிடித்து விட்டான் கண்ணபிரான்! கண்ணபிரான் செய்யும் உபசாரங்களுக்கெல்லாம் குசேலர் இசைந்திருந்தார்.

குசேலரின் இந்த நிலைதான் தன்னை விநியோகித்துக் கொள்ளும் பகவானின் ஆனந்தத்தைக்கெடுக்காமல் இருக்கும் சேதனனின் நிலையாகும்.

ஆனால் அதே சமயம் சேதனன் தன்னை முழுவதுமாக பகவானுக்கே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்.

கண்ணன் செய்த உபசாரங்களுக்கெல்லாம் குசேலர் மகிழ்ச்சி அடையாமல் ஒன்றுமே அறியாதவராக மெய்ம்மறந்திருந்தாராம்.

*இதுதான் அடியவனின் தற்போதம் இழந்த நிலை!*

*வழிநடந் திளைத்த வேஇம் மலரடி இரண்டும்?*
*கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினான் கமலக் கண்ணன்*
*பழியில்பல் உபசா ரங்கள் பண்ணவும் தெரியா னாகி*
*ஒழிவறு தவக்கு சேலன் ஒனறும்பே சாதி ருந்தான்*

*இப்பாடலில் இம்மூலத்தின் கருத்தினைக் கண்டு இன்புறலாம்.*

## மூலம் : 93

**"அழிக்கைக்கு ஹேது கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்."**

1) *தானே வலிய வந்து சேதனனின் இன்பத்தின் பொருட்டுப் பகவான் தன்னைப் பரிமாறிக் கொள்ளும்போது, சேதனன் பணிவுடன் பின்வாங்கிக் கொள்ள வேண்டும் என்பதன் காரணம் யாது?*

*பகவானுக்கு அடிமையாக இருந்து தொண்டு செய்தலே ஆன்ம சொரூபம் என்பதனைப் பிரணவம் கூறுகிறது.*

*நாராயண பதத்திலுள்ள நான்காம் வேற்றுமையில், சேதனன் இறைவனுக்குத் தொண்டு செய்வதே பயன் என்று கூறியுள்ளது.*

*எனவே, தன்னுடைய அடிமைத் தன்மையைத் தான் காத்துக்கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் சேதனனுக்கு ஏற்படுகிறது.*

*பகவானுக்குத் தான் கைங்கர்யம் செய்வதே முறையாய் இருக்க, பக்வான் தன்னிடம் தானாகவே வந்து தனக்குச் செய்யும் உபசாரங்களை ஏற்றுக் கொள்வது முறையன்று என்று உணர்வதால் தான் தன் பணிவைக் காட்டிப்*

பகவானுடைய இன்ப அன்புச் செயல்களை அழிக்க இடமேற்படுகிறது.

## மூலம் : 94

**"இந்நினைவு பிறந்தபோதே க்ருத க்ருத்யன்; இந்நினைவு இல்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம்; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு; இதின்றிக்கே இருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச் சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜனங்கள்; இது தன்னாலே எல்லாப் பாபங்களும் போம்; எல்லாப் பலன்களுமுண்டாம்."**

1) *"இந்நினைவு பிறந்த போதே க்ருதக்ருத்யன்" என்பதனை விளக்குக.*

*'இந்நினைவு' என்பது அத்தியந்த பாரதந்திரிய ஞானம் உண்டாகும் போது என்பதனைக் குறிக்கும்.*

*இறைவனுடன் இரண்டறக் கலந்து தன்னைப் பகவானுக்கே அர்ப்பணித்துக் கொள்ளும் நினைவு சேதனனுக்கு எப்பொழுது ஏற்படுகிறதோ, அப்பொழுதே சேதனன் தன் நன்மைக்காகத் தான் செய்யவேண்டிய எல்லா நற்காரியங்களையும் செய்து முடித்தவனாவான் என்பது இதன் பொருளாகும்.*

2) *"சொரூப பாரதந்திரிய ஞானமில்லாத போது ஏற்படும் தீமையாது?'*

*"இந்நினைவில்லாத போது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம்' என்கிறார் ஆசிரியர்.*

*தான் ஆண்டவனுக்கே உரியவன் என்னும் ஞானமில்லாதபோது, எந்தத் தீமையையும் அவன்*

செய்யாமல் இருந்தாலும் எல்லாத் தீய செயல்களையும். செய்தவனாகவே அவன் கருதப்படுவான்.

ஏனெனில், ஆண்டவனுக்கே உரித்தான ஆன்மாவாகிய பொருளை இவன் தன்னுடையதே என்று கருதுவதால், ஆண்டவனையே களவு செய்தவனாகிறான். இதனால் இவனுக்குப் பாரதந்திரிய ஞானம் நீங்கிச் சுதந்தர ஞானம் தோன்றுகிறது.

தான் ஆண்டவனுக்கே உரியவன் என்பதனை மறந்து, தான் தனக்கே உரியவன் என்று எண்ணுகிறான். எனவே, இவன் எல்லாப் பாபங்களையும் செய்தவனாகவே எண்ணப்படும் தீமையை அடைகிறான்.

3) "பாரதந்திரிய நினைவால் ஏற்படும் நன்மை யாது?"

"இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களுமுண்டு" என்று பாரதந்திரிய நினைவால் ஏற்படும் நன்மையைக் கூறுகிறார் ஆசிரியர்.

பாரதந்திரிய நினைவு உண்டாகும் போது எல்லா நன்மைகளும் ஏற்படும்.

தானதருமங்கள் செய்வதால் இறைவனிடமிருந்து எத்தகைய கருணையை - முக உல்லாசத்தைச் சேதனன் பெறமுடியுமோ அத்தகைய முக உல்லாசத்தை இந்தப் பாரதந்திரிய ஞானத்தாலேயே பெற்றுவிடமுடியும். பாரதந்திரிய நிலையில் சேதனன் செய்யும் புண்ணிய கருமங்கள் அனைத்தும் கைங்கரியத்தில் சேருமேயல்லாமல் உபாயத்தில் சேரா.

எனவேதான், தான் ஆண்டவனுக்கே உரியன் என்று எண்ணுகிற எண்ணம் ஒன்றினாலேயே எல்லா நன்மைகளையும் பெற்றுவிட முடியும் என்கிறார் ஆசிரியர்.

**4) பாரதந்திரிய ஞானம் இல்லாதவன் செய்யும் செயல்கள் பற்றி ஆசிரியர் விளக்குவன யாவை?**

சேதனனுக்குப் பாரதந்திரிய ஞானம் இருக்கும் போதுதான் பகவான் மகிழ்ச்சியடைகிறான். எனவே, பாரதந்திரிய நினைவே பகவானின் உவப்புக்கேற்ற உறுப்பாக அமைகிறது.

இந்நினைவு இல்லாதபோது, பகவானின் உவப்புக்குக் காரணமான உறுப்புகள் முதலானவைகளும், தான் இதுவரை செய்துவிட்ட பாவங்களுக்குப் பரிகாரமாகச் செய்கிற விரதம் முதலான செயல்களும் பயனற்றுப் போகின்றன என்பதனையே,

'இதின்றிக்கே இருக்கப்பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்' என்கிறார் ஆசிரியர்.

**5) பாரதந்திரிய நினைவு உண்டாவதனால் ஏற்படும் பலன்கள் பற்றி ஆசிரியர் கூறுவன யாவை?**

பாரதந்திரிய எண்ணம் ஏற்பட்ட உடனேயே இறைவன் சேதனனுக்கு அருள்புரியத் தொடங்குகிறான். இறைவனால் வெறுக்கப்படும் எல்லாப் பாபங்களும் சேதனனை விட்டு நீங்குகின்றன. இவனுக்குச் செய்ய வேண்டியவற்றை யெல்லாம் ஆய்ந்து ஆய்ந்து மேலும் மேலும் இறைவன் உதவி புரிகிறான். இதனால் இவனுக்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களும் இவனைவிட்டு நீங்குகின்றன. இறைவனுக்குக் கைங்கர்யம் செய்யும் பலனையும் அடைகிறான்.

பாபங்கள் யாவும் நீங்கப் பெற்றுப் பயன்கள் அனைத்தையும் சேதனன் பெறுவதற்குப் பாரதந்திரிய நினைவே காரணமாகிறது என்பதனை ஆசிரியர் அழகாக விளக்குகிறார்.

6) நமப்பதத்தின் பொருளாகக் கூறியுள்ளவற்றைத் தொகுத்து வரைக.

78 முதல் 94 வரையுள்ள மூலங்களில் நமப்பதத்தின் பொருளை ஆசிரியர் விளக்குகிறார்.

"நம: என்பதில் ந, ம என்னும் இரு பதங்கள் உள்ளன. இவற்றுள் ம: என்பது 'தனக்கு உரியன்' என்பதைத் தவிர்க்கிறது. எனவே, 'தனக்குத்தான் உரியன் அல்லன்' என்னும் பொருளை நமப்பதம் தெரிவிக்கிறது.

தனக்கும் பிறருக்கும் உரித்தன்று என்பதைத் தெரிவிக்கும் உகாரத்தை விவரிப்பதாக இந்நமப்பதம் இருப்பினும், தனக்குத்தான் உரியன் அல்லன் என்பதையே இது முக்கியமாக விவரிக்கிறது.

இப்பதம் சில விரோதிகளைப் போக்குகிறது. சொரூபவிரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி எனப்படும் இம்மூன்று விரோதிகளும் நீங்குதற்குச் சேதனன் குறிப்பிட்ட சில நினைவுகளைக் கொள்ளுதல் வேண்டும்.

ம: என்பது சொரூபநாசம், நம: என்பது சொரூப உய்வு, இப்பதம் சொரூபத்தையும் உபாயத்தையும் பயனையும் காட்டும். இதற்குச் சான்றாக ஆழ்வார்கள் பாசுரங்கள் பல உள்ளன.

இந்நமப்பதத்தில் பாகவத சேஷத்வமும் அடங்கியுள்ளது. இப்பாகவத சேஷத்வம் அகாரத்தில் சொல்லப்படுகிற தென்று சிலரும், உகாரத்தில் சொல்லப்படுகிறதென்று சிலரும் சொல்லுவார்கள்.

சுதந்தரனான இறைவன் தனக்கே உரியவனாயும், பரதந்திரமான அசித்து பிறருக்கே உரித்தானதாயும், ஆன்மா

தனக்கும் பிறருக்கும் பொதுவானதாயும் இருக்கும் என்பது இந்நமப்பதத்துக்கு முன்பிருந்த நினைவு.

அங்ஙனமின்றி, அசித்தைப் போன்று பகவானுக்கே எனைக் கொள்ள வேண்டும் என்பது இந்நமப்பதத்தில் பிறந்த எண்ணம். பகவான் இறங்கி வந்து சேதனனோடு பரிமாறுங்கால் தன் சேஷத்துவ சொரூபத்தைத்தான் நோக்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணி அவனுடைய போகத்தை அழித்தல் கூடாது.

இங்ஙனம் அழிப்பதற்குக் காரணம் முன்னுள்ள பிரணவத்தில் சொல்லியது மட்டுமின்றி, பின்னுள்ள சதுர்த்தியிலும் சொல்லப்பட்டுள்ளது.

பாரதந்திரிய நினைவு ஏற்பட்டபோதே தன் நன்மைக்கு அதிகாரமாய் உள்ளவற்றையெல்லாம் செய்து முடித்தவனாவான். இந்நினைவில்லாதபோது தீச்செயல்கள் பல இவன் செய்ததாகவே முடியும். இந்நினைவில் எல்லா நலன்களும் உண்டாகும்.

இந்நினைவின்றிச் செய்யப்படும் புண்ணிய பாவமாகிய கன்மங்கள் பயனற்றவையே! எனவே, இது எல்லாப் பாபங்களையும் போக்கி, எல்லாப் பயன்களையும் தரும்,"

என்னும் கருத்துகள் நமப்பதத்தின் பொருளாகக் கூறப்பட்டுள்ளன.

**நம: பதப் பொருள் முற்றிற்று.**

# நாராயண பதப்பொருள்

## மூலம் : 95

**"நாராயணன் என்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி"**

**(இதுவரை 'ஓம்' 'நம:' என்னும் பதங்களை விளக்கியரு ளினார் ஆசிரியர். இனி, 'நாராயண' என்பதன் பொருளை விளக்குகிறார்.)**

*1) 'நாராயண' என்பதன் பொருள் யாது?*

*நாராயண என்னும் திருநாமம் வடமொழிச் சொல். இச்சொல்லுக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்.*

i) *"நாராணாம் + அயநம் ய:ஸ:" என்று பிரித்தால், நாரங்களுக்கு ஆதாரமாய் இருப்பவன் எவனோ அவனே நாராயணன் என்னும் பொருள் கிடைக்கும். இது தத்புருஷஸமாஸம்.*

ii) *"நாரா: அயநம் யஸ்ய, ஸ:" என்று பிரித்தால், எவன் நாரம் ஒவ்வொன்றிலும் பூரணமாய் இருக்கின்றானோ அவனே நாராயணன் என்று பொருள் கிடைக்கும். இது பஹுவ்ரீஹி ஸமாஸம் எனப்படும்.*

## மூலம் : 96

"நாரங்களாவன, நித்ய வஸ்துக்களினுடைய திரள்"

*1) நாரங்கள் என்றால் என்ன?*

*நித்ய வஸ்துக்களினுடைய திரள்களே நாரங்கள் எனப்படும். வடமொழியில் 'ர' என்னும் சொல்லுக்கு அழிவுள்ளது என்பது பொருள். 'ந' என்பதற்கு இல்லை என்பது பொருளாகிறது.*

*'நர' என்னும் சொல் 'நார' என்றாகும் போது அழிவில்லாத பொருள்களின் திரள் என்றாகிறது.*

*எனவே, 'நாரா:' என்னும் சொல் நித்திய வஸ்துக்களின் திரள் எனப்பொருள் தரும் என்பது தெளிவாகிறது.*

## மூலம் : 97

"அவையாவன: (1) ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும், (2) ஜ்ஞாந சக்த்யாதிகளும், (3) வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், (4) திருமேனியும், (5) காந்தி ஸௌகுமார்யாதிகளும், (6) திவ்ய பூஷணங்களும், (7) திவ்யாயுதங்களும் (8) பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும் (9) நித்யஸூரிகளும், (10) சத்ர சாமராதிகளும், (11) திருவாசற் காக்கும் முதலிகளும் (12) கணாதிபரும், (13) முக்தரும், (14) பரமாகாசமும், (15) ப்ரக்ருதியும் (16) பத்தாத்மாக்களும், (17) காலமும், (18) மஹதாதி விகாரங்களும், (19) அண்டங்களும், (20) அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்."

*1) இம்மூலத்தில் ஆசிரியர் எவற்றை விரிவாகக் குறிப்பிடுகிறார்?*

நித்திய வஸ்துக்களின் திரள்களை இம்மூலத்தில் ஆசிரியர் விரிவாக விளக்கிக் கூறுகிறார்.

**2) நித்திய வஸ்துக்களின் திரள்கள் என்பவை யாவை?**

பரமாத்மா நீங்கலாக உள்ள மற்றைய பொருள்கள் அனைத்தையும் 'நார' என்னும் பதம் குறிக்கிறது. எனவே, சித்து, அசித்து, பரமாத்மாவின் கல்யாண குணங்கள் முதலான அனைத்துப்பொருள்களுமே நித்திய வஸ்துக்களின் திரள்கள் எனப்படும்.

**3) ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகள் - விளக்குக.**

ஞானத்துவம், ஆனந்தத்துவம், அமலத்துவம், சத்தியத்துவம், அநந்தத்துவம் ஆகியவை பரமாத்மாவுக்குச் சொரூபக நிரூபக தருமங்கள் (எடுத்துக் காட்டப்படும் குணங்கள்) எனப்படும்.

**4) ஞானத்துவம் - விளக்குக.**

ஞானத்துவம் என்பதற்கு அறிவின் தன்மை என்பது பொருளாகும். உள்ளும் புறமும் உப்பாகவே இருக்கும் உப்புக்கட்டி! அதைப்போலவே, பரமாத்வாவும் முற்றும் ஞானமாகவே இருக்கிறார். ஞானத்தின் தன்மையே இறைவனின் இயல்பாகும். வாலறிவன் என்பார் வள்ளுவரும்!

**5) ஆனந்தத்துவம் - விளக்குக.**

ஆனந்தப்படும் பொருளின் தன்மை என்பது இதன் பொருளாகும். தேன், பால், கரும்பு முதலியன உண்ணுங்கால் நமக்கு இன்பத்தை அளிக்கிறது. எனவே அவற்றை நாம் விரும்புகிறோம். அவை ஏன் நம்மால் விரும்பப்படுகின்றன

என்று கேட்டால், அதற்கு நம்மால் என்ன பதில் கூறமுடியும்?

அதுபோலவே, பிரமம் நம்மால் விரும்பப்படும் பொருளாக உள்ளது. இந்தத் தன்மையே ஆனந்தத்துவம் எனப்படும்.

**6) அமலத்துவம் விளக்குக.**

தானும் குற்றமற்ற பொருளாக இருந்து, மற்றைய பொருள்களின் குற்றங்களையும் போக்குவது எதுவோ அதுவே அமலத்துவம். நமலத்துவம் அமலத்துவம் இவ்விரண்டும் ஒரே பொருளைத் தரும் சொற்களாம்.

**7) ஸத்தியத்துவம் - விளக்குக.**

அசித்துக்குள்ள பண்பின் வேறுபாடு, வடிவ வேறுபாடுகளும் சித்துக்குள்ள பண்பின் விகாரங்களும் அற்றிருப்பது எதுவோ அதுவே சத்தியப்பொருளாகும். அதன் தன்மையே சத்தியத்துவம்.

**8) அநந்தத்துவம் - விளக்குக.**

எல்லாத் தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும், எல்லாப் பொருள்களிலும் ஆன்மாவாக இருப்பது எதுவோ, அதுவே அநந்தப் பொருளாகிய தத்துவம் எனப்படும்.

(இதுவரை மலருக்குள்ள மணத்தைப் போன்று, பிரமத்துக்குரிய குணங்களைக் கூறினார். அதாவது பகவானை எடுத்துக் கூறினார்.

இனி மலருக்குள்ள நிறம் முதலிய குணங்களைப் போன்று பிரமத்துக்குரிய குணங்களைக் கூறத் தொடங்குகிறார்.)

9) ஜ்ஞான சக்த்யாதிகள் - விளக்குக.

ஞானம், சத்தி, பலம், ஐஸ்வர்யம், வீரியம், தேஜஸ் எனப்படும் குணங்கள் ஆறும் நிரூபித சொரூப விசேஷணங்களாம். அதாவது இறைவனின் திருமேனியை விளக்கும் குணங்களாம்.

10) ஞானம் - விளக்குக.

எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும் உள்ள எல்லாப் பொருள்களிலும் பண்பு பண்பிகளையும் ஒன்றுவிடாமல் ஒரே இடத்தில் கண்கூடாகக் காணுதலே ஞானம் எனப்படும்.

11) சத்தி - விளக்குக.

சத்தி என்பது பகவானுக்குப் பலவிதமாக உள்ளது. உலக உயிர்கள் யாவற்றையும் ஒரே சமயத்தில் நடத்தும் சத்தியே பகவானுக்குள்ள சத்தியாம்.

12) பலம் - விளக்குக.

தன்னுடைய உறுதிப்பாட்டினால் - ஆற்றலால் எல்லாப் பொருள்களையும் தாங்கிக்கொள்ளும் வல்லமையே பலம் எனப்படும்.

13) ஐசுவரியம் - விளக்குக.

எல்லாப் பொருள்களையும் நியமித்து நடத்தும் திறமையே ஐசுவரியம் எனப்படும்.

14) வீரியம் - விளக்குக.

உலகப்பொருள்கள் யாவற்றையும் உண்டாக்கித் தான் யாதொரு விகாரமுமின்றி இருத்தல், அவற்றை நடத்திக்கொண்டு போகுங்கால் தளர்ச்சியின்றி இருத்தல் ஆகியவை வீரியம் எனப்படும்.

*15) தேஜஸ் - விளக்குக.*

சூரியன் முன் நட்சத்திரங்கள் முதலியன ஒளி வீசா. அதைப்போன்று பகவான் முன், மற்றைய பொருள்கள் ஒளிவீசா. மற்றவற்றின் ஒளியைத் தன் ஒளியால் மங்கச் செய்யும் தன்மையே தேஜஸ் எனப்படும்.

(இவை ஆறும் பகவானுக்குள்ள முக்கிய குணங்களாம்.)

*16) வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகள் யாவை?*

வாத்ஸல்யம், ஸௌசீல்யம், ஸ்வாமித்வம், ஸௌலப்பியம் முதலான எண்ணற்ற கல்யாண குணங்கள் பகவானுக்குள்ளன. இவை பக்தர்களையும், (ஞானிகள்) பிரபன்னர்களையும் காத்தலுக்குரிய குணங்களாம்.

குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் அளவற்ற அன்பே வாத்சல்யம் எனப்படும்.

(வாத்சல்யம் முதலானவை மேற்சொன்ன குணங்கள் ஆறினையும் சார்ந்தவையாம்.)

*17) ஸௌசீல்யம் - விளக்குக.*

உயர்ந்தவர் தாழ்ந்தவரோடு கலக்கும்போது, தன் உயர்வும் தன்னுடன் கலப்பவனுடைய தாழ்வும் நெஞ்சில் சிறிதும் தோன்றாது குற்றமின்றிக் கலக்கும் பண்பே ஸௌசீல்யம் எனப்படும்.

*18) ஸ்வாமித்வம் - விளக்குக.*

தன்னையொழிந்த மற்றைய அனைத்துப் பொருள் களுக்கும் தலைவனாயிருக்கும் பண்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

*19) ஸௌலப்பியம் - விளக்குக.*

யாவரும் தன்னை வந்து பற்றுவதற்கு எளியவனாய் இருக்கும் தன்மையே ஸௌலப்பியம் எனப்படும்.

**20) 'திருமேனி' - விளக்குக.**

*திருமேனி என்பது பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தைக் குறிக்கும். நமக்குள்ள ஐம்பூதங்களாலான சரீரம் போன்று ஆண்டவனின் சரீரம் இல்லை. ஆனால், பகவானின் பெருமைக்கு ஏற்ற வண்ணம் மேலான சரீரம் ஒன்று உண்டு. அதுவே திருமேனி எனப்படும்.*

**21) "காந்தி ஸௌகுமார்யாதிகள்" விளக்குக.**

*அழகு, மென்மை, மணம், இளமை, பருவம் முதலியன விக்கிரகத்துக்குள்ள குணங்களாகும்.*

**22) அழகு - விளக்குக.**

*அழகு இருவகைப்படும். (1) அவயவத் திரளின் அழகு (2) தனித்தனி அவயவத்தின் அழகு.*

*அவயவத்தின் திரள் அழகாக இருந்தால், தனித்தனி உறுப்புகள் அழகாயிருத்தல் என்பது பெரும்பாலும் காணமுடியாத ஒன்று. அப்படியே அழகுடன் விளங்கினாலும் காலவேறுபாட்டால் அவை ஒரு சமயத்துக்கு ஒரு சமயம் அழகிழத்தலும் கூடும்.*

*ஆனால். உறுப்புகளின் திரளிலும், தனித்தனி உறுப்புகளின் அழகிலும் எல்லாக் காலத்தும் ஒரே மாதிரியாக விளங்குவது பகவானுடைய திவ்விய மங்கள விக்கிரகமேயாகும்.*

*ஏனெனில், பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் அழகு கன்ம பலத்தால் ஏற்பட்டதன்று. அந்த அழகு இயற்கையிலேயே அமைந்ததாகும்.*



*23) மென்மை - விளக்குக.*

மென்மை என்பது இருவகைப்படும். அவை ஆன்ம மென்மை, விக்கிரக மென்மை என்பன. இங்குக் குறிப்பிடுவது விக்கிரக மென்மையேயாகும்.

பூவைத் தொடுவது போன்று, பிராட்டியார் பகவானின் திருவடிகளைக் கூசிப் பிடிப்பர். அத்தகைய மென்மையான திருவடிகளையுடையவர் பகவான் என்பதில் இருந்து அவனுடைய விக்கிரக மென்மை நுண்ணிதின் புலப்படும்.

அத்தகைய மென்மையான திருவடிகள்தாம் அன்று இந்த உலகத்தையும் அளந்தன.

"அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி!" என்று எம்பெருமான் திருவடிகளுக்கு மங்களாசாசனம் செய்த ஆண்டாள் திருவாக்கின் மென்மையும் அனுபவித்து இன்புறத் தக்கதே!

*24) மணம் - விளக்குக.*

மலர்கள் பல்வேறு வகையாக மலர்ந்து பல்வேறு மணத்தைப் பரப்பி நிற்பதைப் போலவே, பகவானிருக்கு மிடத்திலும் பல வகையான மணங்கள் வீசி நிற்கும். நறுமணம் வீசும் இவ்வியல்பு இறைவன் திருமேனியின் குணமாகும்.

*25) பருவம் - விளக்கு.*

இறைவன் எப்போதும் இளமைப் பருவமுடையவனாகவே இருப்பான். அவனுக்கு நரை, திரை, மூப்பு முதலியன இல்லை. இறைவனுக்குள்ள பருவம் என்றும் இளமையழகு நிறைந்த பருவமேயாகும்.

**26) திவ்ய பூஷணங்கள் யாவை?**

இறைவன் திருவடிகளில் விளங்கும் நூபுரம் முதல் திருமுடியில் அணியும் திருவபிஷேகம் (மகுடம்) வரையும் உள்ள ஆபரணங்கள் திவ்ய பூஷணங்கள் எனப்படும். மென்மை, அழகு, மணம், ஒளி முதலியன இவைகட்கு உண்டு.

பகவானின் திருவாபரணங்கள் குற்றமற்றவை. அவனுடைய அங்கங்களுக்கு மலர் பூத்தது போன்று பொருத்தமுடையவை.

பகவானுடைய ஆபணங்களுக்குத் "திவ்யாபரண ஆழ்வார்கள்" என்னும் திருநாமமும் உண்டு.

பகவானுடைய ஆபரணங்களாவன:

திருவபிஷேகத்தின் கீழ்ச்சுற்று, மேல் கவிப்பு, திருச்செவிமலர், மகாரகாரமான தோடு, திருவட்ட மணி, திருவாரம், திருத்தோள் வளை, திருவணை, திருமறு, ஸ்ரீகௌஸ்துபம், முத்தாரம், திருவுதரபந்தனம், திருப்பீதாம்பரம், அரைநூல்பட்டிகை, நூபுரம் முதலியனவாம்.

இவையேயன்றி, பகவானின் ஆபரணங்கள் எண்ணிறந்தனவாம். இவை எம்பெருமானார் கத்தியத்தில் காணப்படும் ஆபரணங்களைப் பற்றிய செய்திகளாம்.

**27) திவ்யாயுதங்கள் யாவை?**

சங்கு, சக்கரம், கதை, சாரங்கம், கட்கம் (வாள்) முதலியன பகவானின் எண்ணிறந்த ஆயுதங்களாம்.

இவ்வாயுதங்கள் பகவானை வெறுப்போர்க்கு ஆயுதங்களாகவும், பக்தர்களுக்கு அணிகலன்களாகவும் தோன்றும்.

***28) பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்கள் யாவர்?***

பெரிய பிராட்டியார், பூமிப்பிராட்டியார், நப்பின்னைப் பிராட்டியார் முதலான தேவிமார்களும் மற்றும் ஆயிரம் தேவிமார்களும் பகவானுக்குரிய தேவிமார்களாக அலங்கரிக்கின்றனர்.

***29) நித்ய ஸூரிகள் யாவர்?***

அனந்தன் (ஆதிசேஷன்), கருடன், விஷ்வக்சேனர் முதலானோர் நித்ய சூரிகளாவர்.

பரமபதத்தில் காலதத்துவம் உள்ளளவும் பகவானை அனுபவித்துக்கொண்டு கைங்கர்யம் செய்பவர்களுக்கு நித்ய சூரிகள் என்று பெயர்.

***30) சத்ர. சாமராதிகள் யாவை?***

குடை, சாமரம், திருவாலவட்டம், வட்டில், படிக்கம் முதலியன சத்ர சாமராதிகள் எனப்படும். பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும்போது இவை இன்றியமையாது தேவைப்படும்.

***31) திருவாசற்காக்கும் முதலிகள் யாவர்?***

எம்பெருமானுக்கு ஏதும் நிகழாதிருக்க வேண்டுமே என்னும் ஏக்கத்துடன் வாயிலைக்காத்து நிற்போர் திருவாசல் காக்கும் முதலிகள் எனப்படுவர்.

சண்டன், பிரசண்டன், பத்ரன், சுபத்ரன், ஜயன், விஜயன் முதலானோர் திருவாசல் காக்கும் முதலிகளாவர்.

இவர்கள் பகவான் கோவில் கொண்டிருக்கும் திருவாசலி லேயே நின்றுகொண்டு அவனுக்கு மங்களாசாசனம் செய்வர்.

*32) கணாதிபர் யாவர்?*

குமுதன், குமுதாட்சன் எனப்படுவோர் கணாதிபர் எனப்படுவர். இவர்கள் எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுபவராய், பரமபதத்துக்குக் காவலாய் இருப்பார்கள்.

அதாவது, எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருத்தலத்துக்கே காவலராய் இருப்பவர்கள் இவர்கள்.

*33) முக்தர் எனப்படுவோர் யாவர்?*

நம்மைப்போன்று சம்சாரிகளாக இருந்து முக்தி பெற்றவர்கள் முக்தர் எனப்படுவர்.

சுகர், வாமதேவர் முதலானோர் முக்தராவார். நித்திய சூரிகளோடு இவர்களும் கலந்துகொண்டு பகவானைப் பரம பதத்தில் அனுபவித்துக் கைங்கர்யம் செய்து வாழ்கிறார்கள்.

*34) பரமாகாசமாவது யாது?*

பரம பதமே பரமாகாசம் எனப்படும்.

பஞ்ச உபநிஷத்துகள் என்னும் ஐந்து பொருள்களால் ஆக்கப்பட்ட கூட்டுப்பொருள்களாகவே பரமாகாசம் உள்ளது.

(இதுகாறும் கூறப்பட்டவை நித்திய விபூதியிலுள்ள நாரங்களாம். இனி வருவன இவ்வுலகிலுள்ள நாரங்களாம்.)

*35) ப்ரக்ருதி என்பது யாது?*

சத்துவம், ரஜஸ், தமஸ் எனப்படும் முக்குணங்களோடும் கூடிய அசித்துத் தத்துவம் பிரகிருதி எனப்படும்.

*36) பத்தாத்மாக்கள் யாவை?*

இவ்வுலகுக்குள் உருமாய்ந்து கிடக்கும் ஆன்மாக்கள் பத்தாத்மாக்கள் எனப்படும். பந்தத்துள் அழுந்திக்கிடக்கும் ஆன்மாக்கள் இவை.

 

37) காலம் எனப்படுவது யாது?

சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய இம்முக்குணங்களும் இல்லாத அசித்து காலம் எனப்படும்.

இமை கொட்டுதல் (நொடி) முதலாக ஆண்டு வரையுள்ள மாறுதலடையக்கூடிய காலதத்துவமே காலம் எனப்படும்.

38) மஹதாதி விகாரங்கள் யாவை?

மகான், அகங்காரம், பஞ்ச பூதங்கள், ஞானேந்திரியங்கள் முதலியன மஹதாதி விகாரங்கள் எனப்படும்.

39) அண்டங்கள் யாவை?

கீழ் ஏழு உலகங்கள், மேல் ஏழு உலகங்கள் ஆகிய பதினான்கு உலகங்களைக் கொண்டது ஓர் அண்டம் எனப்படும். இதுபோன்று எண்ணற்ற அண்டங்கள் உள்ளன.

40) அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்கள் யாவை?

அண்டத்தில் உள்ள தேவர், மனிதர், பறவைகள் முதலியன அண்டத்துக்குட்பட்டவையாம்.

41) சொரூபதோ நித்தியங்கள் என்றால் என்ன?

உற்பத்தியும் அழிவுமில்லாமல் எப்பொழுதும் உள்ளவை சொரூப நித்தியங்கள் எனப்படும்.

"ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும்" என்று தொடங்கி, "காலமும்" என்பதுவரை கூறப்பட்டவை.

42) பிரவாஹதோ நித்தியங்கள் என்றால் என்ன?

உற்பத்தியும் அழிவுமிருந்தாலும் முன்பிருந்த நாமம், ரூபம், முதலியன மாறாமல் இருக்கும் பொருள்கள் பிரவாஹ நித்தியங்கள் என்ப்படும். இவை ஆற்றொழுக்கு போல் நிலைத்து நில்லாமல் ஓடிக்கொண்டேயிருப்பனவாம்.

## மூலம் : 98

**"அயநம் என்றது - இவற்றுக்காச்ரயமென்றபடி" (இதுவரை நாரபதத்தின் பொருளைக் கூறியவர், இனி அயநபதத்தின் பொருளைக் கூறத் தொடங்குகிறார்.)**

1) ***அயநம் என்பதன் பொருள் யாது?***

*நித்திய வஸ்த்துகளின் திரள்கள் என்று முன்பு கூறிய எல்லாப் பொருள்களுக்கும் பெருமான் ஆதாரமாய் இருக்கிறான் என்பதே அயநம் என்பதன் பொருளாகும்.*

## மூலம் : 99

**"அங்ஙனன்றிக்கே, இவை தன்னை ஆச்ரயமாக வுடைய னென்னவுமாம்."**

1) ***அயநம் என்பதற்குக் கூறும் வேறு பொருள் யாது?***

*பெருமான் அப்பொருள்களைத் தனக்கு ஆதாரமாக உடையவன் (எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருப்பவன் என்பதும் ஒரு பொருளாம்.) என்பதும் வேறு ஒரு பொருளாம்.*

## மூலம் : 100

**"இவையிரண்டாலும் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்."**

1) ***மேற்கூறிய இரண்டு வகைப் பொருளால் தெளிவாகும் கருத்து யாது?***

*தன்னைத் தவிர மற்றெல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக இருப்பவன் பெருமான். இவ்வாறு இருப்பதனைப் பரத்துவம் என்பர். இது தத்புருஷ ஸமாஸத்தில் தேறிய பொருள்.*

இங்ஙனம் உயர்ந்த தன்மை வாய்ந்த பெருமான் சேதனா சேதனங்களில் தன்னை அமைத்துக்கொண்டு இருத்தலே சௌலப்பியம் எனப்படும். இது பகுவிரீஹி ஸமாஸத்தில் தேறிய பொருளாம்.

இவை தவிர ஒவ்வொரு ஸமாஸத்திலும் (வேற்றுமை யிலும்) பரத்துவ சௌலப்பியங்கள் ஆகிய இரண்டையும் தேறிய பொருளாகக் கொள்ளலாம்.

## மூலம் : 101

**"அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாக வுமாம்"**

1) *அந்தர்யாமித்வம்* - **விளக்குக.**

(பகுவிரீஹி ஸமாஸத்தில், முற்கூறியபடி) ஒவ்வொன்றிலும் உட்புக்கிருந்து நியமித்துக் கொண்டு போகிறவன் பகவான் என்பதை அறிந்தோம். அங்ஙனம் இருத்தலே அந்தர்யாமித்வம் எனப்படும்.

நாராயணபதத்தில் உள்ள அயந பதத்திற்கு உபாயம், உபேயம் என்னும் இரண்டு பொருள் கிடைக்கிறது.

தத்புருஷ ஸமாஸத்தில் பகவான் உபாய உபேயமாயிருக்கிறான் என்னும் பொருள் கிடைக்கிறது. அறிவற்ற அசேதனங்கள் தவிர, ஞானம் உள்ள சீவான்மாக்களுக்கும் பகவான் உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பவன் என்பது தெளிவாகப் புலனாகும்.

## மூலம் : 102

**" 'எம்பிரான் எந்தை' என்கையாலே ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும்."**

*1) எல்லா உறவுமுறையுமாகப் பகவான் இருக்கிறார் என்பது எங்ஙனம்?*

*நாராயணன் என்னும் திருநாமத்தை நாவார ஓதும் (அநுஸந்தானம்) திருமங்கையாழ்வார், பகவான் எல்லாவித உறவுமுறையுமாக இருக்கிறான் என்பதனைத் தம் பாசுரத்தில் அருளிச் செய்கிறார்.*

*"எனக்கு உதவி செய்பவனாகவும், தந்தை முதலிய எல்லா உறவு முறையாகவும், என்னை ஆள்பவனாகவும், என்னுடைய வாழ்நாளாகவும் நாராயணன் இருக்கிறான்" என்று திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிறார்.*

## மூலம் : 103

**"நாம் பிறர்க்கான வன்றும், அவன் நமக்காயிருக்கும்."**

*1) பகவான் நமக்கு உறவாக இருந்து நமக்குச் செய்வது யாது?*

*நாம் பிறரோடு சேர்ந்து கொண்டு, எம்பெருமானை மறந்து அவர்களுடன் கலந்து உறவாடியிருக்கும் போதும் பகவான் நம்மை விடாது பற்றி நமக்கு நல்லவனாகவே இருந்து வேண்டிய அனைத்து உதவிகளும் செய்து காப்பாற்றி வருகிறான்.*

## மூலம் : 104

**"இரா மடமூட்டுவாரைப்போலே, உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரும்."**

*1) நாம் பிறரைச் சார்ந்து இருந்தாலும் பகவான் நம்மருகிலேயே இருந்து கொண்டு உதவுவான் என்பதனை விளக்குக.*

*ஆணவம் மிகுந்த பிள்ளையொருவன் தன் தாயைப் பிரிந்து சென்றான். அங்கும் இங்கும் அலைந்தான். முடிவில்*

சத்திரம் ஒன்றைக் கண்டான். அங்கே மூன்றுநாள் அவனுக்கு உணவும் உறைவிடமும் இலவசமாகக் கிடைத்தது.

ஒருவர் அந்தச் சத்திரத்தில் தங்குவதானால் மூன்று நாட்கள் மட்டுமே தொடர்ச்சியாகத் தங்கலாம். நான்காம் நாள் வேறு எங்காவது இருந்துவிட்டு மீண்டும் தான் அந்தச் சத்திரத்துக்கு வரமுடியும்.

இவ்வாறு ஒருவர் தொடர்ச்சியாக மூன்று நாட்கள் மட்டுமே தங்கி உணவருந்தலாம் என்பது அந்த மடத்தின் விதி.

அதன்படி அந்தப் பிள்ளை நான்காம் நாள் அந்தச் சத்திரத்தைவிட்டு நீங்கி வேறொரு இடத்தில் அநாதையாகத் தங்கியிருந்தான். உணவின்றிப் பசியோடு களைத்திருந்தான்.

அப்போது அவன் தாய் தன் மகன் தங்கியிருக்கும் இடத்தை அறிந்து, தன்னை வெளிக் காட்டிக்கொள்ளாமல், தான் கொண்டு சென்ற உணவைத் தன் மகன் அருந்துமாறு செய்து ஆதரிப்பாள்.

அதுபோலவே, எல்லா உறவின் முறையாகவும் இருந்து இறைவனும் உயிர்களைக் காப்பாற்றுகிறான்.

ஆணவத்தால் நாம் அவனை வணங்காமலும், அவனைச் சார்ந்து தொண்டு புரியாமலும் இருக்கும் காலத்தும் அவன் நமக்கு உதவி புரிகிறான். நம் கண் எதிரே தோன்றாமல் இருந்தாலும், அந்தர்யாமியாக இருந்து கொண்டு நம் ஆக்கம் கருதி, நமக்கு வேண்டும் நலன்கள் யாவும் புரிந்து பகவான் நம்மை வாழ்விக்கிறான்.

## மூலம் : 105

**"ஆய என்கிற இத்தால் - சென்றாற் குடையாம்" என்கிற படியே எல்லா அடிமைகளும் செய்யவேணும் என்று அபேக்ஷிக்கிறது."**

***1) ஆய என்னும் வேற்றுமையானது தெரிவிக்கும் செய்தி யாது?***

*"நாராயணாய" என்பதில் உள்ள 'ஆய' என்னும் வேற்றுமையானது, சேதனன், ஈசுவரனுக்கு எல்லாத் தொண்டுகளையும் புரிய வேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது.*

*"சென்றால் குடையாம் இருந்தால்சிங் காதனமாம்*
*நின்றால் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்*
*அணையாம் திருமாற் கரவு"*

*53, முதல் திருவந்தாதி*

*அனந்தாழ்வான் (ஆதிசேஷன்) எம்பெருமானுக்குப் பல வகையாலும் கைங்கர்யம் செய்து வருதலை இப்பாசுரம் விளக்குகிறது.*

*"எம்பெருமான் உலாவுங்கால் குடையாகவும், எழுந்தருளியிருக்குங்கால் அரியணையாகவும், நின்று கொண்டிருக்குங்கால் பாதுகையாகவும், பரந்த கடலில் திருப்பள்ளி கொள்ளுதற்குரிய மெத்தையாகவும், ஒளிமிக்க மங்கள விளக்காகவும், அழகான உடையாகவும் (திருப்பரிவட்டம்) தழுவி மகிழ்தற்குரிய அணையாகவும் ஆதிசேஷன் என்னும் அரவு பலவகையாலும் திருமாலுக்குப் பணிவிடை செய்கிறது என்று பொய்கையாழ்வார் தம் பாசுரத்தில் விளக்கியுள்ளமை அறிந்து இன்புறுவதற் குரியதாகும்.*

## மூலம் : 106

" 'நமஸ்ஸாலே' தன்னோடு உறவில்லை என்று வைத்துக் கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கக் கூடுமோ? என்னில்,"

## மூலம் : 107

" 'படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!' என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தனை வந்தேறியன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்"

1) *நம என்னும் பதத்தால் சேதனன் அத்தியந்த பரத்தன் (ஆண்டவனுக்கே தொண்டு புரிய உள்ளான்) என்பது சொல்லப்பட்டது. அப்படியிருக்கப் பகவானுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்பது சுதந்தரத்தின் பாற்படாதா?*

*நம என்னும் பதத்தாலே சேதனன் தனக்கென்று ஒன்றையும் விரும்பிச் செய்வதற்குச் சுதந்தரமற்ற அத்தியந்த பரதந்தரன் என்பதை அறிந்தோம்.*

*ஆனால், இந்த ஆய என்னும் பதம் சேதனன் பகவானுக்கு எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வதற்கு வேட்கைகொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறது என்பது எவ்வாறு என்பதைப் பார்ப்போம்.*

*"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!" என்பது குலசேகரர் திருவாக்கு.*

*அத்தியந்த பாரதந்தரியமுள்ள சீவன் பகவானுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்னும் வேட்கை அகங்காரத்தின் அடிப்படையில் இடையில் தோன்றியதன்று.*

தலைவனான பகவானுக்குத் தான் அடிமை செய்வது தன்னுடைய இயல்பு என்னும் எண்ணத்தில் தோன்றியதாம். எனவே இது சுதந்தரத்தின் பாற்படாது என்பது தெளிவு.

*2) கைங்கர்யம் எத்தனை வகைப்படும்?*

கைங்கர்யம் மூன்று வகைப்படும். அவையாவன:

(i) தனக்கு மட்டும் இன்பம் கிடைக்க வேண்டும் என்னும் அகங்காரத்தோடு பகவானுக்குச் செய்யும் கைங்கர்யம்.

(ii) தனக்கும் பகவானுக்கும் இன்பம் கிடைக்க வேண்டும் என்னும் பொதுநோக்குடன் செய்யும் கைங்கர்யம்.

(iii) தான் செய்யும் கைங்கர்யம் ஈசுவரனுக்கு மட்டுமே இன்பம் அளிக்க வேண்டும் என்கிற அத்தியந்த பாரதந்திரிய எண்ணத்தோடு செய்கின்ற கைங்கர்யம்.

*3) இம் மூன்று கைங்கர்யத்துள் எது தக்கது? ஏன்?*

பகவானுக்கு மட்டுமே செய்யப்படும் கைங்கர்யமே சிறந்தது. சேதனன் பகவானுக்கு அடிமையாய் இருந்து பகவானுக்கு இன்பமூட்டும் கைங்கர்யங்களையே செய்து, கைங்கர்யத்துக்குத் தடை வருங்கால் தரிக்க முடியாத நிலை அடைதலே ஆன்ம சொரூபமாம். எனவே இதுவே தக்கதாம்.

## மூலம் : 108

**"ஆகையால், 'வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது"**

*1) ஆய என்னும் வேற்றுமை எதனைக் காட்டுகிறது?*

கைங்கர்யம் செய்வதிலிருந்து நீங்காதவாறு எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்கிற விருப்பத்தை இவ்வேற்றுமை தெரிவிக்கிறது.

கைங்கர்யம் செய்வதில் விருப்பம் கொள்ளுதல் என்பது இடையில் வந்ததன்று. அது ஆன்மாவுக்கு இயல்பாகவே அமைந்த செயலாகும்.

இதனைத்தான், "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என்கிறார் ஆழ்வார்.

**2) 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும்' என்பதனை விளக்குக.**

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்
தெழிகு ரல்அரு வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதிஎந் தைதந்தை தந்தைக்கே!"

என்பது நம்மாழ்வார் திருவாய் மொழி.

எக்காலத்தும் பகவானுடனேயே இருந்து கொண்டு நீங்காத, குற்றமில்லாத கைங்கர்யங்களை நாம் திருவேங்கடமுடையானுக்குச் செய்ய வேண்டும் என்று நம்மாழ்வார் கூறுகிறார்.

இப்பாசுரம் ஆண்டவனுக்கு அடிமை செய்தல் என்பது ஆன்மாவின் சொரூபம் என்பதை வலியுறுத்திக் கூறுகிறது.

பகவானுக்கு உவப்பினை ஊட்டக்கூடிய கைங்கர்யங்கள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்பதனை 'ஆய' என்னும் வேற்றுமை விளக்குவதனை இப்பாசுரம் உறுதிப்படுத்துகிறது.

## மூலம் : 109

**" 'கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதல்?' என்கிறபடியே காண்பதற்கு முன்பு**

உறக்கமில்லை; கண்டால் 'ஸதாபச்யந்தி' ஆகையாலே உறக்கமில்லை."

1) *பகவத் கைங்கர்யத்தை விரும்பிப்பெறும் பிரார்த்தனையை இடைவிடாமல் செய்வதற்குத் தகுந்த வேட்கையுடையார் இயல்புயாது?*

*பகவத் கைங்கர்யத்தை விரும்பிப்பெறும் பிரார்த்தனையை இடைவிடாமல் செய்வதற்குத் தகுந்த வேட்கையுடையார் எம்பெருமானைச் சேவிப்பதற்கு முன்பு உறக்கமில்லாமல் இருப்பர். இதனைத்தான் நம்மாழ்வார்,*

*"எழுவதும் மீண்டே படுவதும்*
*பட்டெனை ஊழிகள்போய்க்*
*கழிவதும் கண்டுகண்டு என்கவல்*
*லால்இமை யோர்கள் குழாம்*
*தொழுவதும் சூழ்வதும் செய்தொல்லை*
*மாலைக்கண்ணாரக் கண்டு*
*கழிவதோர் காதலுற் றார்க்கும்*
*உண்டோ கண்கள் துஞ்சுதலே!"*

*என்று பாடுகிறார்.*

*பகவானைக் கண்ட போதும் மகான்களுக்கு உறக்கம் வராது. திருமாலின் திவ்விய மங்கள விக்கிரகத்தை நித்திய சூரிகள் எப்போதும் கண்டுகொண்டிருப்பதனால் உறங்காததைப் போலவே, திருமாலைக்கண்ட பிறகும் மகான்களுக்கு உறக்கம் வராது.*

*"தத் விஷ்ணோ: பரமம் பதம்*
*ஸதா பச்யந்தி ஸுூரய:"*

*என்று உபநிஷதமும் கூறுகிறது.*

அதாவது, நாள்தோறும் பகவானை இமைக்காமல் பார்த்துக் கொண்டு இன்பத்தை அனுபவிப்பதனாலே கண்ட பின்பும் உறக்கம் இல்லை என்பதனையே இந்த அடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறு, பகவானைக் காணும் முன்பு காண வேண்டும் என்கிற விருப்பத்தால் உறக்கமின்மையும், காணும் போது இன்பத்தை அனுபவித்தலால் உறக்கமின்மையும் மகான்களுக்கு இயல்பு என்று ஆசிரியர் கூறுகிறார்.

## மூலம் : 110

**" 'பழுதே பல பகலும் போயின' என்று இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை."**

1) **பகவானைக் காணாது கழித்த நாள்களை எண்ணி வருந்துபவன் இயல்பினைக் கூறுக.**

பகவானைக் கண்டதனால் ஏற்படும் இன்பத்தினை அனுபவிப்பவன் "அடையத்தக்க பொருளாக இருக்கும் பகவானைக் கண்டு இன்பம் அனுபவிக்காமல் வீணாகவே இதற்கு முன்புள்ளகாலமெல்லாம் கழிந்து விட்டனவே" என்று தான் முன்பு இழந்த நாள்களை எண்ணி வருந்திக் கூக்குரலிடுபவன் உறக்கங் கொள்ள மாட்டான் என்று கூறுகிறார்.

2) **"பழுதே புல பகலும் போயின" எனும் பாசுரத்தை எடுத்துக்காட்டுக.**

"பழுதே பல்பகலும் போயின - வென்றஞ்சி
அழுதேன் அரவணைமேற் கண்டு - தொழுதேன்
கடலோதம் காலலைப்பக் கண்வளரும் செங்கண்
அடலோத வண்ண ரடி

என்பது முதல் திருவந்தாதி.

*"சிவந்த கண்களை உடையவனாயும், தன் அடியார்களின் பகையை அழிப்பவனாகவும், கடல் அலையானது தன் திருவடிகளின் மீது படுமாறு ஆதிசேடன் மேல் பள்ளி கொண்டிருக்கும் எம்பெருமானின் திருவடிகளை இன்று கண்டு சேவித்தேன். இவ்வாறு சேவித்து இன்புறுதற்குரிய வாழ்நாளில் பல வீழ்நாள்களாகக் கழிந்தனவே!" என்பது இப்பாசுரக் கருத்தாகும்.*

## மூலம் : 111

**" 'அன்று நான் பிறந்திலேன், பிறந்தபின் மறந்திலேன்' என்னா நின்றார்களிறே?"**

***1) பகவத் இன்பத்தினை அறிந்தவர்கள் அதனை மறத்தல் முடியாது என்பதனை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?***

*"அன்று நான் பிறந்திலேன், பிறந்தபின் மறந்திலேன்" என்பார் திருமழிசையாழ்வார்.*

*"அவனை யறிவதற்கு முன்பு ஞானப்பிறவி பெற்றேனில்லை. இந்த ஞானப்பிறவி உண்டானபின்பு அவனை ஒரு போதும் மறந்தேனில்லை", என்று ஆழ்வார் அருளியுள்ளதனை எடுத்துக்காட்டிப் பகவத் இன்பத்தை அறிந்த பின்பு அதனை மறத்தல் முடியாது என்பதனை விளக்குகிறார்.*

## மூலம் : 112

**"இவ்வடிமைதான் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி' என்கிறபடியே, ஸர்வ தேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்."**

***1) கைங்கர்யம் செய்யும் அடிமை நிலையை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?***

பகவானுக்குச் செய்யும் தொண்டானது காலதேச வர்த்தமானங்களைக் கடந்து நிற்கும் என்று ஆசிரியர் அருளிச் செய்கிறார்.

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் அருளிச் செய்ததைப்போலே, எல்லாக் காலங்களிலும் எல்லாத் தேசங்களிலும் எல்லா நிலைகளிலும் பகவானைப் பிரியாது நின்று தொடர்ந்து செய்யப்படும் இக்கைங்கர்யம் என்று அடிமை நிலையை ஆசிரியர் அழகுற விளக்குகிறார்.

**நாராயணா என்பதன் பொருள் முற்றும்.**

## மூலம் : 113

**"எட்டிழையாய் மூன்று சரடாய் இருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்."**

1) ***திருமந்திரத்தை ஆசிரியர் எதற்கு உவமையாகக் கூறுகிறார்?***

*திருமந்திரத்தை ஆசிரியர் மங்கல நாணுக்கு உவமையாகக் கூறுகிறார்.*

*திருமந்திரம் மங்கல நாணைப் போன்றது. மங்கல நாணானது சரடு ஒன்றுக்கு எட்டு இழைகளாகவும், மூன்று சரடுகளாகவும் கொண்டு விளங்கும்.*

*அதுபோல், திருமந்திரமானது எட்டு எழுத்துகளாகவும், மூன்று பதங்களாகவும் கொண்டு ஒப்பற்ற அழகுடன் விளங்குகின்றது.*

*ஆனால் உலகில் காணப்படும் மங்கல நாணுக்குப் பதினாறு இழைகளும், இரண்டு சரடுகளும் இருக்கும்.*

*இவள் தன் கணவனுக்கு மட்டுமே உடையவள் என்பதை உணர்த்துவதே திருமாங்கல்யம். அதுபோல, திருமந்திரமும்*

சேதனன் பகவானுக்கு மட்டுமே உடையவன் என்னும் பொருள் ஒளிர நிற்கிறது.

## மூலம் : 114

**"இத்தால் - ஈஸ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது"**

1) *மங்கல நாணாகத் திருமந்திரத்தை உருவகப்படுத்தியதால் வெளிப்படும் பொருள் யாது?*

*மங்கல நாணாகத் திருமந்திரத்தை உருவகப்படுத்திய தால், திருமந்திரத்தோடு சம்பந்தமுடைய சேதநர்களுக்கு (ஆன்மாக்களுக்கு)ப் பதியாக இருந்து கொண்டு பகவான் காப்பாற்றி வருவான் என்பது தெளிவான பொருளாகும்.*

## மூலம் : 115

**"ஆக, திருமந்த்ரத்தால், எம்பெருமானுக்கே உரியேனான நான், எனக்குரியனன்றிக்கே ஒழியவேணும். ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணுமென்றதாயிற்று."**

1) *திருமந்திரத்தில் சொல்லப்பட்டுள்ள கருத்தைச் சுருக்கி வரைக.*

*"நான் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவன். அப்படிப்பட்ட நான் எனக்கே உரியவன் என்று இருத்தல் கூடாது. எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக இருக்கக் கூடியவன் நாராயணனே! அந்த நாராயணனுக்கே நான் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்தல் வேண்டும்" என்பதே இத்திருமந்திரத்தின் சாரமான பொருளாம்.*

95 முதல் 115 வரையுள்ள சூத்திரங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.

நாராயணாய என்பதில் உள்ள 'நார' பதம் அழிவில்லாத நித்தியமான பொருள்களின் திரள்களைத் தெரிவிக்கிறது.

'அயநம்' என்னும் பதம் பகவான் நித்திய வஸ்துவின் திரள்களுக்கு ஆதாரப் பொருள்களாக இருப்பவன் என்பதையும், அவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளவன் என்பதையும் தெரிவிக்கிறது.

இவ்விரண்டு வகையான பொருள்களால் பகவானின் பரத்துவ ஸௌலப்பியங்களும், அந்தர்யாமித்துவ, உபாயத்துவம், உபேயத்வங்களும் பெறப்படுகின்றன.

நாராயணன் சேதநனுக்கு எல்லா உறவுமாக இருக்கிறான். நாம் அவனோடு தொடர்பின்றிப் பிறருடன் சேர்ந்து இருக்குங்காலத்தும் அவன் முகந்தோற்றாது நின்று நம்மை இரட்சிக்கிறான்.

'ஆய' என்னும் வேற்றுமை, சேதனன் ஈசுவரனுக்குச் செய்யும் எல்லாத் தொண்டுகளையும் விரும்பிப் பெற வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. இங்ஙனம் விரும்பலாமோ? என்னும் வினாவுக்கு அத்தியந்த பாரதந்தரியத்தினால் இது கூடும். இத்தகைய கைங்கர்யமே ஆன்மாவின் சொரூபம் என்பதையும் தெரிவிக்கிறது.

சேதனனுக்கு இக்கைங்கர்யப் பிரார்த்தனை இன்றியமையாதது. இதில் வேட்கையுடையவர் ஈசுவரனைக் காண்பதற்கு முன்பும், கண்டபின்பும் உறக்கங்கொள்ளார்.

ஈசுவரனைப் பற்றிய உண்மை ஞானத்தைப் பெற்றவரால் அவனை ஒரிமைப் போதும் மறத்தற்கு இயலாது. பகவத்

கைங்கர்யத்தை இழந்த நாள்களுக்காக அவர்கள் கவலைப்படுவர் பகவத் கைங்கர்யம் செய்வதற்குக் காலதேச வர்த்தமானம் என்னும் வரையறை இல்லை. இத்திருமந்திரம் மங்கலநாணுக்கு ஒப்பானது. எனவே, பகவான் சேதனர்களுக்குத் தலைவன் என்பது இவ்வுவமையால் விளக்கமாகிறது

*இச்செய்திகளே 95 முதல் 115 வரையுள்ள சூத்திரங்களின் (மூலங்களின்) பொருள்களாக அறியக்கிடக்கின்றன.*

**(திருமந்திரத்தின் பொருள் முற்றுப் பெற்றது.)**



ஸ்ரீ:

ஸ்ரீமுமுக்ஷுப்படி

# துவயம்

## 'ஸ்ரீமத்' பதப்பொருள்

*1) துவயம் (த்வயம்) என்றால் என்ன?*

விஷ்ணு லோகத்தில் பெருமான் பிராட்டியாருக்கு உபதேசித்த இரண்டு வாக்கியங்கள் துவயம் எனப்படும்.

*2) இரண்டு வாக்கியங்கள் யாவை?*

"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே

ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்பன இரண்டு வாக்கியங்களாகும். இம்மந்திரம் தலைசிறந்த இரண்டு பொருள்களை அறிவிக்கின்றது.

*3) திருமந்திரத்தை அடுத்து துவயத்தை விளக்குவானேன்?*

"ஓம் நம: நாராயணாய" என்பது திருமந்திரம். இதில் நமப்பதம் உபாயத்தைக் குறிக்கிறது. 'நாராயணாய' என்னும் பதம் உபேயத்தைக் குறிக்கிறது. நமப்பதத்தின் பொருளை துவயம் விரிக்கிறது. 'நாராயணாய' என்னும் பதத்தின் பொருளைச் சரம சுலோகம் விரிக்கிறது. இவ்வாறு விளக்கம் சொல்வர் ஒரு சாரார்!

இம்முறையைப் பின்பற்றியே முமுட்சுப்படி என்னும் இந்நூலில் பிள்ளையுலகாசிரியர் திருமந்திர விளக்கத்திற்குப் பிறகு துவயத்தையும், துவயத்திற்குப் பிறகு சரம சுலோகத்தையும் அமைத்து விளக்குகிறார்.

*4) மற்ற நூல்களில் பின்பற்றியுள்ள முறை யாது?*

*மற்ற நூல்களில் திருமந்திரத்தை அடுத்துச் சரம சுலோகமும், அதையடுத்துத் துவயமும் அமைக்கப் பட்டுள்ளது. இவ்வாறு அமைக்கப்படுவதன் விளக்கத்தையும் காண்போம்.*

*"நீ என்னைப் பற்று; நான் உனக்கு மோட்சததை அளிக்கிறேன்" என்று கண்ணபெருமான் கட்டளையிடும் விதிவாக்கியம் சரம சுலோகம்.*

*"ஸ்ரீமந் நாராயணனது இரண்டு திருவடிகளையும் பற்றுகிறேன்" என்று சொல்லுகிற சேதனனது செயலைத் தெரிவிக்கும் அனுட்டான வாக்கியம் துவயம்.*

*விதி முன்னும், அனுட்டானம் பின்னும் இருப்பது முறை என்னும் கருத்துடன் சரம சுலோகம் முன்னும், துவயம் பின்னுமாகவும் மற்ற நூல்களில் அமைக்கப்பட்டுள்ளன.*

*திருமந்திரம் உபேயத்தில் கருத்துள்ளது. சரம சுலோகம் உபாயத்தில் நோக்கம் கொண்டுள்ளது. துவயமோ உபாய உபேயங்களின் அநுட்டானங்களைத் தெரிவிக்கின்றது.*

*இம்முறையில் மற்ற நூல்களில் திருமந்திரம், சரம சுலோகம், துவயம் என்னும் முறை பின்பற்றப்பட்டுள்ளது.*

*இனி மூலங்களைக் காண்போம்.*

## மூலம் : 116

**"புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின**

நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ண வர்களேற்ற மறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையனாயிருக்கும் பரம ஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்."

*1) ஸ்ரீவைணவர் ஒருவர் வைணவத்தன்மை கைவரப் பெறுதற்கு அவரிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகள் எத்தனை?*

*ஸ்ரீவைணவரிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகளாகப் பத்தினைப் பிள்ளையுலகாசிரியர் கூறுகிறார்.*

*2) ஸ்ரீவைணவர் விடத்தக்கது யாது?*

*பகவானைத் தவிர வேறு பொருள்களில் வைக்கும் பற்றுகள் யாவற்றையும், மறுபடியும் தன்னைத் தொடாதவாறு அறவே விடுதல் ஸ்ரீவைணவரிடம் அமைந்திருக்க வேண்டிய முதற்பண்பாம்.*

*பெற்றோர், பிள்ளைகள், உறவினர், நட்பினர் முதலானவர்களிடம் வைக்கும் பற்றையும், பொருட்செல்வம் ஆன்மானுபவமாகிற கைவல்யம் ஆகியவற்றிலுள்ள ஆர்வத்தையும் வாசனையுடன் விட்டு விடுதலும் ஸ்ரீவைணவருக்குத் தக்கனவாகும்.*

*3) பகவானையே பற்றுக் கோடாய்ப் பற்றுதல் வேண்டும் என்பது ஏன்?*

எல்லா உயிர்களையும், எல்லாக் காலத்திலும் பாதுகாப்பவன் பகவான் ஒருவனே! வேறெவரும் நமக்குத் தஞ்சமல்லர். எனவே, பகவானையே உபாயமாகப் பற்றுதல் வேண்டும் என்பது தெளிவு.

**4) உலகப் பற்றினை விடவேண்டும் என்பதனையும், பகவானையே சரணடைதல் வேண்டும் என்பதனையும் குறிக்கும் சரம சுலோக அடி யாது?**

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்யமாமேகம் சரணம் வ்ரஜ" என்பது சரம சுலோகத்தின் முற்பகுதி.

ஸர்வ தர்மாந் - புறம்புண்டான பற்றுகள் யாவற்றையும்

பரித்யஜ்ய - வாசனையோடே விடுகையும்

மாம் - எம்பெருமானை

ஏகம் - ஏ

சரணம் - தஞ்சம் (என்று)

வ்ரஜ - பற்றுகையும்

116ஆம் மூலத்தில் காணப்படும் "புறம்புண்டான பற்றுகள் யாவற்றையும் வாசனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்" என்னும் வரிகள் சரம சுலோகத்தின் முற்பகுதியினை விளக்கக் காணலாம்.

**5) பகவானைத் தஞ்சமென்று பற்றினால் மட்டும் போதுமா?**

போதாது. அப்பகவானைத் தஞ்சமென்று பற்றிய நமக்கு வீடுபேறு தவறாமல் கிடைக்கும் என்று துணிந்திருத்தலும் வேண்டும்.

**6) பேறு தப்பாதென்று துணிந்திருப்பவன், பின்பு செய்ய வேண்டுவது யாது?**

பேறு தப்பாதென்று துணிந்திருப்பவன், அவ்வீடுபேற்றை அடைதற்கு விரைந்து நிற்கவும் வேண்டும்.

**7) இப்பிரபன்னன் பொழுது போக்கும் விதம் யாது?**

"இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகவும்" பிரபன்னன் இருத்தல் வேண்டும்.

வீடுபேற்றை அடைதற்குப் பிரபன்னன் விரைந்து நிற்க வேண்டும் என்று முன்னர்க் கண்டோம். எனினும் பிரபன்னன் தன் வாழ்நாளில், எம்பெருமான் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்களைக் காண மிக்க ஆர்வமுடையவனாக இருக்க வேண்டும். அத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் பெருமான்களின் திருக்கல்யாண குணங்களை அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டும். மனம், வாக்கு, காயங்கள் அனைத்தினாலும் பகவத் கைங்கரியம் செய்தலையே தனக்குப் பொழுது போக்காகக் கொண்டிருத்தல் வேண்டும்.

**8) பிரபன்னனுக்குப் பாகவத சேஷத்துவம் இன்றியமை யாததா?**

ஆம்! மேற்கூறிய ஒழுக்கங்கள் எல்லாம் நிரம்பப் பெற்ற ஸ்ரீவைணவர்களைப் பிரபன்னன் கண்டால், அவர்கள் பெருமைகளைப் பாராட்ட வேண்டும். அவர்களின் உயர்வைக் கண்டு அழுக்காறு கொள்ளுதல் கூடாது. ஸ்ரீவைணவர்கள் எக்குலத்தவராயினும், அவர்களுடன் மகிழ்ச்சியாகப் பழகி அன்பு செலுத்த வேண்டும்.

**9) பிரபன்னன் எவ்வெவற்றில் ஊன்றி நிற்க வேண்டும்?**

தள்ளத் தக்கன இவை, கொள்ளத் தக்கன இவை எனத் தெளிவாக விளக்கும் திருமந்திரத்திலும், திருமந்திரத்தை விரிவாகக் கூறும் துவயத்திலும் பிரபன்னன் ஊன்றி நிற்றல் வேண்டும்.

*10) பிரபன்னனுக்கு ஆசார்ய பக்தி இருத்தல் வேண்டும் என்பது ஏன்?*

மேற்கூறிய ஒழுக்கங்களை விரைவாக எடுத்து உபதேசம் செய்பவர் குருவே! எனவே, தனக்கு உபதேசம் செய்த தன்மைக்ள் யாவும் தனக்கு உண்டாகுமாறு அருள்புரிந்த ஆசார்யரிடத்தில் மிக்க அன்புடையவனாகப் பிரபன்னன் இருத்தல் வேண்டும்.

*11) ஆசார்ய பக்தி மட்டும் போதுமா?*

ஆசார்யரிடத்தில் அன்பு செலுத்தினால் மட்டும் போதாது. ஆசார்யரிடம் நன்றியுடையவனாகவும் நடந்து கொள்ளுதல் வேண்டும். ஆன்ம நலம் கருதி அருள்புரிந்த ஆசார்யரிடத்திலும், ஆசார்யரிடம் தன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்த எம்பெருமானிடத்திலும் பிரபன்னன் நன்றியுடையவனாக இருத்தல் வேண்டும்.

*12) பரம பாகவதரோடு கூடி வாழ்தலும் பிரபன்னனுக்கு இன்றியமையாதது என்பது ஏன்?*

ஞானமும், பற்றற்ற தன்மையும், மன அமைதியும் வாய்க்கப் பெற்றவர்கள் பரமபாகவதர்கள்.

சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய இம்மூன்றையும் பற்றித் தெளிவாக்குவது ஞானம். இவ்வுலகில் வாழவேண்டி இருப்பதால் ஒரு வேளை மனக் கலக்கம் ஏற்பட்டாலும் அம்மனக்கலக்கத்தை நீக்கித் தம்மைப் பண்படுத்திக்

கொண்டு ஸ்ரீவைஷ்ணவருக்கு அமைய வேண்டிய தன்மைகள் யாவும் மேன்மேலும் வளருமாறு உதவி செய்வது ஞானமே!

ஞானம் உண்டானால் உலகில் காணப்படும் பொருள்களின் மேல் பற்றற்ற தன்மை உண்டாகும். ஞானமும், பற்றற்ற தன்மையும் வாய்க்கப்பெற்றாலும், தன்முனைப்பு இல்லாமல் சாந்த குணத்துடன் விளங்குபவர்கள் பரம பாகவதர்கள்.

எனவே இத்தகைய பெருமைகளைக் கொண்ட பரம பாகவதர்களுடன் கூடி வாழ்தலும் பிரபன்னனுக்கு இன்றியமையாததாகிறது.

## மூலம் : 117

**"இந்த அதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம்"**

*1) மேற்கூறிய பண்புகள் அமையப்பெற்ற வைணவர் ஒருவர் சிந்தித்தற்குரியது யாது?*

மேற்கூறிய சிறந்த பண்புகள் பத்தும் அமையப்பெற்ற வைணவர் ஒருவர் தன்னுடைய ஒழுக்கங்களை வளர்க்கக்கூடிய திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களைப் பற்றியும் சிந்தித்தல் வேண்டும்.

## மூலம் : 118

**"எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; சரம ச்லோகத்தில் ஈச்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது."**

*1) துவயத்தின் பெருமையை ஆசிரியர் எங்ஙனம் விளக்குகிறார்?*

எல்லாச் சாத்திரங்களும் ஒருவனுக்குத் தேகத்தாலேயே பேறு கிடைக்கும் என்கின்றன.

ஆன்மாவாலே பேறு கிடைக்கும் என்று திருமந்திரம் சொல்கிறது. ஈசுவரனாலே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் சொல்கிறது. ஆனால், துவயமோ பெரிய பிராட்டியாராலே பேறு கிடைக்கும் என்று கூறுகிறது. இவ்வாறு துவயத்தின் பெருமையை ஆசிரியர் விளக்குகிறார்.

**2) தேகத்தின் உதவியாலே பேறு கிடைக்கும் என்பார் கருத்தை விளக்குக.**

தருமங்களை மேற்கொள்வதற்குத் தேகம் வேண்டும். தேகத்திற்குரிய இதம் இன்னது என்பதையும், பயன் இன்னது என்பதையும் தெரிவிப்பது சாத்திரமே!

வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள் ஆகியவை சாத்திரங்கள் எனப்படும்.

சாத்திரங்கள் தேகத்தில் நோக்குடையதாய் இருப்பதால்; தேகத்தாலேயே பேறு கிடைக்கும் என்று இவை கூறுகின்றன.

**3) ஆன்மாவாலேயே பேறு கிடைக்கும் என்னும் கூற்றினை விளக்குக.**

திருமந்திரத்தில் உள்ள நடுப்பதம் நம: என்பது. "நான் எனக்கு உரிமையுடையவன் அல்லன்; எம்பெருமானே எனக்கு உரிமையுடையவன்!" என்பது இந்நமப்பதத்தின் பொருள்.

சாதகப் பறவை என்பது பறவைகளுள் ஒருவகை. அது தன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளச் சிறிதும் முயலாமல்,

மேகத்தை நோக்கியே நிற்கும். இதுபோலவே, ஆன்மாவானது தன்னுடைய நன்மைக்காகத் தான் சிறிதும் முயலாமல், எம்பெருமானையே நோக்கி நின்றால் பயன் சித்திக்கும் என்று இருக்கும்.

திருமந்திரமானது, இவ்வாறு முயற்சியற்ற சீவான்மாவினிடத்தில் நோக்குடைத்தாய் ஆன்மாவாலேயே பேறு கிடைக்கும் என்று கூறுகிறது.

*4) ஈசுவரனாலேயே பேறு கிடைக்கும் என்பதனை விளக்குக.*

பெருமானாலேயே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் கூறுகிறது. "நீ என்னையே பற்றக்கடவாய்! உனக்கு வரும் எல்லாத் தடைகளையும் போக்கி உனக்கு நன்மையையே உண்டு பண்ணுவேன். எனவே, நீ எதற்கும் கலங்க வேண்டுவதில்லை!" என்று பகவான் சரம சுலோகத்தில் கூறுகிறார்.

எனவே, சுதந்தரத் தன்மை உடைய பகவானாலேயே பேறு கிடைக்கும் என்று சரம சுலோகம் பகருகிறது.

(இதுவரை சாமானிய வைணவ அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்பட்டன. இனி, சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்படுகின்றன.)

## மூலம் : 119

"பெரிய பிராட்டியாராலே பேறாகையாவது - இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யஞ் செய்யானென்கை."

*1) ஈச்வரனே உபாயனாயிருக்க, பிராட்டியாராலேயே பேறு என்று கூறுவானேன்?*

சேதனனைக் குறித்துப் பிராட்டியார் பெருமானிடம் புருஷகாரம் செய்தால்தான், பெருமான் தன் காத்தலாகிய செயலைச் சேதனனுக்குச் செய்வான்.

## மூலம் : 120

**"த்வயத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமுமுடையவன்."**

*1) சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு வேண்டுவன யாவை?*

துவய அதிகாரிக்கு ஆகிஞ்சன்னியமும், அநன்னிய கதித்துவமும் வேண்டும்.

ஆகிஞ்சன்னியம் எனப்படுவது கன்மம், ஞானம், பக்தி ஆகிய மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருக்கை.

அநன்னிய கதித்துவம் எனப்படுவது, ஆன்மாவைக் காத்துக் கொள்வதற்குப் பெருமானைத் தவிர வேறு ஒரு இரட்சகப் பொருள் இல்லை என்றிருப்பது.

சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு இவை இரண்டும் இன்றியமையாதனவாம்.

## மூலம் : 121

**"இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்."**

*1) இவை இரண்டையும் பற்றி ஆசிரியர் எந்த நூலில் விளக்கியுள்ளார்?*

ஆகிஞ்சன்னியம், அநன்னிய கதித்துவம் ஆகிய இவ்விரண்டையும் பற்றி "பிரபந்ந பரித்ராணம்" என்னும் நூலில் விளக்கமாகக் கூறியுள்ளார்.

*2) மூலம் 116லிருந்து 121 வரை கூறப்பட்ட செய்திகளைத் தொகுத்துக் கூறுக.*

*"திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து, அதன்படி நின்றொழுகும் வைணவ அதிகாரிக்கு வைணவத்துவம் கைவரப் பெறப் பத்துச் சிறந்த பண்புகள் இருத்தல் வேண்டும். மேலும் திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய இம்மூன்று இரகசியங்களையும் கடைப்பிடிக்க வேண்டும்.*

*தேகத்தால் பேறு கிடைக்குமென்று சாத்திரங்கள் சொல்லுகின்றன. ஆன்மாவால் பேறு கிடைக்குமென்று திருமந்திரம் சொல்லுகிறது. பெருமானால் பேறு கிடைக்குமென்று சரம சுலோகம்சொல்கிறது. பிராட்டியாரால் பேறு கிடைக்குமென்று துவயம் சொல்லுகிறது.*

*பிராட்டியார் புருஷகாரம் செய்தால்தான் பெருமானும் இரட்சிப்பார். துவய அதிகாரிக்கு ஆகிஞ்சன்னிய, அநன்னிய கதித்துவங்கள் இருத்தல் வேண்டும். இவை இரண்டையும் பற்றிப் பிரபந்ந பரித்திராணம் என்னும் நூலில் விளக்கப்பட்டுள்ளது" என்னும் செய்திகள் மூலம் 116லிருந்து 121 வரையில் கூறப்பட்டுள்ளன.*

## மூலம் : 122

**"இதில் முற்கூற்றால், பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது: பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறது."**

*1) துவயத்தில் காணப்படும் இரண்டு வாக்கியங்களின் பொருளைச் சுருக்கமாகக் கூறுக.*

*"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்பது துவயத்தின் முற்கூற்று.*

"பெரிய பிராட்டியாரை முன்னிட்டுப் பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகிறேன்" என்பது முற்கூற்றின் தெளிந்த பொருளாம்.

"ஸ்ரீமதே நாராயணாய நம:" என்பது துவயத்தின் பிற்கூற்று. "பெரிய பிராட்டியாரும் பெருமானுமாகிற சேர்க்கையில் என்றும் கைங்கர்யத்தைப் புரிவேனாக!" என்பது பிற்கூற்றின் தெளிந்த பொருளாம்.

## மூலம் : 123

**"ஸ்ரீ என்று - பெரிய பிராட்டியார்க்குத் திருநாமம்".**

1) ***'ஸ்ரீமத்' என்னும் பதத்திலுள்ள 'ஸ்ரீ' என்பதன் பொருள் விளக்கம் யாது?***

'ஸ்ரீ' என்பது பெரிய பிராட்டியாரைக் குறிக்கும் திருநாமம்.

'ஸ்ரீ' என்பதற்குச் செல்வம், அழகு, இளமை, மேன்மை எனப் பொருள்கள் பல உள்ளன. இங்கு 'ஸ்ரீ' என்பதற்குப் பொருள் பெரிய பிராட்டியார் என்பதேயாகும்

பெரிய பிராட்டியாருக்கு இலக்குமி, பத்மா, கமலா, அரிப்ரியா என்பன போன்ற திருநாமங்கள் பல உள்ளன போன்றே 'ஸ்ரீ' என்னும் திருநாமமும் உண்டு.

ஆனால் 'ஸ்ரீ' என்பது மற்றைய திருநாமங்களைப் போன்றதன்று. மிகவும் சிறந்த திருநாமம். பெருமானுக்கு 'அ' என்னும் ஒலி சிறந்த திருநாமமாகக் கொள்ளப்படும். அதுபோலவே, பெரிய பிராட்டியாருக்கும், 'ஸ்ரீ' என்னும் திருநாமம் சிறப்புடைய ஒன்று.

'அ' என்பது பெருமானின் காக்கும் தன்மைக்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றது.

அவ்வாறே 'ஸ்ரீ' என்பதும் பிராட்டியாரின் புருஷகாரத்திற்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றது.

## மூலம் : 124

**"ஸ்ரீயதே ச்ரயதே".**

*1) இம்மூலத்தை விளக்குக.*

'ஸ்ரீ' என்பதன் வினையடி 'ச்ரீஞ்' என்பது. இதற்குச் சேவித்தல் என்பது பொருள்.

ஸ்ரீ என்பது வடமொழி இலக்கணத்தின்படிக் கர்மணி வியுற்பத்தி சொல்லும்போது, விகுதியோடும் சேர்ந்த வினையடி 'ச்ரீயதே' என்றாகும்.

கர்த்தரி வியுற்பத்தி சொல்லும் போது விகுதியோடும் சேர்ந்த வினையடி 'ச்ரயதே' என்றாகும்.

## மூலம் : 125

**"இதுக்கு அர்த்தம், எல்லார்க்கும் இவளைப் பற்றி ஸ்வரூப லாபமாய், இவள் தனக்கும் அவனைப் பற்றி ஸ்வரூப லாபமாய் இருக்கும் என்று."**

*1) 'ச்ரீயதே' 'ச்ரயதே' என்பவற்றின் பொருளை விளக்குக.*

'பிராட்டியார் எல்லாச் சேதனர்களாலும் சேவிக்கப் படுகிறார்.' என்பது ச்ரீயதே என்பதன் பொருளாகும். சேஷத்துவத்தையே வடிவமாய்க் கொண்டுள்ள சேதனரின் ஆன்ம சொரூபத்துக்கு இதன் மூலம் பயன் கிடைக்கிறது.

'பிராட்டியார் பெருமானைச் சேவிக்கிறார்' என்பது ச்ரயதே என்பதன் பொருளாகும். பெருமானைப் பிராட்டியார் வணங்குவதால், தாம் பெருமானுக்கு அடியவளாய் இருக்கும் சொரூபத்துக்குப் பயன் உண்டாகிறது.

*சேதனன் பிராட்டியாரைச் சேவிப்பதால் பிராட்டியாருக்குத் தலைமைத் தன்மை உளதாகிறது.*

*பிராட்டியார் பெருமானைச் சேவிப்பதால், அடியவளாம் தன்மை உளதாகிறது.*

*இவ்வாறு பிராட்டியாருக்குச் சேஷித்துவ நிலை, சேஷத்துவ நிலை என்னும் இரு நிலைகள் உளதாதலைக் காணலாம்.*

## மூலம் 126

**"இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக".**

***1) பிராட்டியாரிடம் உள்ளது புருஷகாரத்துவமா? பிராப்பியத்துவமா?***

*பகவானை உபாயப் பொருளாகப் பற்றுகிற சமயத்தில், பிராட்டியார் புருஷகாரமாகவே இருக்கிறார். எனவே, பிராட்டியாரிடம் உள்ளது புருஷகாரத்துவமே என்கிறார் ஆசிரியர்.*

***2) பகவான் எங்ஙனம் உபாயப் பொருளாக உள்ளாரோ, அவ்வாறே பிராட்டியும் உபாயப் பொருளாக உள்ளார் என்று சிலர் கூறுகின்றனரே?***

*"இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்று ஆசிரியர் குறிப்பதால், பிராட்டியாருக்குப் புருஷகாரத் தன்மையே உள்ளது, உபாயத் தன்மை இல்லை என்பது தெளிவாகிறது.*

***3) பிராட்டியாருக்கு உபாயத்தன்மையும் உண்டு என்று சிலர் கூறுவதைப் பிள்ளையுலகாசிரியர் மறுத்துக் கூறுவானேன்?***

*புருஷகாரத் தன்மை பெரிய பிராட்டியாருக்கே உரித்தானது; உபாயத்தன்மை தனக்கே உடைமைப்*

பொருளாய் உள்ளது" என்று பகவான் தான் அருளிச் செய்த பாஞ்சராத்திரத்தில் வெளிப்படையாகவே அருளிச் செய்துள்ளார்.

"லக்ஷ்மீ: புருஷ காரத்வே, நிர்திஷ்டா பரமர்ஷபி:
அஹம் மத்ப்ராப்த்யுபாயோவை ஸக்ஷாத் லக்ஷ்மீபதி ஸ்வயம்"

என்பது சுலோகம்.

எனவே, பண்பாயுள்ள பெரிய பிராட்டியார் புருஷகாரமாகவே இருப்பவர் என்பதே பொருத்தம்.

பிராட்டியாருக்கும் உபாயத்தன்மை உள்ளது என்று கூறினால், "உபாயத்தன்மை எனக்கே உடைமைப் பொருளாய் உள்ளது" என்று பாஞ்சராத்திரத்தில் பகவான் கூறியுள்ள கூற்றுக்கு மாறுபடும் என்பது வெளிப்படை.

எனவே, பிராட்டியாருக்கு உபாயத்தன்மையும் உண்டு என்று சிலர் கூறுவதைப் பிள்ளையுலகாசிரியர் மறுத்துக் கூறுகிறார்.

## மூலம் : 127

**"நீரிலே நெருப்புக் கிளருமாபோலே, குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பதிவளுக்காக."**

1) *தனக்குத் தலைவனாக உள்ள பெருமானைச் சென்றடைவதற்கு உரிமை பெற்றிருக்கும் சேதனன் பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்ற வேண்டுவது ஏன்?*

பகவான் கருணையே வடிவமானவன். எனினும் தன் அடியவன் செய்யும் அளவற்ற குற்றங்களைக் காணும்போது குளிர்ந்த நீருக்குள்ளும் நெருப்பு பிறத்தல் போன்று பெருமானுக்குச் சீற்றம் உண்டாகிறது.

*அப்போது தனக்குண்டாகும் கோபத்தைத் தணித்துக் கொண்டு தன் அடியவரின் குற்றங்களைப் பிராட்டியாருக் காகவே பொறுத்துக் கொள்கிறான்.*

*எனவேதான், பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்ற வேண்டியுள்ளது. "பிடித்தொரு தந்தை அடித்தால்தாய் உடன் அணைப்பள்" என்பது அமுதவாக்கல்லவா?*

***2) அடியவருடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகப் பகவான் ஏன் பொறுத்துக்கொள்கிறார்?***

*பகவானின் கருணை உள்ளத்தைப் புகழ்ந்து பற்பல இனிய சொற்களைக் கூறி, பகவானின் சீற்றத்தை மாற்றும் வல்லமை பிராட்டியாருக்கு மட்டுமே உண்டு. பிராட்டியின் இன்சொல்லுக்கும் பகவானின் நெஞ்சம் இளகவில்லை யானால், பிராட்டியார் தன் அழகைக்காட்டிப் பெருமானைத் தம் வசப்படுத்தி அடியவனின் குற்றங்களைப் பொறுக்குமாறு செய்து விடுவார்.*

*இக்காரணங்களால்தான் பகவான் தன் அடியவனுடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகப் பொறுத்துக் கொள்கிறார்.*

## மூலம் : 128

**"இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்."**

***1) பெருமானையும், அடியவனையும் சேர்த்து வைப்பதற்குப் பிராட்டியாரே தகுதி வாய்ந்தவர் என்பதனை விளக்குக.***

*பிராட்டியார் உலக உயிர்களுக்குத் தாயாக விளங்குகிறார். எனவே, உயிர்கள் படும் துன்பத்தைக் கண்டு மனம்*

பொறுக்க மாட்டாமல், உயிர்கள்பால் இரக்கம் கொள்கிறார்.

பகவானுக்குப் பத்தினியாகவும், பகவானுக்கு இன்பம் தருபவராகவும் இருப்பதனால் பிராட்டியாரே உயிர்களுக்குக் கருணை ததும்பும் புருஷகாரமாக இருப்பதற்குத் தகுதி வாய்ந்தவராகிறார்.

எனவே பெருமானையும், உயிர்களையும் சேர்த்து வைப்பதற்குத் தகுதி வாய்ந்தவர் பிராட்டியாரே என்பதனை நன்கு தெளியலாம்.

## மூலம் : 129

**"திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே"**

*1) சுதந்தர புருஷனான பகவான் பிராட்டியின் சொல்லுக்குக் கட்டுப்படுதல் கூடுமா?*

ஆற்றலும் ஆரவாரமும் மிக்கவன் ஆஞ்சநேயர். அவரையே தம் அருளுரையால் வசப்படுத்தி அமைதிப்படுத்தியவர் பிராட்டியார்.

பெருமானோ பிராட்டியின் அழகில் சிக்குண்டு பிராட்டியிடம் அளவற்ற அன்பு காட்டுபவர். மேலும் தம் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர். அப்படிப்பட்ட பெருமான் பிராட்டியார் சொல்லிவிட்டார் என்பதற்காகக் கட்டுப்பட்டு அடியவர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக்கொள்வார் என்பதில் ஐயமே இல்லை.

*2) அனுமனைப் பிராட்டியார் தம் அருளுரையால் அமைதிப்படுத்தினார் என்பது எப்படி?*

பிராட்டியார் இராவணனால் இலங்கையில் சிறைவைக்கப்பட்டார். இராவணனின் ஏவலர்களான

அரக்கியர் பலவாறு பிராட்டியாரை அச்சுறுத்தித் துன்புறுத்தினர். பழிசொற்கள் பலவும் கூறிப் பிராட்டியின் மனதைப் புண்படுத்தினர்.

அப்போது அனுமன் அங்குச் சென்றார். பெருமானின் வெற்றியைப் பிராட்டிக்கு எடுத்துக் கூறினார். மங்கலச்செய்தியைக் கேட்ட பிராட்டியார் மனம் மகிழ்ந்தார். ஏதாவது வரம் கேட்டுப் பெற்றுக்கொள்ளு மாறு அனுமனை வேண்டினார்.

அனுமரோ வரம் ஏதும் தனக்கு வேண்டாமென்று கூறிவிட்டார்.

ஆயினும், பிராட்டியார்க்கு இதுவரை துன்பம் செய்து வந்த அரக்கியரை வஞ்சம் தீர்த்துக்கொள்ளப் பிராட்டியாரிடம் ஆஞ்சநேயர் அனுமதி வேண்டினார்

அருளே வடிவாகவும், உலக மாதாவாகவும் உள்ள பிராட்டி இதற்குச் சம்மதிப்பாரா?

"உத்தமனே! மன்னவன் கட்டளைப்படித்தானே இவர்கள் தம் கடைமைகளைச் செய்தனர். உன் பார்வைக்கு இவர்கள் குற்றவாளிகளாகத் தெரியலாம். ஆனால், என் கண்களுக்கு இவர்கள் குற்றம் செய்தவர்களாகப் புலப்படவில்லை. மேலும், உலகில் குற்றம் செய்யாதவர்கள் யார்? அனைவரும் ஏதோ ஒரு வகையில் குற்றம் செய்பவர்களே! எனவே, அனைவரும் தண்டனைக்குரியவர்கள்.

"நகஸ்யதி ந அபராத்யதி"

மேலும், மங்கலச் செய்தியைச் சொல்லி வருமாறு தானே பெருமான் பணித்துள்ளார். இவர்களை இம்சித்து வருமாறு

பணிக்கவில்லையே! இத்தனைக்காலம் நான் அனுபவித்து வந்த துன்பங்களுக்குக் காரணம் என் தீவினையே! வேறு யாரும் இதற்குக் காரணரல்லர்! எனவே, தூயவனே! 'இவர்களுக்கு யாதொரு தீங்கும் நான் செய்யமாட்டேன்!' என்னும் வரத்தை எனக்கு அருள்வாயாக!" என்று பிராட்டியார் கேட்டுக்கொண்டார்.

பிராட்டியாரின் இந்த அருளுரை கேட்டு ஆஞ்சநேயர் அமைதியானார். (திருவடி - ஆஞ்சநேயர்)

## மூலம் : 130

**"மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது."**

1) ***ஸ்ரீமத் என்னும் பதத்தில் உள்ள (ஸ்ரீ=மத்) மத் என்பதன் பொருள் யாது?***

ஸ்ரீ, மத் என்னும் இரண்டு சொற்களுள் 'ஸ்ரீ' என்னும் சொல்லுக்கு இதுவரை ஆசிரியர், பொருள் கூறி வந்தார். இனி, 'மத்' என்பதற்குப் பொருள் கூறுகிறார்.

மத் (மதுப்பு) என்பதற்குப் பொருள்கள் பல உள்ளன. எனினும், இங்கு இச்சொல்லுக்கு நித்திய யோகம் என்பதே பொருளாகும். நித்திய யோகம் என்பதற்கு என்றும் உள்ள தொடர்பு எனப் பொருள் கொள்ளலாம்.

பிராட்டியாருக்கும் பெருமானுக்கும் தொடர்பு என்றும் உள்ளது என்பதனையே மதுப்பு என்னும் சொல் உணர்த்துகிறது.

## மூலம் : 131

**"இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை."**

1) ***பெருமானுடைய உண்மை (உளதாம் தன்மை) எங்ஙனம் உள்ளது?***

*பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே பெருமானுடைய உண்மை உள்ளது. மணத்தோடு சேர்ந்தே மலர் உள்ளது என்பது போல, பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே உள்ளது பெருமானாகிற தத்துவம் என்பது உண்மை.*

## மூலம் : 132

**"ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்தையும், சேதனனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்"**

*1) எம்பெருமானை ஒரிமையும் விட்டுப் பிரியாமல் பிராட்டியார் இருப்பதன் காரணம் யாது?*

*பெருமானோ சுதந்தரத்தன்மை உடையவனாய் இருக்கிறான். அதாவது, எதையும் தன் விருப்பம்போல் செய்பவனாக உள்ளான்.*

*சேதனனோ அளவில்லாத குற்றங்களைச் செய்பவனாக இருக்கிறான்.*

*பெருமானுடைய சுதந்தரத்தன்மையையும், சேதனனுடைய குற்றங்களையும் கண்டு 'என்ன நேரிடுமோ' என்ற அச்சத்தினால் பிராட்டியார் பெருமானை ஓரிமைப்போதும் அகலாமல் உடனுறைந்து வருகிறார்.*

*குற்றம் செய்யும் சேதனனுக்குப் பெருமானால் தண்டனை கிடைத்து விடுமோ என்னும் அச்சமும், உலக உயிர்கள் துன்புறக்கூடாதே என்னும் அருளும் பிராட்டியார் பெருமானை விட்டுப் பிரியாமல் இருப்பதற்குரிய காரணங்களாகி விடுகின்றன.*

## மூலம் : 133

**"சேதனனுக்கு இவை இரண்டையும் நினைத்து அஞ்ச வேண்டா."**

*1) சேதனனுக்குச் சேர்த்தியால் உண்டாகும் பயன் யாது?*

*பிராட்டியார் பெருமானோடு சேர்ந்து கொண்டு அருள்நோக்கம் புரிவதனால், சேதனனுக்கு இரண்டு வகைகளில் பயன் ஏற்படுகிறது.*

*(1) "பெருமானுடன் சேர்ந்திருந்து உங்களை வாழச்செய்கிறேன்" என்று பிராட்டியார் அபயகரம் காட்டி அருள் புரிவதால், பெருமானின் சுதந்தரத் தன்மையைக் கண்டு சேதனன் அஞ்ச வேண்டுவதில்லை.*

*(2) தான் செய்யும் குற்றங்களுக்கு "என்ன தண்டனை கிடைத்துவிடுமோ." என்று சேதனன் அஞ்ச வேண்டுவதுமில்லை.*

*இவ்வாறு சேதனனுக்கு இரண்டு வகையான பலன்கள் ஏற்படுகின்றன.*

## மூலம் : 134

**"இத்தால், ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்க வேண்டா என்கிறது."**

*1) 'மத்' என்னும் சொல்லால் (மதுப்பால்) கிடைக்கும் உட்பொருள் யாது?*

*பெருமானுக்கும் பிராட்டிக்கும் என்றும் உள்ள தொடர்பைக் குறிப்பது 'மத்' என்னும் சொல்.*

*பெருமானைப் பற்றுவதற்கு வேட்கையே வேண்டுவது. இருவரும் சேர்ந்திருக்கும் காலத்தைச் சேதனன் நோக்க வேண்டுவதில்லை என்பதுவே இச்சொல்லின் உட்பொருளாகும்.*

*'அகிலகில்லேன் இறையும்'*

என்று பெருமான் திருமார்பில் பிராட்டியார் என்றும் நீங்காது நிறைந்து கொண்டிருக்கிறார்.

ஏனெனில் பிராட்டியார் பிரியும் காலமும், சேதனன் ஆர்வமுடன் வந்து பெருமானைப் பற்றும் காலமும் ஒன்றாக இருந்துவிட்டால் என்ன செய்வது? அப்போது சேதனன் கதி ஏதாகுமோ? என்று கருதியே பிராட்டியார் இவ்வாறு பெருமானை இமைப்பொழுதும் நீங்காது நித்திய வாசம் செய்து கொண்டிருக்கிறார்.

'மத்' என்னும் சொல்லால் கிடைக்கும் உட்பொருள் இதுவேயாம்.

## மூலம் : 135

**"இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்."**

1) ***பிராட்டியாரின் கருணை நிறைந்த சந்நிதி சேதனனுக்கு இன்றியமையாதது என்பதற்குச் சான்று தருக.***

பிராட்டியார் கருணையே வடிவமானவர். பெருமானின் சுதந்தரத் தன்மையை அடங்குமாறு செய்து, அவரிடமுள்ள அருள் தன்மையை மேலோங்குமாறு செய்பவர்.

இத்தகைய சிறப்புடைய பிராட்டியார் உடனிருந்த காரணத்தால் காகாசுரன் உயர்பிழைத்தான். பிராட்டியார் உடனில்லாது பிரிந்திருந்த காரணத்தால் பெருமானின் அம்புக்கு இலக்காகி இராவணன் உயிரிழந்தான்.

எனவே, இந்த ஸ்ரீமத் என்னும் பதத்தினால் பெருமானைப் பற்றுபவர் ஒவ்வொருவருக்கும் பிராட்டியாரின் சந்நிதி இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

**2) பெருமானுக்கும் பிராட்டிக்கும் உள்ள தொடர்பு என்றும் உள்ள ஒன்று என்னும் கருத்து இச்சான்றுகளால் முரண்படாதா?**

முரண்படாது. ஏனெனில், பரமபதத்தில் பிராட்டியார் பெருமானோடு மலரும் மணமும் போன்று எப்பொழுதும் சேர்ந்தே இருக்கிறார் என்பது உண்மையே!

ஆனால், பகவானின் அவதார காலங்களில் பெருமானுக்கேற்ப அவதாரம் செய்யும் பிராட்டியார் சீதாபிராட்டி என்றும், ருக்மிணி என்றும் பெயர் பெறுகிறார். அத்தகைய அவதார காலங்களில் அவதரிக்கும் பிராட்டிக்கும் பெருமானுக்கும் மட்டுமே பிரிவும் சேர்க்கையும் உளதாகிறது.

எனவே பெருமானுக்கும் பிராட்டிக்கும் சேர்க்கையும் பிரிவும் உண்டு என்பதும் பொருத்தமானதேயாம்.

**3) மூலம் 122லிருந்து 135 வரை கூறப்பட்டுள்ள செய்திகளைக் கூறுக.**

துவயத்தின் முதல் வாக்கியம் "பெருமானுடைய இரண்டு திருவடிகளையும், உபாயமாகப் பற்றுகிறேன்" என்பதையும், இரண்டாம் வாக்கியம் "இருவர் சேர்த்தியிலும் கைங்கர்யத்தைச் செய்யப் பெறுவேனாக!" என்பதனையும் விளக்குகிறது.

ஸ்ரீ என்பது பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம். ஸ்ரீ என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவதுண்டு. சேதனன் பிராட்டியாரைச் சேவிக்கிறான் என்பது ஒரு பொருள். பிராட்டியார் பெருமானைச் சேவிக்கிறார் என்பது மற்றொரு பொருள்.

பிராட்டியார் புருஷகாரமாகச் சொல்லப்படுகிறார். சேதனன் செய்யும் அளவு கடந்த குற்றங்களைப் பெருமான் பொறுத்துக் கொள்வது பிராட்டியாருக்காகவே! பிராட்டியார் உலக மக்களுக்குத் தாயாக இருக்கிறார். எனவே, உலக மக்களின் துக்கத்தைப் பொறுக்க மாட்டாதவராகவும், பெருமானுக்குப் பத்தினியாகவும் இருந்து கொண்டு இன்பமூட்டுபவராகவும் இருத்தலின் பிராட்டியாரே குற்றமற்ற புருஷகாரமாக இருத்தற்கு உரியவராக இருக்கிறார்.

ஆரவாரமுடைய அனுமனையே பொறுமையைக் கடைப்பிடிக்குமாறு செய்தவர் பிராட்டியார்! அவருக்கு இவர்தம் சொற்படி நடக்கும் பெருமானைப் பொறுமை காட்டுமாறு கேட்டுக்கொள்வது சாத்தியமான செயலேயாகும்.

'மத்' என்பது பெருமானுக்கும் பிராட்டியாருக்கும் என்றும் தொடர்பு உள்ளது என்பதைக் குறிக்கிறது. பெருமான் பரம புருஷனாக விளங்குகிறான் என்னும் தத்துவம் பெருமான் பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருக்கும் தன்மையாலே உண்மையாகிறது.

சேதனர்கள் செய்யும் அளவற்ற குற்றங்களைக் கண்டு சுதந்தரத்தன்மையுடைய பெருமான் கோபித்துக் கொண்டால், 'தீங்கு ஏற்பட்டுவிடப் போகிறதே!" என்று கருணையுள்ளத்தோடு பிராட்டியார் பெருமானை ஓரிமைப்பொழுதும் பிரியாமல் நித்திய வாசம் செய்கிறார்.

பெருமானும் பிராட்டியும் இவ்வாறு சேர்ந்திருப்பதனால், தான் செய்யும் குற்றங்களால் தண்டனை ஏதும் கிடைக்காது என்னும் நிம்மதி சேதனனுக்குக் கிடைக்கிறது.



பெருமானை அடைவதற்கு வேட்கை மட்டும் இருந்தால் போதும், பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கிறார்களா என்று நோக்க வேண்டியதில்லை.

இருவரும் சேர்ந்திருந்தபோது காகாசுரன் வாழ்வு பெற்றான்; பிரிந்திருந்தபோது இராவணன் அழிவு பெற்றான்!

இச்செய்திகள் மூலம் 122 முதல் 135 வரையுள்ளவற்றில் தெளிவாக்கப்பட்டுள்ளன.

**'ஸ்ரீமத்' பதப் பொருள் முற்றிற்று.**

# 'நாராயண' பதப்பொருள்

## மூலம் : 136

"புருஷகார பலத்தாலே ஸ்வாதந்தர்யம் தலை சாய்ந்தால், தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்."

*1) நாராயணபதத்துக்குப் பொருள் யாது?*

*பிராட்டியாருடைய புருஷகாரத்தின் வன்மையினால் பெருமானுடைய சுதந்தரத்தன்மை மாய்ந்து போகும். இதனால் புருஷகாரத்திற்கு முன் தலையெடுக்கப் பெறாமல் மறைந்திருக்கும் குணங்களையும், புருஷகாரத்திற்குப் பின் ஓங்கி நிற்பனவுமான குணங்களைச் சொல்லுகிறது இந்த 'நாராயண' என்னும் பதம்.*

## மூலம் : 137

"அவையாவன - வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌசீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், சக்தியும்."

*1) பெருமானிடம் தலையெடுக்கும் குணங்கள் யாவை?*

*வாத்ஸல்யம் (அன்பு), ஸ்வாமித்வம் (உடையவனாயிருக்கும் இருப்பு), ஸௌசீல்யம் (உயர்ந்தவன்*

தாழ்ந்தவனோடு குற்றமறக் கலக்கும் தன்மை), ஸௌலப்யம் (எளியவனாயிருக்கும் இருப்பு), ஞானம் (அறிவு), சக்தி (சாமர்த்தியம்) எனப்படுபவை ஆறும் பெருமானிடம் தலையெடுக்கும் குணங்களாம்.

*2) வாத்ஸல்யம் என்றால் என்ன?*

கன்றினிடத்தில் பசு எந்த நிலையில் இருக்குமோ, அந்த நிலையே வாத்ஸல்யம் எனப்படும்.

புல்லில் சிறிது அசுத்தம் இருந்தாலும் தாய்ப்பசு அப்புல்லைத் தீண்டாது. ஆனால் தான் ஈன்ற கன்றின் உடலில் காணப்படும் அழுக்கினை நாவால் நக்கித் தூய்மைப்படுத்தும்; அத்துடன் பாலையும் ஊட்டும்; பிறவற்றால் தீங்கு வராமலும் பாதுகாக்கும்.

அங்ஙனமே பகவானும் தன்னை வந்தடைந்த சேதனனிடமுள்ள குற்றங்களைப் பாராமல், கருணையாகிய பாலைச் சொரிகிறான். சேதனனுக்குத் துன்பம் கருதாமல் அவனுக்குப் பல நன்மைகளையும் செய்கிறான்.

பசுவுக்குக் கன்றினிடமும், பகவானுக்குச் சேதனனிடமும் உள்ள அன்பே வாத்சல்யம் எனப்படும்.

*3) ஸ்வாமித்வம் என்றால் என்ன?*

சேதனன் பெருமானைக் கருதாமல் பாராமுகமாக இருப்பான். இந்நிலையில் பகவான் சேதனனை விடாமல் பற்றி நிற்பான்: இவ்வாறு பகவான் சேதனனை நோக்கிக்கொண்டு போவதற்குக் காரணமாக உள்ள தொடர்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

உலகப்பற்றில் இச்சை வைத்துச் சேதனன் பயனற்ற வழியில் செல்லும்போது, பகவான் தன் உடைமைப்

பொருளான சேதனனை அவன் போக்கிலேயே விட்டுவிட விரும்பமாட்டார்.

சேதனனுடைய குற்றங்களை நீக்கும் நிலை தொடங்கித் தனக்குக் கைங்கர்யம் செய்யும் நிலை வருகிற வரைக்கும் பகவான் சேதனனுக்குத் தெரியாமல் அவனுடன் தொடர்பு கொள்கிறார்.

பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள இத்தொடர்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

**4) ஸௌசில்யம் என்றால் என்ன?**

உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு குற்றமறக் கலத்தலே ஸௌசீல்யம் எனப்படும். இது இரு வகைப்படும்.

பகவான் தன் பெருமையையும் தன்னோடு கலக்கும் சீவான்மாவின் சிறுமையையும் நோக்காது, தனக்குக் கிடைத்த பேறாகக் கருதிச் சேதனனுடன் குற்றமறக் கலத்தல் ஒருவகை, இவ்வாறு கலத்தலுக்குப் பாத்திரமானவர்கள் ஞானிகள்.

சேதனன் விருப்பமின்றி இருப்பினும், பகவான் தானே வலிய சென்று சேதனனுடன் குற்றமறக் கலத்தல் மற்றொரு வகை. இவ்வாறு கலத்தலுக்குப் பாத்திரமானவர்கள் சமுசாரிகள்.

**5) ஞானம் என்பதனை விளக்குக.**

ஞானம் என்பது அறிவு எனப்படும். சேதனனிடம் உள்ள துன்பங்களைப் போக்கவும், இன்பங்களை ஈயவும் அறிவதற்குத் தகுதியாக உள்ள எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் நேராகக் காணவல்ல அறிவே ஞானம் எனப்படும்.

 

சேதனனிடமிருந்து போக்க வேண்டிய துன்பங்கள் சம்சாரம், கன்மம் முதலியன; ஈய வேண்டிய இன்பங்கள் பரமபதம், கைங்கர்யம் முதலியன.

*6) சக்தி என்றால் என்ன?*

சக்தி என்பது சாமர்த்தியம் எனப்பொருள்படும். மாறுபட்ட இரண்டு பொருள்களை ஒன்று ஈர்க்கும் சக்தியே சாமர்த்தியம் எனப்படும்.

இரும்பைப் பொன்னாக்குதல் போன்று, தாழ்ந்த நிலையில் உள்ள சம்சாரிகளை உயர்ந்த நிலையில் உள்ள நித்திய சூரிகளோடு சேர்த்து ஒரு வரிசையில் நிறுத்தும் ஆற்றலே சக்தி எனப்படும்.

7) ஸௌலப்யம் என்றால் என்ன?

எளியவனாம் தன்மையே ஸௌலப்யம் எனப்படும். தான் இருக்கும் பரமபதத்தை விட்டுப் பெருமானானவர் சமுசாரிகள் மத்தியில் வந்து அவதரித்துத் தன்னை எளியவனாக்கிக் கொள்கிறான்.

பெருமான் எளியவனாயிருக்கும் இருப்பை இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் ஆகிய அவதாரங்களிலும், அர்ச்சை வடிவிலும் கண்டு உணரலாம்.

கண்ணுக்குப் புலப்படாத பெருமான், தன் திவ்விய மங்கள விக்கிரகத்தைச் சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கு ஏற்ப எளியவனாயிருக்கும் இருப்பே ஸௌலப்யம் எனப்படும்.

## மூலம் : 138

"குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யஞ் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங்

**கண்டகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞான சக்திகள்".**

***1) பெருமானுக்குள்ள இக்குணங்கள் சேதனனுக்கு எவ்வகையில் உதவுகின்றன?***

*சேதனன் பெருமானைப் பற்றுவதற்கும், பெருமான் சேதனனைக் காத்தலுக்கும் இக்குணங்கள் உதவிபுரிகின்றன.*

***2). வாத்ஸல்யம் உதவும் வகையாது?***

*சேதனன் எம்பெருமானைப் பற்ற வேண்டும் என்று எண்ணுகிறான். அதே சமயம், தன்னிடமுள்ள குற்றங்களையும் உணர்கிறான். பெருமான் அன்பு வடிவானவன் என்று சேதனன் உணர்வதால், தன் குற்றங்களைக் கண்டு பயப்படாமல், ஆண்டவனைப் பற்றிக்கொள்ளும் நிலையை அடைந்து விடுகிறான். இந்த வகையில் வாத்ஸல்யம் சேதனனுக்கு உதவுகிறது.*

***3) ஸ்வாமித்வம் எவ்வகையில் உதவுகிறது?***

*அடியவனுக்கு ஆண்டவன் உடைமைப்பொருளாக இருக்கிறான். தன்னை உடைமைப்பொருளாகக் கொண்டு தலைவனாக விளங்கும் பகவான் தனக்கு வேண்டியவைகளைக் கட்டாயம் செய்தே முடிப்பான் என்னும் நம்பிக்கையைப் பெறுவதற்கு ஸ்வாமித்வம் சேதனனுக்கு உதவுகிறது.*

***4) ஸௌசீல்யம் எவ்வகையில் உதவுகிறது?***

*தன்னைவிடவும் தாழ்ந்தவர்களோடு வேறுபாடு எதுவும் பாராமல் அவர்களோடு கலந்து உறவாடும் நிலையே ஸௌசீல்யம் எனப்படும்.*

பெருமானின் காக்கும் தலைமை நிலையை நோக்கிச் சேதனன் பெருமானை இமைப்போதும் அகலாது நிற்கும் நிலைமைக்கு ஸௌசீல்யம் உதவி புரிகிறது.

**5) ஸௌலப்யம் உதவும் வகை யாது?**

அனைவருடைய கண்களுக்கும் தன் வடிவைப் புலப்படுமாறு செய்வது ஸௌலப்யம் எனப்படும்.

தன்னுடைய ஊனக்கண்களுக்குப் பெருமான் தோற்றம் அளிப்பவன் அல்லன் என்று சேதனன் தளர்வுறாமல் பெருமானைத் தன்னுடைய கண்களாலேயே கண்டு பற்றுவதற்கு ஸௌலப்யம் உதவுகிறது.

**6) ஞானம் எவ்வகையில் உதவுகிறது?**

எல்லாப் பொருள்களினுடைய எல்லா நிலைகளையும் அறியும் அறிவே ஞானம் எனப்படும்.

சேதனனிடமுள்ள பாவங்களைப் போக்கவும், அவனுக்கு அளிக்க வேண்டிய நலன்களை அளிக்கவும் ஈசுவர ஞானம் சேதனனுக்குப் பெரிதும் உதவுகிறது.

7) சக்தி உதவும் வகை யாது?

போக்க வேண்டுவனவற்றைப் போக்கவும், அளிக்க வேண்டுவனவற்றை அளிக்கவும் ஈசுவர சக்தி சேதனனுக்கு இன்றியமையாததாகிறது.

**8) இவை ஆறும் அல்லாமல் வேறு குணங்களும் பகவானுக்கு உள்ளதா?**

உள்ளது. அவை பிராப்தி, பூர்த்தி எனப்படும்.

ஆண்டான், அடிமை என்னும் நிலையில் அடியவன் அன்போடு செய்யும் அடிமைத்தொழிலை ஏற்றுக் கொள்ளும் குணமே பிராப்தி எனப்படும்.

அடியவனுக்கு எல்லா நலன்களையும் அளிப்பதற்கு உறுப்பாயுள்ளதே பூர்த்தி (நிறைவு) எனப்படும்.

***9) அடியவன் ஆண்டவனைப் பற்றுதற்கு நலமளிக்கும் நான்கு குணங்கள் யாவை?***

வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் எனப்படும் நான்கு குணங்களும் அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்கு நலமளிக்கும் நான்கு குணங்களாம்.

*10) அடியவனை ஆண்டவன் காத்தலுக்குத் துணைபுரியும் நான்கு குணங்கள் யாவை?*

ஞானம், சக்தி, பிராப்தி, பூர்த்தி எனப்படும் நான்கு குணங்களும் ஆண்டவன் அடியவனைக் காப்பதற்குத் துணைபுரியும் குணங்களாம்.

## மூலம் : 139

**“இங்குச் சொன்ன ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.”**

***1) அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்குத் தலைசிறந்த குணம் எது? ஏன்?***

அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்குத் தலைசிறந்த குணம் ஸௌலப்யமே!

அடியவன் தன் கண்களாகிய புலனால் ஆண்டவனைக் காண்பதற்கு வசதியாக இருப்பது ஸௌலப்யமே! எனவே தான் இக்குணம் தலைசிறந்ததாகிறது.

***2) ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமாவது யாது?***

ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.

தன்னை மலர் முதலான பொருள்களைக் கொண்டு அடியவன் வழிபட்டு வாழவேண்டுமென்று ஆண்டவன்

எண்ணுகிறான். எனவே, அடியவனுக்கு வசதியாக அவன் விரும்பும் சிலை வடிவில் (திருமேனியில்) ஆண்டவன் எழுந்தருள்கிறான்.

தான் விரும்பும் திருமேனியில் பகவான் எழுந்தருள வேண்டுமென்று அடியவன் செய்யும் பிரார்த்தனைக் கிணங்கப் பகவான், பரமபதத்தில் அடியவர்களுக்கு அருள்வதைப் போன்றே அர்ச்சை ரூபத்தில் எழுந்தருளி அடியவனுக்கு அருள்புரிகின்றான்.

"தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே!" என்பார் பொய்கையாழ்வார். ஆழ்வாரின் இப்பாசுரம் இக்கருத்தினை வலியுறுத்துவதைக் காணலாம்.

## மூலம் : 140

**"இதுதான் பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்."**

1) *அர்ச்சாவதாரத்தின் சிறப்பை நன்கு விளக்குக.*

பகவான் எழுந்தருளியிருக்கும் பரமபதம், திருப்பாற்கடல் ஆகியவை எளிதில் சென்று சேர முடியாதபடி எங்கோ இருக்கின்றன. மேலும், அவை மனத்திற்கும் எட்டாதவை. எனவே, இவ்விரண்டையும் அடைந்து ஆண்டவனைச் சேவித்தல் என்பது அடியவனால் முடியாத ஒன்றாகும்.

இராமாவதாரம், கிருஷ்ணவதாரம் ஆகியவை நம்போன்ற மானிட வடிவந்தாங்கி, மானிடரோடு மானிடராக வாழ்ந்து காட்டிய திருஅவதாரங்கள். ஆனால், பகவான் அவதரித்த அக்காலங்களில் நாம் வாழக்கொடுத்து வைக்கவில்லை.

*எனவே, எப்போதும், நம்மருகில் நிலைபெற்று நம் கண்களால் கண்டு களிப்பதற்கு இடந்தருவது அர்ச்சாவதாரமே!*

## மூலம் : 141

**"இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்."**

***1) முற்கூறிய குணங்களை நாம் அர்ச்சனையில் காண இயலுமா?***

*வாத்சல்யம் முதலான குணங்களைக் காண வேண்டுமென்று விரும்புகிற நாம், இக்குணங்களை நம்பெருமாள் பக்கத்திலே காணமுடியும்.*

***2) இங்கு, நம்பெருமாள் என்பது எந்தப் பொருளைக் குறிக்கும்?***

*வெவ்வேறு தலங்களிலும், வெவ்வேறு இல்லங்களிலும் அவரவர் விரும்பியவண்ணம் அந்தந்த அர்ச்சனையில் எழுந்தருளும் பெருமாளே நம்பெருமாள் எனப்படுவார்.*

## மூலம் : 142

**"திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸன பத்மத்திலேயழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்."**

***1) அர்ச்சையில் பெருமான் தம் தடக்கைகளில் ஆயுதங்களை ஏந்தியிருப்பானேன்?***

*வலிமை வாய்ந்த வீரனுக்கு மட்டுமே ஆயுதங்களை எப்போதும் தாங்கியிருப்பது ஏற்ற செயலாகும். பகவான் சங்கொடு சக்கரம் ஏந்திய திருக்கையினை உடையவராய் அர்ச்சையில் காட்சியளிக்கிறார்.*

தம்மை வந்தடையும் அடியவர்களின் விரோதிகளைப் போக்குவதற்கு இவ்வாயுதங்கள் பயன்படுகின்றன.

ஆயுதங்களை மட்டுமே தரித்திருப்பது வீரனுக்கு அழகன்று. பகையையும், அப்பகையினைப் போக்குதற்குரிய முறைகளையும் அறியும் அறிவுடையவனே வீரனாகக் கருதப்படுவான்.

ஞானமும், சக்தியும் உடையவராகப் பகவான் விளங்குகிறார். எனவே, பெருமானிடமுள்ள ஞானத்திற்கும், சக்திக்கும் ஒளிஊட்டுபவையாகவே பெருமானின் திவ்யாயுதங்கள் சுடர் விடுகின்றன.

எனவே, அடியவர் பொருட்டே ஆண்டவன் தம் திருக்கையில் திவ்யாயுதங்களை ஏந்தியிருக்கிறார் என்பதை அறியலாம்.

*2) பகவானின் திருக்கரம் அபய முத்திரையுடன் சேவை சாதிப்பானேன்?*

தாம் செய்யும் குற்றங்களைப் பெருமான் பொறுத்துக் கொள்வானோ? மாட்டானோ? என்று அடியவன் ஆண்டவனைச் சென்று அடைவதற்கு அஞ்சுகிறான்.

அதனால், பெருமான், "உங்கள் குற்றங்களைக் கண்டு நீங்கள் அஞ்சவேண்டா. என்னை வந்தடையுங்கள். நான் உங்களை ஏற்றுக்கொள்கிறேன்" என்று அடியார்களிடம் காட்டும் அறிகுறியாகவே பெருமான் அபய முத்திரையுடன் சேவை சாதிக்கிறார்.

*3) பெருமான் தம் சிரசின் மீது திருமுடியைக் கவித்திருப்பானேன்?*

எல்லா உலகங்களுக்கும் தானே தலைவனாயிருப்பதை அறிவிக்கும் அறிகுறிக்காகவே பெருமான் தம்சிரசில் மணிமுடியைக் கவித்திருக்கிறார்.

**4) பெருமானின் திருமுகம் முறுவலுடன் காட்சியளிப்பது ஏன்?**

பெருமானின் முகமலர்ச்சியும், புன்சிரிப்பும் அடியவர்களைக் காணும்போது அவர்களுடன் இரண்டறக் கலப்பதாகிய சீலத்தைக் குறிக்கிறது.

**5) ஆஸன பத்மத்திலே அழுந்தின திருவடிகள் உணர்த்துவது யாது?**

தாமரை மலரில் அழுந்தி நிற்கும் இறைவனின் திருவடிகள் அனைவரும் தன்னை வந்து எளிதில் பற்றிக் கொள்ளலாம் என்பதை உணர்த்துகிறது.

**6) நமக்குப் புகலிடமாக இருப்பது எது?**

சங்கொடு சக்கரம் ஏந்திய திருக்கைகளுடனும், அபயகரத்துடனும், கவித்தமுடியுடனும், முகமலர்ச்சியுடனும், புன்சிரிப்புடனும், தாமரைமலரில் ஊன்றி நிற்கும் திருவடிகளுடனும் காட்சி தந்து நிற்கும் பெருமானின் நிலையே நமக்குப் புகலிடமாக உள்ளது.

## மூலம் : 143

"ரக்ஷகத்வ போக்யத்வங்களிரண்டும் திருமேனியிலே தோற்றும்."

**1) இரட்சகத்துவம், போக்யத்துவம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியிலே தோன்றும் என்பதனை விளக்குக.**

பெருமானையே, உபாயமாகப் பற்றியிருப்பவன், உபாயாதிகாரி எனப்படுவான். பெருமானே உபாயமாக உள்ளான் என்னும் இந்த ஞானம் வரப்பெற்றவன் பிரபன்னன் என்றும் அழைக்கப்படுவான்.

பிரபன்னன் ஆண்டவனிடம் விரும்புவது அவனுடைய இரட்சகத்தன்மையேயாகும்.

அர்ச்சையில் பகவான் ஆன்மாக்களைக் காத்தற்கு வேண்டிய திருவாழி திருச்சக்கரங்களோடும் கவித்த முடியோடும் காட்சி தருகிறான். இதனால் பகவான், இரட்சகத்தன்மை ஒளிவீசுகிறது.

மேற்கூறியவற்றுடன் ‘அஞ்சல்’ என்னும் திருக்கரமும், முகமும் முறுவலும், தாமரை இருக்கையில் அழுத்தின திருவடிகளும் ஆகிய ஒவ்வொன்றும் அழகு நிறைந்தனவாயிருத்தலின், பகவானுடைய போக்கியத் தன்மை மிளிர்கிறது.

கைங்கர்யபரன் விரும்புவது பகவானிடமுள்ள போக்கியத்தன்மையையேயாகும்.

இவ்வாறு பகவானுடைய திருமேனியிலே இரட்சகத்வம், போக்கியத்துவம் ஆகிய இரண்டும் மிளிர்வதைக் காணலாம்.

**2) மூலம் 136 முதல் 143 வரை காணப்படும் கருத்துகளைத் தொகுத்து வரைக.**

“பிராட்டியாரின் புருஷகாரத்தால் ஒளிருகின்ற குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம். வாத்சல்யம் முதலானவையே இக்குணங்கள். இக்குணங்கள் சேதனனுக்கு உதவி புரிகின்றன. இக்குணங்களுள் சேதனன் கண்ணால் கண்டு பற்றுதற்கு இடனாயுள்ள ஸௌலப்பியமே சிறந்தது. அந்த ஸௌலப்பியத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே!

இந்த அர்ச்சாவதாரம் பரத்துவம், வியூகம் போன்று இல்லாமல் நேராகவே கண்டு பற்றுதற்கு இடனாய் இருக்கிறது.

இக்குணங்கள் யாவற்றையும் திருவரங்கம் முதலிய திருப்பதிகளில் அர்ச்சையாய் எழுந்தருளியுள்ள எம்பெருமானிடம் காணலாம். இவ்வர்ச்சைகளில் இக்குணங்களை ஒளிரச் செய்யும் இடங்கள் இன்னின்னவை என்பது, அவ்வாறு எழுந்தருளியிருக்கும் நிலையே நமக்குத் தஞ்சம்.

இரட்சகத்வம், போக்யத்வம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியிலே தோன்றும்" என்பனவாகிய கருத்துகள் இம்மூலங்களில் காணப்படுகின்றன.

## மூலம் : 144

**"சரணௌ - திருவடிகளை."**

*1) 'சரணௌ' என்பதன் பொருள் யாது?*

சரணௌ என்பதற்கு இரண்டு திருவடிகள் என்பது பொருளாகும். தமிழிலக்கணத்தில் எண் என்பது ஒருமை, பன்மை என இரண்டு வகைப்படும். ஆனால் வடமொழியிலோ ஒருமை, இருமை, பன்மை என்று எண் இலக்கணம் மூவகைப்படும்.

'சரணௌ' என்பது இருமையையே குறிக்கும். எனவே 'சரணௌ' என்பதற்குப் பெருமானுடைய இரண்டு திருவடிகள் என்பது பொருளாகும்.

*2) பகவானுடைய திருவடிகள் இரண்டையும் பற்றிக் கொள்ள வேண்டும் என்பது ஏன்?*

பகவான் எங்கும் நிறைந்த பரம்பொருள், 'அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும்'

பரம்பொருளை மனத்தால் பற்ற இயலாது. விக்கிரகத்தோடு கூடிய நிலையில்தான் பகவானைப் பற்ற முடியும்.

குற்றங் குறைகள் நிறைந்த சேதனன், பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தில் ஒரு பகுதியாகிய திருவடிகளைப் பற்றும்போது தான் பகவானுடைய அருள் நோக்கு மேற்கிளம்பிச் சேதனனுக்கு வாழ்வு தரும்.

## மூலம் : 145

**"இத்தால் சேர்த்தியழகையும் உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது."**

***1) இருமையைக் குறிக்கும் 'சரணௌ' என்பதால் சொல்லப்படும் பொருள் யாது?***

இரண்டு திருவடிகளையும் சொல்லும் 'சரணௌ' என்பதனால், திருவடிகள் இரண்டும் சேர்ந்திருப்பதன் அழகையும், வேறொருவர் உதவியையும் பொறாத உபாயத்தின் பூர்த்தியையும் சொல்லுகிறது.

## மூலம் : 146

**"பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்."**

***1) இத்திருவடிகளின் குணச்சிறப்பு யாது?***

உபாயத் தன்மைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது இத்திருவடிகளே!

புருஷகாரப் பொருளான பிராட்டியாரும், உபாயப் பொருளான எம்பெருமானும் தம்மைக் கைப்பற்றியவரைக் கைவிட்டாலும் விட்டுவிடுவர். ஆனால், பகவானுடைய

திருவடிகளோ என்றும் கைவிடாது, மிக்க உறுதியுடையனவாய்த் தம்மைப் பற்றி நின்றாரைக் காத்து நிற்கும்.

*2) பெருமானையும், பிராட்டியையும் விடத் திருவடிகள் எங்ஙனம் சிறந்தனவாம்?*

அடியவனுடைய துன்பநிலையைக் கண்டு மனமிரங்கும் பிராட்டியார், இவனிடமுள்ள குற்றங்களைக் கருதிப் பெருமானிடம் இவ்வடியவனைப் பற்றிக் கூறாமலும் இருந்துவிடலாம்.

தன்னடியவன் குற்றமுடையவனாக இருப்பினும், "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்று தன் வாத்சல்ய குணத்தினால் அடியவனைக் காக்கும் பெருமானும் அவனைக் கைவிட்டாலும் விடலாம்.

இவ்வாறு பெருமானும் பிராட்டியும்கூட ஒரொருகால் தம் அடியவரைக் கைவிடுவதுமுண்டு. ஆனால் தம் அழகினால் அடியவரை அப்புறம் செல்லாதவாறு அகப்படுத்திக் கொள்ளும் திருவடிகளோ, தன் அடியாரை விடாது பற்றிக்கொள்ளும் திண்மை வாய்ந்தனவாம்.

எனவேதான் 'வண்புகழ் நாரணன் திண்கழல்கள்' சிறப்புடையன.

## மூலம் : 147

**"சேஷிபக்கல் சேஷபூதனிழியும்துறை, ப்ரஜை முலையிலே வாய் வைக்குமா போலே."**

*1) பகவானின் திருவடிகளைப் பற்றுதல் சேதனுடைய சொரூபத்திற்கு இயல்பான செயலே' என்பதனைச் சான்று காட்டி விளக்குக.*

பாலுண்ணும் பச்சைக் குழந்தையானது தன் தாயினுடைய மற்ற உறுப்புகளை விட்டு விட்டுத் தன் தாயின் கொங்கையிலேயே வாய் வைக்கும். தான் உயிர் வாழ்வதற்கு இடமாக உள்ளது தன் தாயின் கொங்கையே என்பது அக்குழவிக்கு இயல்பிலேயே தெரிந்த ஒன்றாகும்.

அதுபோலவே, தலைவனாகிய பெருமானைப் பற்றப்புகும் அடியவன் எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டுவிட்டுத் தான் உய்வதற்கு இடனாக உள்ள எம்பெருமான் திருவடிகளையே பற்றுகிறான்.

தாயின் கொங்கையில் வாய்வைத்தல் சேயின் இயல்பான செயல். அதுபோலவே, பெருமானின் திருவடிகளைப் பற்றுதல் சேதனனின் இயல்பான செயல் என்பதும் தெளிவாகிறது.

## மூலம் : 148

**"இத்தால், பிராட்டிக்கிருப்பிடமாய், குணப்ரகாசகமுமாய்ச் சிசுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக் கொள்ளுந்திருமேனியை நினைக்கிறது."**

1) ***திருவடிகளைச் சொல்லும் 'சரணௌ' என்னும் பதம் திருமேனியையும் குறிக்கும் என்பதனை விளக்குக.***

பெருமான் திருமேனியின் ஒரு பகுதியே திருவடிகள். 'சரணௌ' ஒரு பகுதியே திருவடிகள். 'சரணௌ' என்னும் பதம் இத்திருவடிகளையே குறிக்கிறது. இத்திருவடிகள் பெருமானின் திவ்விய மங்கள விக்கிரகத்தை நினைக்கச் செய்கிறது.

பெருமானின் திருமேனி பெரிய பிராட்டியார் வாழுமிடமாக உள்ளது. வாத்சல்யம் முதலான குணங்கள்

ஒளிர்வதற்கு இடனாக உள்ளது; அறத்திற்குப் பகைவனாக இருந்த சிசுபாலனையும் தன் அழகால் தன்னை விரும்புமாறு செய்து அவனுடைய பகைமையையும் போக்கச் செய்வதாய் அமைந்தது.

இதனால், பகவானின் திருவடிகள் திருமேனியையும் குறிக்கிறது என்பதனை உணரலாம்.

2) இம்மூலத்தால் உணரப்படும் குறிப்புப் பொருள் யாது?

திருமேனி 'பிராட்டிக்கு இருப்பிடம்' என்பது 'ஸ்ரீமத்' என்னும் பதத்தால் அறியப்படும் செய்தியாகும்.

'குணப்ரகாசகமுமாய் என்பது 'நாராயண' என்னும் பதத்தின் பொருளைக் குறிக்கிறது

'சிசுபாலனையும் அகப்படத்திருத்திச் சேர்த்துக் கொள்ளும் திருமேனி' என்பது 'சரணௌ' என்னும் திருவடிகளைக் காட்டித் திருமேனியையும் குறிக்கிறது.

"ஸ்ரீமத் நாராயண சரணௌ" என்னும் தொடரின் பொருளை இம்மூலம் குறிப்பாக உணர்த்துவது அறிந்து இன்புறலாம்.

## மூலம் : 149

**"சரணம் – இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக."**

1) சரணம் என்னும் பதத்தின் பொருள் யாது?

இரட்சகம், இல்லம், உபாயம் முதலான பொருள்கள் சரணம் என்னும் பதத்திற்கு உண்டு. எனினும், இங்கு உபாயம் என்னும் பொருளே கொள்ளத் தக்கதாம்.

2) சரணம் என்னும் சொல் எச்சொல்லின் பொருளோடு சேர்ந்து முடிகிறது?

சரணம் என்னும் சொல் 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்னும் சொல்லின் பொருளோடு சேர்ந்து முடிகிறது.

***3) இஷ்டங்கள் என்பவை யாவை?***

இஷ்டங்கள் (விருப்பங்கள்) என்பவை ஆன்மா அர்ச்சராதி மார்க்கத்தில் செல்லுதலும், பரமபதத்தைப் பெறுதலும், எம்பெருமானைத் தரிசித்தலும், அவன் கல்யாண குணங்களை அனுபவித்துக்கொண்டு கைங்கர்யம் புரிதலும் ஆம்.

***4) அநிஷ்டங்கள் என்பவை யாவை?***

தேகமே ஆன்மா எனக் கருதும் அறியாமை, அவ்வறியாமையின் காரியங்களாகிற விருப்பு வெறுப்புகள், புண்ணிய பாவங்களாய் உருக்கொண்டுள்ள கருமங்கள், இன்ப துன்பங்களை அனுபவித்தற் பொருட்டுத் தேவர் மனிதர் விலங்கு தாவரம் முதலிய சரீரங்கள், தெய்வம் முதலியவற்றால் ஏற்படும் தாபங்கள் முதலியன அநிஷ்டங்கள் எனப்படும்.

***5) சேதனன் இறைவன் திருவடிகளை ஏன் உபாயமாகப் பற்ற வேண்டும்?***

இஷ்டங்களை அடைவதற்கும், அநிஷ்டங்களை நீக்குவதற்கும் தப்பாத உபாயமாக இறைவன் திருவடிகள் விளங்குவதால், அத்திருவடிகளைச் சேதனன் உபாயமாகப் பற்றவேண்டும்.

## மூலம் : 150

**"இத்தால் - ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது."**

***1) பகவானாகிற உண்மைப்பொருளே, உபாயமாகவும் உள்ளது என்பதைக் குறிக்கும் கருத்து யாது?***

எம்பெருமானை உபாயமாகச் சொல்லுகிற சரணத்தால், உபாய வஸ்துவே உபேயமாகவும் உள்ளது என்னும் கருத்து இம்மூலத்தில் குறிக்கப்படுகிறது.

பகவானுடைய திருவடிகளே உபாயமாகவும், உபேயமாகவும் உள்ளது என்பது கருத்தாம்.

(ப்ராப்யம் = பெறுவது; ப்ராபகம் = பெறுமாறு செய்வது)

## மூலம் : 151

**"கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே?"**

1) ***முன்பு கூறிய மூன்று பதங்களில் உபாயத்தைப் பற்றிய பேச்சு உண்டா? என்பதனை விளக்குக.***

"ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்பவை முன்பு சொன்ன மூன்று செய்திகள்.

ஸ்ரீமந் - பிராட்டியாரோடு கூடியிருத்தல்.

நாராயண - கல்யாண குணங்களைப் பெற்றிருத்தல்.

சரணௌ - திவ்விய மங்கள விக்கிரகத்தோடு கூடியிருத்தல். ஆகிய இவை மூன்றும் சேதனன் அனுபவிக்கத் தக்க பொருளாகச் சொல்லப்பட்டுள்ளது.

எனவே, முன்பு கூறிய மூன்று பதங்களில் உபாயத்தைப் பின்பற்றிப் பேசப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

## மூலம் : 152

**"இவன் செயலுறுதியாலே உபாயமாக்குகிறானத்தனை"**

1) ***உபேயப் பொருளான பகவானையே சேதனன் உபாயமாகப் பற்றுவானேன்?***

பகவானைத் தவிர வேறு பொருள்களை நன்மை தரக்கூடியனவாகவும், வேறொருவரை இரட்சகப் பொருளாகவும் கருதுவதில்லை.

எனவே, உபேயப் பொருளான பகவானையே உபாயப் பொருளாகப் பற்றிக்கொள்ளுகிறான். இதனால் சேதனன் பகவானையே உபாயமாகவும், பயனாகவும் கொள்கிறான்.

***2) இக்கருத்தினைச் சான்று ஒன்றால் விளக்குக.***

ஒருவனுக்குப் பித்த நோய் வந்து விடுகிறது. அவனுக்குக் குடிப்பதற்குப் பாலைக் கொடுக்கின்றனர். பித்த நோயாளியாதலால், அவனுக்கு மற்ற பொருள்களைப் போலவே பாலும் கசக்கிறது.

எனினும், பாலையே மருந்தாக மருத்துவர் கொடுத்து உண்ணச் சொல்கிறார். அப்போது பால் ஒன்றே நோயாளிக்குப் போக்கியமாகவும், மருந்தாகவும் இருவகைகளில் பயனை அளிக்கிறது.

அதுபோலவே, சேதனனுக்குப் பகவானே உபாயமாகவும், உபேயமாகவும் இருந்து பயன் தருகிறான்.

## மூலம் : 153

**" 'சரணௌ சரணம்' என்கையாலே - உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது."**

*1). உபேயத்தையே உபாயமாகச் சொல்லுவதனால், இங்கு இவ்வுபாயத்திற்குள்ள சிறப்பு யாது?*

பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருத்தல், கல்யாண குணங்களோடு கூடியிருத்தல், திவ்ய மங்கள விக்கிரகத்தோடுங் காட்சியளித்தல் ஆகிய மூன்று

நிலைகளிலும் கூடிய பெருமானையே உபாயமாகச் சொல்லுவதால், மற்ற உபாயங்களைக் காட்டிலும் இவ்வுபாயம் சிறப்புடையதாம்.

**2) மற்ற உபாயங்கள் யாவை?**

கன்மயோகம், பத்தியோகம், ஞானயோகம் எனப்படும் மூன்றும் மற்ற உபாயங்களாம்.

**3) கன்ம யோகம் என்றால் என்ன?**

அடியவன் தன் நிலைகளுக்கு ஏற்பச் சில செயல்களைச் செய்கிறான். அவ்வாறு செய்யும் பொழுது அச்செயல்களைத் தான் செய்வதாக எண்ணுவதில்லை. இச்செயல் என்னுடையது என்று அகங்காரம் கொள்ளுவதில்லை. இம்மை, மறுமைப் பயன்களையும் எண்ணிச் செய்வதில்லை. பகவானின் முகமலர்த்திக்கு உறுப்பாகவே இச்செயல்களைச் செய்கிறான். இவ்வாறு செய்யப்படுவதே கன்ம யோகம் எனப்படும்.

**4) ஞானயோகம் என்றால் என்ன?**

பகவானுக்குச் சரீரப்பொருளாக உள்ள ஆன்மாவைப் பற்றிச் சிந்தித்தல் ஞானயோகம் எனப்படும்.

**5) பத்தி யோகம் என்றால் என்ன?**

விக்கிரக குணங்கள், ஆன்ம குணங்கள் இவற்றோடுங் கூடிய பெருமானை வேறு பொருள்கள் கலவாமல், தைலதாரையைப் போல் (எண்ணெயொழுக்கு போல்) இடைவிடாமல் அன்போடு சிந்தித்தல் பக்தி யோகம் எனப்படும்.

**6) 149 முதல் 153 வரையுள்ள மூலங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.**

சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருள். எம்பெருமானை உபாயம் என்று சொல்லுகிற சரணம் என்னும் பதத்தால் உபேயமே உபாயம் எனச் சொல்லுகிறது.

பிராட்டியாரோடு சேர்ந்திருந்தல், கல்யாண குணங்களுக்குக் கடலாயிருத்தல், திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பெற்றிருத்தல் ஆகிய இம்மூன்றும் கூடியிருப்பவனாகிய பெருமானே பலனாம்.

வேறு நன்மையற்றிருக்கை (ஆகிஞ்சன்னியம்), வேறு இரட்சகப்பொருள் அற்றிருக்கை (அநந்ய கதித்வம்) ஆகியவற்றையுடைய சேதனன் உபேயனான பெருமானையே உபாயமாகப் பற்றுகிறான்.

மற்ற உபாயங்களைத் காட்டிலும், பெருமானாகிற உபாயம் சிறப்புக்குரியது" ஆகிய கருத்துகள், மூலம் 149 முதல் 153 வரை சொல்லப்பட்டுள்ளன.

## மூலம் : 154

**"ப்ரபத்யே - பற்றுகிறேன்"**

***1) ப்ரபத்யே என்னும் வினைச் சொல்லுக்குப் பொருள் யாது?***

ப்ரபத்யே என்னும் வினைச் சொல்லுக்குப் பொருள் 'பற்றுகிறேன்' என்பதாம்.

'பத' என்னும் வினையடியிலிருந்து இது உண்டானது. இது தன்மை வினைமுற்று.

## மூலம் : 155

**"வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு இழவில்லை; ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது."**

*1) பெருமானை எந்தக் கரணத்தால் பற்றவேண்டுமென்று சொல்லுகிறார்?*

*பெருமானை மனத்தினால் பற்ற வேண்டுமென்கிறார். 'என்னைக் காத்தல் வேண்டும்' என்று வாக்கினால் வேண்டுதல், கையினால் பகவானை வணங்கி, இரட்சகனாகிய அவரிருக்குமிடத்திற்குச் செல்லுதல் ஆகிய இவ்விரு வகையாலும் பெருமானைப் பற்றினாலும் பலன் கைகூடும்.*

*ஆனாலும், ஞானத்தில் மோட்சம் என்று கூறப்பட்டிருத்தலால், மனத்தினால் பெருமானைப் பற்ற வேண்டும் என்பதை இங்கு ஆசிரியர் வலியுறுத்துகிறார்.*

## மூலம் : 156

"உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயமல்லாமையாலும் இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை."

*1) பெருமானை மனத்தினால் மட்டும் பற்றினால் போதுமா? விளக்குக.*

*மனம், வாக்கு, காயம் என்பன முக்கரணங்கள் எனப்படும். பலனைப் பெறுதற்கு மனப்பற்றுதல் ஒன்றே போதுமானது. மூன்றும் வேண்டும் என்னும் நிர்ப்பந்தமில்லையென்று ஆசிரியர் தெளிவாகக் கூறுகிறார்.*

*சேதனன் பலன் பெறுதலுக்கு உண்மையான உபாயம் பெருமானே! முக்கரணங்களாலும் பெருமானைப் பற்றுதல் உபாயம் போலவே தோன்றினாலும், இவை உண்மையான உபாயங்களாகா!*

*பயனைப் பெறுதற்கு மனப்பற்றுதல் ஒன்றே போதுமாகையால், மூன்றும் வேண்டும் என்கிற நிர்ப்பந்தமில்லை.*

*மூன்றும் வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை என்று கூறியுள்ளதால், வாயினால் துதித்தல், காயத்தால் வணங்கல், மனத்தினால் சிந்தித்தல் ஆகிய மூன்றினால் பற்றினாலும் குற்றமில்லையென்பது ஆசிரியர் கருத்தாம்.*

## மூலம் : 157

**"வர்த்தமாந நிர்த்தேசம் - ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது அநுஸந்திக்கைக்காக."**

*1) 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்று நிகழ்கால வினை முற்றாகச் சொல்லியிருப்பது ஏன்?*

*"அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே", "நின்னடியினை அடைந்தேன்" என்பனபோல ஆழ்வார்கள் 'புகுந்தேன்', 'அடைந்தேன்' என்று இறந்தகாலமாகவே சொல்லியுள்ளனர்.*

*ஆனால், இங்கு 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்று நிகழ்காலத்திலேயே சொல்லப்பட்டுள்ளது.*

*சேதனன் உடலோடுங்கூடி இவ்வுலகில் வாழ்கிறான். அப்போது ரஜசு, தமசு குணங்கள் தலையெடுக்கும். இதனால் கன்ம, ஞான, பக்திகளாகிற வேறு உபாயங்களிலும் நுழையக்கூடும். தீய செயல்களாகிற அபாயங்களையும் செய்யக்கூடும். இவ்வாறு செய்வது சேதனன் நிலைக்குப் பொருந்தாது.*

*இவனிடம் சத்துவ குணங்கள் தலையெடுக்கும் போது முன் செய்த செயல்களுக்காக வருத்தப்படுவான். தான் செய்த தீச்செயல்கள் குறித்து அச்சப்படுவான்.*

*அப்போது தன் செயல்களுக்கு வேறு பரிகாரம் தேடும் தகுதியை இழந்தவனாகிறான். "பகவானே உன் திருவடிகளைப் பற்றுகிறேன்" என்று நிகழ்காலத்திலேயே சிந்திக்கிறான். எனவேதான், பிரபத்தி நிகழ்காலத்திலேயே சொல்லப்பட்டுள்ளது.*

## மூலம் : 158

**"உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமை யாலும் நடக்கும்."**

*1) பிரபத்தியை நிகழ்காலத்தில் சொல்லுதற்குரிய பயன்கள் யாவை?*

*சேதனன் இப்பிறவியில் பிரபத்தி செய்வதற்கு முன்பு பல பிறவிகளிலும் வேறு உபாயங்களைக் கடைப்பிடித்து ஒழுகிய பழக்கமுடையவன்.*

*எனவே, சேதனன் தன்னை அறியாமலே வேறு உபாயங்களில் தன் மனம் செல்லாதிருப்பதற்குப் 'பற்றுகிறேன்' என்னும் சிந்தனை தவிர வேறு ஒன்றால் பொழுது போக்குதல் அரிதாகும். இதனாலும், பிரபத்தி செய்வதன் இனிமையின் மிகுதியாலும் (போக்கியதையாலும்) இப்பிரபத்தி அநுசந்தானம் (பற்றுகிறேன் என்னும் சிந்தனை) சேதனனுக்கு இடைவிடாமல் நடைபெற வேண்டிய ஒன்றாகும்.*

## மூலம் : 159

**"பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்."**

*1) பயனைப் பெறுதற்பொருட்டுப் பலமுறையும் சிந்தித்தால் வரும் குறையாது?*

*பேற்றை அடைவதற்குப் பல காலும் பிரபத்தியைச் சிந்தித்தல் வேண்டும் என்று பிரபன்னன் கருதினால், வேறொரு துணையையும் பொறுக்கமாட்டாத சித்தோபாயம் (பகவான்) தானாகவே நழுவிவிடும்.*

*அனுமன் பிரமாத்திரத்தால் கட்டுண்டான். பிரமாத்திரத்தின் பெருமையையும், திண்மையையும் உணரமாட்டாத அரக்கர்கள் பிரம்மாத்திரத்தின் மீது நம்பிக்கையற்றனர். எனவே, பிரம்மாத்திரத்தின் மேல் சணல் கயிற்றைப் போட்டுக் கட்டினர். அவ்வாறு கட்டிய அளவில் பிரமாத்திரம் தானே அறுந்து வீழ்ந்தது.*

*அவ்வாறே சித்தோபாயமும் தானே நழுவிப்போகும். எனவேதான், பலகாலும் சிந்திக்காமல் நிகழ்காலத்தில் மட்டுமே சிந்தித்தல் தக்கது என்கிறார்.*

***2) மூலம் 154 முதல் 159 வரையுள்ள கருத்துகளைத் தொகுத்து வரைக.***

*" 'ப்ரபத்யே' என்னும் வினை முற்றுக்குப் 'பற்றுகிறேன்' என்பது பொருள். அப்பற்றுதல் மொழியாலும், மெய்யாலும் ஏற்படினும் பேற்றுக்குக் குறைவில்லை. எனினும், அறிவினாலே வீடு பேறுண்டு என்பது சித்தாந்தம். ஆதலால், அதற்கேற்ப மனத்தினால் பற்றும் பற்றுதலே விரும்பத்தக்கது. எம்பெருமானே உபாயமல்லாமல் காரணங்களால் ஏற்படும் பற்றுதல்கள் உபாயப் பொருள்கள் ஆகாமையின், அதிகாரியாதற்கு மனத்தினால் பற்றுதலே போதியதாகும். மனம் தவிர மெய், மொழி ஆகிய இரு கரணங்களாலும் பற்ற வேண்டும் என்னும் நிப்பந்தமில்லை.*

*மெய்மொழிகளினால் பற்றினாலும் அதிகார பூர்த்தி உண்டு. வினைமுற்றில் குறிக்கப்படும் நிகழ்காலத்திற்குப் பயன்கள் சில உள. பேற்றிற்காகப் பலகாலும் சிந்தித்தால் சித்தோபாயம் நழுவிவிடும்" என்பனவாகிய செய்திகள் 154 முதல் 159 வரையுள்ள மூலங்களின் கருத்துகளாம்.*

## மூலம் : 160

**"உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது."**

***1) உத்தரவாக்யமாவது யாது?***

*"ஸ்ரீமதே நாராயணாய நம:" என்பது உத்தரவாக்கியம்.*

*துவயம் இரண்டு வாக்கியங்களாக உள்ளது என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம். "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம' என்பது துவயம். ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" முதல் வாக்கியம். (பூர்வ வாக்கியம்) "ஸ்ரீமதே நாராயணாய நம:" இரண்டாவது வாக்கியம் (உத்தரவாக்கியம்.)*

***2) உத்தரவாக்கியம் கூறுவது யாது?***

*பெரியபிராட்டியாரோடு கூடியிருப்பவனாகவும், யாவருக்கும் தலைவனாகவும் இருக்கும் பெருமானின் திருவடிகளுக்குச் செய்ய வேண்டிய கைங்கர்யத்தைப் பற்றி உத்தரவாக்கியம் கூறுகிறது.*

## மூலம் : 161

**"ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை"**

***1) இவ்வநுசந்தானம எதற்காகச் செய்யப்படுகிறது?***

*பகவத் கைங்கர்யந் தவிர வேறொரு பலனுக்காக அன்று இவ்வநுசந்தானம். புதிய செல்வம், ஆன்மாநுபவம்,*

கைங்கரியம் ஆகிய இந்த நான்கனுள் எதையேனும் ஒன்றை விரும்பி, பிராட்டியாரோடுங்கூடிய இறைவனுடைய திருவடிகளைப் பற்றலாம்.

ஆனால், இம்மந்திரத்தின் பின்வாக்கியம் மேற்கூறிய பயன்களுள் முதல் மூன்றையும் நீக்கி, நான்காவதாகிய கைங்கரியப் பலனைப் பெறுதற் பொருட்டே எம்பெருமானைப் பற்றுவது! இதுவே சேதனன் பெறும் பலனுமாம்.

## மூலம் : 162

**"உபாயாந்தரங்களை விட்டு சரமோபாயத்தைப் பற்றினாப்போலே, உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது."**

***1) மற்ற பலன்களை விட்டு விட்டுப் பகவத் கைங்கர்யமாகிற பலனை மட்டும் விரும்புவது ஏன்?***

பெருமானாரைத் தவிர வேறு உபாயத்தைச் சேதனன் பற்றுவதில்லை. கன்ம, ஞான, பக்திகளை விட்டுத் தன் சொரூபத்துக்கு ஏற்பப் பெருமானையே உபாயமாகப் பற்றுகிறான்.

அதுபோல, பெருமானைத் தவிர வேறு போக்கியப்பொருள் அற்றிருக்கும் சேதனன் தன் சொரூபத்துக்கு ஏற்ப ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு விட்டுப் பெருமான் திருவடிகளில் புரியும் கைங்கர்யத்தையே விரும்புவது பொருத்தமாகும்.

## மூலம் : 163

"இவன் அர்த்திக்க வேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்."

## மூலம் : 164

"இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ள முகக்கும்."

1) *சேதனன் பெருமானிடம் கைங்கரியத்தைப் பிரார்த்தித்துத் தான் பெறவேண்டுமா? ஏன்?*

*ஆம்! பிரார்த்தித்துத்தான் பெறவேண்டும்.*

*கைங்கரியத்தைப் புரியவேண்டும் என்று விரும்பும் சேதனனுடைய எண்ணத்தைப் பேரறிவாளனான பெருமான் அறியமாட்டானா? என்னில், அறிவான். என்றாலும், சேதனன் பெருமானிடம் சென்று, "என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே யாவோம்! உனக்கேநாம் ஆட்செய்வோம்" என்று பிரார்த்தித்தால், இவன் பிரார்த்தனையைச் செவி ஏற்றவுடனே பெருமான் மகிழ்ச்சியடைகிறான்.*

*பெருமான் மகிழ்ச்சி அடைய வேண்டும் என்பதற்காகவே சேதனன் பெருமானைப் பிரார்த்திக்க வேண்டியுள்ளது.*

*நோயால் வருந்தும் குழந்தை உணவில் விருப்பின்றிக் கிடக்கும். நோய் நீங்கியவுடன் பசி ஏற்பட்டு "அம்மா! எனக்கு உணவு வேண்டும்!" என்று கேட்டால் அவ்வார்த்தையைக் கேட்டுத் தாய் ஆனந்தப்படுவாள்.*

*அதுபோலவே சேதனன் பிரார்த்தனையைக் கேட்டு ஆண்டவன் ஆனந்திப்பான்.*

## மூலம் : 165

"ஸ்ரீமதே - பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு,"

1) *ஸ்ரீமதே என்பதன் பொருள் யாது?*



ஸ்ரீமதே என்பதற்குப் பெரிய பிராட்டியாரோடு கூடியிருந்துள்ளவனுக்கு என்பது பொருளாம்.

## மூலம் : 166

**"அவன் உபாயமாமிடத்தில்தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனாமிடத்தில் தான் ப்ராப்யையுமாய், கைங்கர்யவர்த் திகையுமாயிருக்கும்."**

1) *பிராட்டியாரின் புருஷகாரநிலை, உபேயநிலை ஆகியவற்றை விளக்குக.*

பெருமான் சேதனனுக்குள்ள துன்பங்களைப் போக்கி இன்பங்களை அருளுவதற்கு உபாயமாய் நிற்குமிடத்தில், பிராட்டியார் புருஷகாரமாய் நிற்பார். இது புருஷகாரநிலை.

சேதனன் செய்யும் கைங்கர்யத்தைப் பெருமான் ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து அடையத்தக்க பொருளாகத் தான் இருக்கிறான். அப்போது பிராட்டியாரும் எம்பெருமானைப் போன்றே மகிழ்ச்சியடைந்து அடையத்தக்க பொருளாகவும், சேதனன் செய்யும் கைங்கர்யத்தை ஒன்று பத்தாகப் பெருமான் திருவுள்ளத்தில் படுமாறு செய்து அக்கைங்கர்யத்தை மேலும் மேலும் வளர்ப்பவராகவும் பிராட்டியார் இருப்பார். இது உபேய நிலை.

## மூலம் : 167

**"இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது."**

1) *'நாராயணாய' என்னும் பதப்பொருளைத் தெளிவாக விளக்குக.*

திருமந்திரத்தில் கூறிய 'நாராயணாய' என்னும் பதம் "நாராயணனுக்கே அடிமை செய்யப் பெறுவேனாக" என்று பொருள் தருகிறது.

ஆனால், துவயத்தில் கூறிய 'நாராயணாய' என்னும் பதம் இப்பொருளை விளக்கமாகக் கூறுகிறது.

துவயத்தில் கூறியுள்ள 'நாராயணாய' என்னும் பதம் சேதனன் செய்யும் அவ்வடிமையைப் பெற்றுக்கொள்ளுகிற வர்கள் பிராட்டியாரும் பெருமானுமாகச் சேர்ந்துள் ளார்கள் என்றும், அடிமை செய்பவன் மமகாரத்தை ஒழித்தவனாக இருத்தல் வேண்டும் என்றும் சொல்லுகிறது.

எனவே, திருமந்திரத்திலுள்ள 'நாராயணாய' பதத்திற்கு, இத்துவயத்தின் 'நாராயணாய' என்னும் பதம் விளக்கமாக அமைந்தள்ளது என்பதை அறியலாம்.

## மூலம் : 168

**"இளைய பெருமாளைப் போலே இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை."**

1) *பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் நிலையிலேயே ஸங்கல்பம் செய்ய வேண்டும் என்னும் நிர்ப்பந்தம் ஏன்?*

பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் சேர்த்தியில் அடிமைத் தொழில் புரிந்தார் இலக்குமணன்! அதுபோல, இருவர் சேர்த்தியில் தொண்டு செய்தலே சேதனனுடைய ஆன்ம சொரூபத்திற்கு ஏற்றதாம்.

இராமபிரானும், சீதாபிராட்டியும் கானகம் சென்றபோது, அவர்களைப் பின்தொடர்ந்து சென்ற

இலக்குமணன் செய்த தொண்டுகள் இத்தம்பதியருக்கு இனிமையை அளித்தது என்று இதிகாசத்தில் சொல்லப்பட்டுள்ளது. எனவே இவ்விருவருக்கும் அடிமைப்பட்டிருத்தலே சேதனனுக்குச் சொரூபமாம்.

## மூலம் : 169

**"அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே"**

***1) சேர்த்தியிலே அடிமை செய்வதில் உள்ள சிறப்பு யாது?***

*சேதனனுடைய தொண்டுகளைப் பெருமான், தன் சுதந்தரத்தன்மையினால் அசட்டை செய்யாது ஏற்றுக்கொள்ளுமாறு செய்பவர் பிராட்டியாரே!*

*எனவே, சேதனன் செய்யும் தொண்டு கைகூடுவதும், இனிமையைத் தருவதும் பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் சேர்த்தியிலேயே என்பது தெளிவாம்.*

## மூலம் : 170

**"நாராயணாய - ஸர்வ சேஷியாயுள்ளவனுக்கு."**

***1) நாராயணாய - என்பதன் பொருள் யாது?***

*எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாயிருப்பவன் என்பது பொருள்.*

## மூலம் : 171

**"இதிலே திருமேனியையும் குணங்களையும் சொல்லும்."**

***1) கைங்கர்யம் எனப்படுவது யாது?***

*பெருமானின் திருமேனி, குணங்கள் முதலியவற்றை அனுபவிப்பதனால் உண்டாகும் அன்பினால் செய்யப் படுவது கைங்கர்யம் எனப்படும்.*

*2) கைங்கர்யத்துக்கு முன் ஏற்படும் அனுபவத்திற்கு இலக்காயுள்ளவை யாவை?*

*பெருமானின் திவ்ய மங்கள விக்கிரகமும் (திருமேனியும்) கலியாண குணங்களும் கைங்கர்யத்திற்கு முன் ஏற்படும் அனுபவத்திற்கு இலக்காயுள்ளது.*

## மூலம் : 172

**"சேஷித்வத்திலே நோக்கு."**

*1) நாராயண என்னும் பதத்துக்கு நோக்கு யாது?*

*பெருமானின் எல்லாக் குணங்களும் அனுபவிக்கத் தக்கவையே! ஆயினும், இவ்விடத்தில் நாராயண என்னும் பதத்திற்குச் சேஷித்துவம் (தலைமைப் பண்பு) என்கிற குணத்திலேயே முக்கியமான நோக்கு என்று கொள்ள வேண்டும். ஏனெனில், இங்குச் சொல்லப்படுகிற கைங்கர்யத்துக்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது சேஷித்துவம் என்பதாலேயாம்!*

## மூலம் : 173

**"ப்ராப்த விஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது?"**

*1) நாராயண பதத்துக்கு நோக்கு சேஷித்துவத்திலே என்று சொல்லுவதற்குப் பயன் யாது?*

*சேதனன் செய்ய வேண்டியவை என்று வகுத்துக்கூறிய விஷயத்தில் பகவானுக்குச் செய்யும் தொண்டு ஒன்றே சேதனனுக்கு இன்பம் தருவதாகும்.*

## மூலம் : 174

**"இந்த சதுர்த்தி, கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது."**

 

*1) நாராயணாய என்பதில் உள்ள நான்காம் வேற்றுமைக்குப் பொருள் யாது?*

'நாராயணாய' என்னும் பதத்தில் உள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமைக்குக் (சதுர்த்திக்கு) கைங்கர்யத்தை ஒளிரச் செய்தல் என்பது பொருளாகும். எனினும், கைங்கர்யத்தை ஒளிரச்செய்தல் என்பதனைக் கைங்கர்யப் பிரார்த்தனையை ஒளிரச் செய்தல் என்று விரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

## மூலம் : 175

**"கைங்கர்யந்தான் நித்யம்."**

*1) பகவானுக்குத் தொண்டு செய்வது என்பது ஏதேனும் ஒரு காலத்துக்கு மட்டுமே உரியதா?*

அன்று. பகவத் கைங்கர்யம் ஆன்மாவிற்கு என்றும் நிலையாயுள்ள ஒன்று. ஒருகால் தோன்றி ஒருகால் மறைவதன்று.

ஏனெனில், அடிமை செய்தலே ஆன்மாவின் சொரூபம் என்பதை முன்னர் அறிந்தோம். மேலும் தொண்டு செய்யாத போது அடிமைத்தன்மை (சேஷத்வம்) ஆன்மாவிற்குக் கைகூடாது. எனவே, தொண்டு செய்தல் என்பது ஆன்மாவிற்கு என்றும் உள்ளதென்றே கொள்ள வேண்டும்.

## மூலம் : 176

"நித்யமாக ப்ரார்த்தித்தே பெற வேணும்."

*1) தொண்டு செய்தல் என்றும் உள்ள பொருள் என்று முன்பு கூறப்பட்டுள்ளது. அப்படியிருக்க, இதைப் பிரார்த்தித்தே பெற வேண்டும் என்பானேன்?*

நாம் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளுகிற பெருமான் யாவரினும் மேலானவன். கைங்கர்யம் செய்யும் நாமோ அவன் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள். எனவே, நாம் செய்யும் கைங்கர்யம் கைகூட வேண்டுமானால், பெருமானைப் பிரார்த்தித்தே பலனைப் பெற வேண்டியுள்ளது. அப்படிச் செய்தால்தான், கைங்கர்யப் பிரார்த்தனை சித்திக்கும்.

## மூலம் : 177

**"சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூப லாபமும், ப்ராப்யமும்."**

1) ***பகவத் கைங்கர்யத்தை விரும்பியே பெற வேண்டும் என்பது ஏன்?***

கைங்கர்யத்தின் அடிப்படையில் பெருமானுக்கு வியப்பை உண்டாக்குதல் என்பது சேதனனுக்குச் சொரூப லாபமாக அமைகிறது. மேலும், பெருமானுடைய முகமலர்ச்சிக்கு ஏதுவாகவும் கைங்கர்யம் அமைவதால், அக்கைங்கர்யம் பிராப்பியமாகவும் (அடையத்தக்க பொருளாகவும்) அமைகிறது.

இவ்வாறு சொரூப லாபமாகவும், பிராப்பியமாகவும் கைங்கர்யம் அமைவதால், இதனை விரும்பியே பெற வேண்டும்.

2) ***மூலம் 170 முதல் 177 வரை கூறப்பட்டுள்ள கருத்துகளைத் தொகுத்து வரைக.***

நாராயணாய என்பதற்கு எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக உள்ளவன் என்பது பொருள். இப்பதம் எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தையும், குணங்களையும் சொல்லுகிறது. இப்பதத்திற்குச்

சேஷித்துவத்தைச் சொல்லுவதற்குப் பயன் சேதனனுக்கு இன்பம் தரும் என்பது. இதில் உள்ள சதுர்த்தி கைங்கர்யத்தை ஒளிரச் செய்கிறது. ஆன்மாவிற்கு என்றும் உள்ள செயலே பகவத் கைங்கர்யம் செய்தல் இக்கைங்கர்யத்தைச் சேதனன் பிரார்த்தித்தே பகவானிடமிருந்து பெறவேண்டும். பெருமானுக்கு வியப்பை உண்டாக்குவதே சேஷபூதனுக்குச் சொரூப லாபமும், பயனும் ஆகும்" என்பது முதலான கருத்துகள் 170 முதல் 177 வரையுள்ளவற்றில் கூறப்பட்டுள்ளன.

## மூலம் : 178

**"நம: - கைங்கர்யத்தில் களையறுக்கிறது."**

*1) நம: என்பதன் பொருள் யாது?*

ஸ்ரீமதே நாராயணாய நம: என்பதில் உள்ள இறுதிப்பதம் நம: என்பது. கைங்கர்யத்திற்குப் பகைகளாக உள்ளவைகளை இந்த நமப்பதம் போக்குகிறது.

எனவே கைங்கர்யத்தில் உண்டாகும் குற்றங்களை ஒழித்தலையே இந்த நமப்பதம் கூறுகிறது என்பதே பொருத்தமான பொருளாகும்.

## மூலம் : 179

**"களையாவது - தனக்கென்னப் பண்ணுமது."**

*1) கைங்கர்யத்துக்குக் களையாவது யாது?*

தன் இன்பத்துக்கென்று சேதனன் செய்யும் கைங்கர்யமே களையாகும். "நாம் அனுபவிப்பவர் (நாம்போக்தா), இது நம்முடைய அநுபவம்" என நினைத்துக்கைங்கர்யம் செய்தால், அந்த நினைப்பே கைங்கர்யத்துக்குக் குற்றமாகும்.

## மூலம் : 180

"இதிலே அவித்யாதிகளுங் கழியுண்ணும்."

*1) கைங்கர்யத்துக்கு மேலும் பகைகளாய் உள்ளவை எவை?*

*அகங்கார, மமகாரங்கள் ஒழிய வேண்டும் என்று பிரார்த்திப்பது இந்த நமப்பதம். மேலும், தேகத்தையே ஆன்மா என நினைக்கும் அஞ்ஞானமும், அதனடியாய் உண்டாகும் கன்மங்களும், அவற்றால் ஏற்படும் தேகத் தொடர்பும் கைங்கர்யப் பகைகளாம்.*

*இந்நமப் பதத்தால் இப்பகைகளும் நீங்கும்.*

## மூலம் : 181

" 'உனக்கே நாம் ஆட் செய்வோம்' என்னும்படியே ஆகவேணும்."

*1) பகவத் கைங்கர்யம் பண்ணும்போது எந்த நிலையோடு இருத்தல் வேண்டும்.*

*"உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்னும் ஆண்டாள் பாசுரத்தின் படியே பகவத் கைங்கர்யம் பண்ணப் பெறுதல் வேண்டும்.*

*சேதனன் பெருமானுக்குத் தொண்டு செய்யுங்கால் "இத்தொண்டு பெருமானுக்கே உகப்பை அளிக்க வேண்டும்" என்னும் எண்ணத்துடன் செய்வதே சிறந்ததாகும். இதுவே சேதனன் சொரூபத்துக்கு ஏற்றதாகும்.*

## மூலம் : 182

"ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்ச்சொன்ன கைங்கர்யமும் அப்படியே."



*1) இக்கைங்கர்யத்துக்கு ஏற்படும் இடையூறுகள் யாவை?*

*இறைவனுடைய திருமேனியின் அழகு இவன் மனத்தைக் கவர்ந்து, கைங்கர்யத்தை மறக்குமாறு செய்கிறது. எனவே, பெருமானின் வடிவழகில் ஈடுபடுவதும் கைங்கரியத்துக்குத் தடையாகிறது.*

*அதுபோலவே, 'ஆய' என்னும் வேற்றுமையில் கூறிய கைங்கர்யமும் பெருமானின் முகமலர்ச்சிக்குறுப்பாகப் புரியும் கைங்கர்யத்துக்குத் தடையாகிவிடும்.*

## மூலம் : 183

**"கைங்கர்ய ப்ரார்த்தனை போலே இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு."**

*1) இடைவிடாமல் பிரார்த்தனை ஏன் செய்ய வேண்டும்?*

*கைங்கர்யப் பிரார்த்தனை எப்போதும் செய்து கொண்டிருக்க வேண்டும் என்பது போலவே, கைங்கர்ய விரோதிகளைப் போக்க வேண்டும் என்னும் பிரார்த்தனையும் இவ்வுலகிலன்றிப் பரமபதம் சென்றாலும் அங்கும் நடைபெற வேண்டும்.*

*பகவானின் முகவுல்லாசத்தின் பொருட்டுச் செய்யும் கைங்கர்யத்திற்குத் தடைகளாக உள்ளவைகளை நீக்குவதற்கு இடைவிடாது பிரார்த்தனை செய்தல் வேண்டும்.*

## மூலம் : 184

**"மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு என்னா நின்றதிறே."**

*1) உலகியல் சம்பந்தமற்ற பரமபதத்திலும், "நான் அனுபவிப்பவன்" என்னும் எண்ணம் உண்டாகுமா?*

*உண்டாகும்! பரமபதம் சென்றிருக்கும் காலத்திலும் பிரார்த்தனை தேவையே.*

*நித்திய சூரிகளுக்கும் பெருமானின் சௌந்தர்யப் பெருக்கால் கைங்கர்யத்துக்குத் தடைகள் வராமல் இருப்பதற்கு இந்தப் பிரார்த்தனை இடைவிடாது நடைபெற்றேயாக வேண்டும்.*

*"பெருமானே! நாங்கள் உன்னை அனுபவிக்கும்போது, எங்களுக்கு ஆனந்தம் உண்டாகிறது. 'அந்த ஆனந்தத்தை அனுபவிப்பவர்கள் நாங்கள்' என்னும் எண்ணமும் உண்டாகிறது. இதனால் எங்கள் சொரூபம் அழியாதவாறு எங்களைக் காக்கும் மருந்தானவனே!" என்று பரமபதத்திலும் நித்திய சூரிகள் பேசுவதாகவும் ஆழ்வார் அருளிச் செய்துள்ளார்*

***2) மூலம் 178 முதல் 184 வரையுள்ள கருத்துகளைத் தொகுத்து வரைக.***

*நமப்பதம் கைங்கர்யத்திலுள்ள குற்றங்களைப் போக்குகிறது. கைங்கர்யம் தன் இன்பத்திற்காகவே செய்யப்படுகிறது என்று எண்ணுவதே சேதனன் செய்யும் குற்றமாம். இக்கைங்கர்யத்துக்குப் பெருமானுடைய அழகும், தன்னலத்தைக் கருதிச் செய்யும் கைங்கர்யமும் தடையை உண்டாக்கக் கூடும். இதற்கு, இடந்தராமல் கைங்கர்யத்துக்காகப் பிரார்த்தனை செய்வது போலவே, கைங்கர்யத்தடைகளைப் போக்கவும் பிரார்த்தனை செய்தல் வேண்டும். இப்பிரார்த்தனையும் என்றும் தடைபடாமல் நடைபெற வேண்டும். இதற்கு ஆழ்வாருடைய 'மருந்தே நங்கள்' என்னும் பாசுரமே தக்கசான்றாம்" என்னும் கருத்துகள் மூலம் 178 முதல் 184 வரை கூறப்பட்டுள்ளன.*

*3) துவயத்தில் கூறப்பட்டுள்ள கருத்துகளைத் தொகுத்துத் தருக.*

*புருஷகாரம், பிராட்டியாரின் நித்தியமான சேர்க்கை, அச்சேர்க்கையினால் மிளிரும் பகவானுடைய வாத்சல்யம் முதலான குணங்கள், அக்குணங்களை ஒளிரச்செய்யும் திவ்விய மங்கள விக்கிரகம், இவற்றையுடைய பெருமானது உபாயத்தன்மை, இதனுடைய ஸ்வீகாரம், இதன் பயனான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் பொருள், அப்பொருளினுடைய சர்வ சேஷத்வம், அதனுடைய சிறப்பு, கைங்கர்யத்திற்குப் பகையாயுள்ளவற்றின் நீக்கம் ஆகியவை துவயத்தில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.*

**துவயத்தின் பொருள் முற்றுப்பெற்றது.**



ஸ்ரீ:
முமுக்ஷுப்படி

# சரம சுலோகம்

**1) சரம சுலோகமாவது யாது? விளக்குக.**

*"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய*
*மாமேகம் சரணம் வ்ரஜ*
*அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ*
*மோக்ஷ யிஷ்யாமி மா சுச:"*

*என்பது சரம சுலோகம். இது பகவத் கீதையில் உள்ளது. அருச்சுனனின் சோக நிவர்த்திக்காகப் பகவான் அருளின சுலோகம்.*

*முமுட்சுவானவன் அறிந்து கொள்ள வேண்டிய இரகசியங்கள் மூன்று என்று தொடக்கத்தில் பிள்ளையுலகாசிரியர் குறிப்பிடுகிறார்.*

*திருமந்திரம், துவயம், சரமசுலோகம் எனப்படும் மூன்றினுள் சரம சுலோகம் மூன்றாவது இரகசியமாக உள்ளது.*

**2) இச்சுலோகத்தின் பொருள் யாது?**

*"சேதனன் செய்யவேண்டிய கட்டளைகள் சிலவற்றை வேதங்கள் முதலியன விளக்கமாகக் கூறுகின்றன. அவற்றில் கூறப்படும் எல்லாத் தடைகளையும் போக்கி உனக்கு நான் நன்மையையே உண்டு பண்ணுவேன். எனவே, நீ கலங்க வேண்டுவதில்லை" என்பது இச்சரம சுலோகத்தின் தெளிந்த பொருளாகும்.*

*3) சரம சுலோகம் எனப்பெயர் வந்ததேன்?*

*சரமமான உபாயத்தைப் பிரதிபலிக்கும் சுலோகம் ஆதலின், சரம சுலோகம் எனப்பெயர் வந்தது.*

*சரணாகதி தத்துவத்தின் சிறப்பை இந்தச் சுலோகம் அருமையாக விளக்குகிறது.*

*4) இந்தச் சரமோபாயம் அருளிச் செய்யப்பட்டதன் காரணம் யாது?*

*முத்திக்குரிய சாதனங்களாகக் கருமயோகம், ஞானயோகம் முதலானவற்றைக் கண்ணபிரான் அருச்சுனனுக்கு விரிவாக உபதேசித்தருளினார். அதைக்கேட்ட அருச்சுனன், "அவை எளிய சாதனங்களாகா" என்றும், "பின்பற்றுதற்குக் கடினமான நெறிகள் அவை" என்றும் தன் அச்சத்தைத் தெரிவித்தான்.*

*"இந்நெறிகளால் பகவானை அடைய முயல்வது அரிது. எனவே, பெருமானை அடைய முடியாமல் இழந்துவிட நேரிடுமோ!" என்று அருச்சுனன் சோகமுடன் நின்றான்.*

*அவன் சோகத்தைப் போக்குவதற்காகப் பெருமான் எளிதில் பின்பற்றுதற்குரிய நெறியாக இந்தச் சரமோபாயத்தை அருச்சுனனுக்கு அருளிச் செய்தார்.*

*5) சரம சுலோகத்தின் சிறப்பாவது யாது?*

*முத்தியடைய விரும்புபவனுக்குரிய தருமங்கள் பலவற்றையும் உபதேசித்து, அத்தருமங்களை நிலைநிறுத்துபவன் பகவான் ஒருவனே!*

*அந்தப் பகவானே முமுட்சுவை நோக்கி, "மற்ற எல்லாத் தருமங்களையும் விட்டு விட்டு என் ஒருவனையே பற்றுவாயாக!" என்று கூறியதால் இந்தச் சரணாகதி தருமம் பகவானுக்கே உகந்த தருமம் என்பது தெளிவாகிறது.*

இதிகாசங்களுள் ஒன்றான பாரதம் ஐந்தாம் வேதம் எனப்படும். இந்தப் பாரதப்பெருங்காவியத்தைச் சார்ந்துள்ளது பகவத்கீதை. இந்தப் பகவத் கீதை உபநிடதம் என்று போற்றப்படும் சாத்திரமாகும். பகவத் கீதையில் காணப்படும் இந்தச் சரம சுலோகத்தில் பிரபத்தி (சரணாகதி) தருமத்தைக் காட்டிலும் மேலான தருமம் ஒன்றுமில்லை என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

பகவானே சேதனனைப் பார்த்து "என்னைப் பற்றிக்கொள்!" என்று கட்டளையிடுகிறார்.

இது மூன்றாவது ரகசியமாகச் சிந்திப்பதற்கு உரியதாக உள்ளது. மேலும், சரமசுலோகம் துவயத்திற்கு விளக்கம் தருவதாகவும் உள்ளது.

இந்தச் சுலோகத்தின் பொருளைக் கேட்பதற்காகவே உடையவர் பதினெட்டு முறை திருக்கோட்டியூர் நம்பியிடம் எழுந்தருளினார்கள் என்பது வரலாறு.

இவை போன்ற காரணங்களால் சரம சுலோகத்தின் சிறப்பு வெளிப்படும்.

**6) திருகோட்டியூர் நம்பிகள் உடையவரைப் பலமுறை அலைக்கழிக்கக் காரணம் யாது?**

நம்பிக்கை உடையவருக்கும், சிறந்த ஆத்திகராய் உள்ளவருக்கும், ஆர்வம் உடையவருக்கும் மட்டுமே இம்மந்திரப் பொருளை உபதேசிக்க வேண்டும் என்று திருக்கோட்டியூர் நம்பிகள் எண்ணங்கொண்டு, உடையவரைச் சோதித்தறிந்த பிறகே உபதேசிக்க வேண்டும் என்பதற்காகவே நம்பிகள் உடையவரைப் பலமுறை அலைக்கழித்தார்.

*7) இராமாநுசர் சரம சுலோகத்தின் பொருளைப் பலருக்கும் பரக்க உபதேசித்ததன் காரணம் யாது?*

சமுசாரிகளிடம் தாம் கொண்ட பரமகருணையால், இம்மந்திரப்பொருளை உடையவர் பலருக்கும் பரக்க உபதேசித்தருளினார்.

கருணை வெள்ளம் கரைபுரண்டோடுகிற உள்ளம் உடையவர் இராமாநுசர்! எனவே, உலக மக்களின் துன்பநிலையை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

இம் மந்திரப்பொருளின் உயர்வைப் பாராது, மக்கள் படும் துன்பத்தையே பெரிதாகக் கருதி, அவர்கள் கடைத்தேற வேண்டும் என்னும் உயர்ந்த உள்ளத்தாலேயே இம்மந்திரப் பொருளை உடையவர் சாமானிய மக்களுக்கும் உபதேசித்தருளினார்.

*8) பிள்ளையுலகாசிரியர் முமுட்சுப்படியை இயற்றுவானேன்?*

இராமாநுசர் வெளியிட்டருளிய இம்மந்திரப் பொருளை யாவரும் அறிந்துய்ய வேண்டும் என்னும் ஈடில்லாக் கருணையாலேயே பிள்ளையுலகாசிரியர் முமுட்சுப்படியை இயற்றியருளினார்.

ஆசிரியர் சரம சுலோகத்தின் பொருளைப் பலருக்கும் தெளிவாக உபதேசம் செய்தருளினார். அதுமட்டுமல்லாமல், கிரந்தங்கள் மூலமாகவும் வெளியிட்டருளியுள்ளார்.

சில நூல்களில், சுருக்கமாகவும், சில நூல்களில் விரிவாகவும் அருளிச் செய்துள்ளார். இவர் அருளிச் செய்த நூல்கள் சிலவற்றுள் ஒன்றே 'முமுட்சுப்படி' என்பது.

இந்நூலில் சரம சுலோகத்தின் பொருளைக் குறைந்த அறிவுடையவரும் சிறந்த முறையில் பெறவேண்டும் என்னும்

*பெருநோக்காலேயே எளிய நடையில் வெளியிட்டருளி யுள்ளார்.*

## மூலம் : 185

**"கீழே சில உபாய விசேஷங்களை உபதேசிக்க, அவை துச்சகங்களென்றும், ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்து, சோகாவிஷ்டனான அர்ஜுனனைக் குறித்து அவனுடைய சோக நிவ்ருத்த்யர்த்தமாக, 'இனி இதுக்கு அவ்வருகில்லை' என்னலாம்படியான சரமோபாயத்தை அருளிச் செய்கையாலே, சரமச்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது".**

***1) சரம சுலோகம் எனப்பெயர் அமைந்ததன் காரணத்தை விளக்குக.***

*இந்தச் சுலோகத்தைக் கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசிக்கும் முன்பாக, தன்னை அடைவதற்கு வழிகளாக உள்ள கன்ம, ஞான, பக்திகளாகிற உபாயங்களை விரிவாக உபதேசித்தான். இவற்றைக்கேட்ட அருச்சுனன் சோகத்தில் ஆழ்ந்துவிட்டான்.*

*"கன்ம, ஞான, பக்திகளாகிற உபாயங்கள் உடலை மெலி வடையவே செய்யும். மேலும், இந்திரியங்களை அடக்குதல் என்பதும் அரிது. வெகுகாலம் இவ்வுபாயங்களைக் கடைப்பிடித்தால்தான் சித்தி கிடைக்கும். எனவே, இவற்றை மேற்கொள்வது என்பது அரிதே. இந்நெறிகளால் இறைவனை அடைதல் என்பது எளிதில் முடியாது. எனவே, பகவானை நாம் இழக்க வேண்டியே வரும்!" என்று பலவாறாகச் சிந்தித்த அருச்சுனன் சோகக் கடலுள் ஆழ்ந்து விட்டான்.*

*அப்போதுதான் கண்ணபெருமான் அருச்சுனனுடைய சோகத்தைப் போக்க இந்தச் சுலோகத்தை உபதேசித்தருளினார்.*

*சேதனன் எளிமையாக முடிக்கக்கூடியதும், சொரூபத்திற்கு ஏற்றதும், இனி இதற்கு மேற்பட்ட உபாயம் மற்றொன்றில்லை என்னும்படியான பிரபத்தி மார்க்கத்தை (சரணாகதி நெறியை) அருச்சுனனுக்குப் பகவான் போதித்தருளினார்.*

*இச்சரணாகதி நெறி இறுதி உபாயமாயிருத்தலின், இந்நெறியைத் தெரிவிக்கும் இச்சுலோகத்திற்குச் சரமசுலோகம் என்பது பெயராயிற்று.*

## மூலம் : 186

**"இதில், பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை அருளிச்செய்கிறான்; உத்தரார்த்தத்தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்."**

***1) இந்தச் சுலோகத்தில் காணப்படும் வாக்கியங்களின் பொருள் யாது?***

*இந்தச் சுலோகத்தின் முன்வாக்கியம் பிரபத்தி உபாயத்திற்கு அதிகாரி (சேதனன்) செய்ய வேண்டுவன இன்னவை என்பதைக் கூறுகிறது.*

*பின்வாக்கியம் உபாய பூதனான பெருமான் தன்னைச் சரணடைந்து நிற்கும் சேதனனுக்குத் தான் செய்ய வேண்டிய செயல்கள் இன்னவை என்பதைக் கூறுகிறது.*

## மூலம் : 187

**"அதிகாரிக்கு க்ருத்யமாவது – உபாயபரிக்ரஹம்"**

1) *அதிகாரியான சேதனனுடைய செயல்யாது?*

*பகவானாகிற உபாயத்தைத் தனக்கு உபாயமாகப் பற்றியிருத்தலே சேதனன் இன்றியமையாது செய்ய வேண்டிய செயலாகும்.*

## மூலம் : 188

**"அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்."**

1) *எம்பெருமானை உபாயமாகப் பற்றவேண்டும் என்பதனை மட்டும் சொல்லாமல், மற்ற உபாயங்களை விட வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளது ஏன்?*

*தன்னை உபாயமாகப் பற்ற வேண்டும் என்பதனை, மற்ற உபாயங்களை விடுதலாகிற அங்கத்தோடு சேர்த்தே பகவான் விதித்திருப்பதால், எம்பெருமானை உபாயமாகப் பற்ற வேண்டும் என்பதனை மட்டும் சொல்லாமல் மற்ற உபாயங்களை விட வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளார்.*

## மூலம் : 189

**"ராகப்பிராப்தமான உபாயந்தானே வைதமானால் கடுகப்பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே."**

1) *பெருமானை உபாயமாகப் பற்றுதலாகிற பிரபத்தி, விருப்பத்தினாலேயே நடைபெறக் கூடியதாயிருக்க 'இதைச் செய்' என்று விதிக்கவும் வேண்டுமோ? ஏன்?*

*ஆம். விதிக்கவும் வேண்டும். ஏனெனில், விருப்பமாகச் செய்யக்கூடிய இந்தச் சாதனத்திற்கு 'இதைச் செய்' என்று, விதியும் ஏற்படுமேயானால், விரைவாகக் கைப்பற்றுவதற்கு இடந்தருமன்றோ?*

நோயாளிக்குச் சுவையான பாலை மருந்தாகக் கொள்ளுமாறு கூறினால், அந்த நோயாளி அந்தப்பாலை விரும்பியே பருகுவான். 'பருகு' என்று கட்டளையும் இட்டுவிட்டால், விரைந்தும் பருகுவான் - விரும்பியும் பருகுவான் அல்லவா! அது போன்றதுதான் இதுவும்!

*2) மூலம் 185 முதல் 189 வரை கூறியுள்ளவற்றைத் தொகுத்து வரைக.*

"இதற்கு மேலே வேறொரு உபாயமும் இல்லை" என்னுமாறு இறுதி உபாயத்தை அருளிச்செய்தமையின், இதற்குச் சரமசுலோகம் என்னும் பெயரமைந்தது. இந்தச் சுலோகத்தின் முதல் வாக்கியம் சேதனன் செய்ய வேண்டுவனவற்றையும், இரண்டாம் வாக்கியம் இறைவன் செய்ய வேண்டுவனவற்றையும் இயம்புகிறது. சேதனன் செய்ய வேண்டுவது எம்பெருமானை உபாயமாகப் பற்ற வேண்டும் என்பதே! அவ்வாறு பற்ற வேண்டும் என்பதனை, மற்றைய தருமங்களை விடுதலாகிற அங்கத்தோடு கூடியே செய்யக்கடவன் என்பதனைக் கட்டளையாகப்பெருமான் விதிக்கிறான். விரும்பிச்செய்யக்கூடிய இவ்வுபாயத்திற்கு விதியும் ஏற்படின், விரைந்து மேற்கொள்வதற்கு இடமும் தரும்" என்பனவான கருத்துகள் 185 முதல் 189 வரையுள்ள மூலங்களில் சொல்லப்பட்டுள்ளன.

## மூலம் : 190

"இதில் பூர்வார்த்தம் ஆறுபதம்"

*1) இந்தச் சரம சுலோகத்தின் முற்கூற்றில் எத்தனை பதங்கள் உள்ளன?*

இந்தச் சரம சுலோகத்தின் முற்கூற்றில் ஆறுபதங்கள் உள்ளன. அவை: ஸர்வதர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம், வ்ரஜ என்னும் பதங்களாம்.

## மூலம் : 191

**"ஸர்வதர்மாந் – எல்லா தர்மங்களையும்"**

*1) 'ஸர்வதர்மாந்' என்பதன் பொருள் யாது?*

*கர்மம், ஞானம், பத்தி முதலான எல்லாத் தருமங்களையும் என்பது பொருளாம்.*

## மூலம் : 192

**"தர்மமாவது பலஸாதநமாயிருக்குமது"**

*1) தர்மமாவது யாது?*

*இம்மை, மறுமை, உம்மை (வீடு)ப் பயன்களுள், எதுஎதற்கு எதுஎது சாதனமோ அது அது தருமமெனப்படும்.*

## மூலம் : 193

**"இங்குச் சொல்லுகிற தர்மசப்தம் த்ருஷ்டபல ஸாதநங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷபல ஸாதநங்களைச் சொல்லுகிறது."**

*1) 'தர்ம' என்னும் சொல் எந்தப் பயனுக்குரிய உபாயங்களைக் குறிக்கிறது?*

*இந்தச் சுலோகத்தின் 'ஸர்வதர்மாந்' என்னும் பதத்தில் உள்ள தர்ம ஸப்தம் மக்கள், பசு, அன்னம் முதலிய இம்மைப் பயன்கள்; சொர்க்கம் முதலிய மறுமைப்பயன்கள் ஆகியவற்றுக்குரிய சாதனங்களைச் சொல்லுவது மட்டுமல்லாமல், மோட்சமாகிற உம்மைப் பயன்களுக்குரிய சாதனங்களான தருமங்களையே குறிக்கிறது. என்பது வெள்ளிடை மலையாகும்.*

மேலும், பகவான் கர்மயோகத்தை உபதேசிக்கும் போதே இம்மை மறுமைகளைப் பயனாகச் சொல்லாமல், உம்மையையே - வீட்டின் பேற்றையே பயனாகத் தெரிவிக்கிறார்.

எனவே, 'தர்ம' என்னும் சொல் வீடு பேறாகிற பயனுக்குரிய உபாயங்களைக் குறிக்கிறது என்பதை உணரலாம்.

## மூலம் : 194

**"அவைதான் ச்ருதி ஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறது."**

*1) 'தர்மாந்' என்று பன்மையில் சொல்லப்பட்டதேன்?*

மோட்சத்தை அடைவதற்கு வேண்டிய தருமங்கள் வேதம், ஸ்மிருதி ஆகியவற்றால் 'செய்' எனக் கட்டளை இடப்பட்டவை யாவும், பலவாக இருப்பதனால், 'தர்மாந்' என்று இங்கு பன்மையில் சொல்லப்பட்டுள்ளது.

## மூலம் : 195

**"அவையாவன: கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்களும், அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம், புருஷோத்தம வித்யை, தேச வாஸம், திருநாம ஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாய புத்த்யா செய்யுமவையும்."**

*1) உபாயம் என்னும் எண்ணத்தோடு செய்யப்படும் செயல்கள் யாவை?*

கன்ம யோகம், ஞானயோகம், பத்தியோகம் அவதாரத்தின் உண்மையைப் பற்றிய அறிவு,

ஸ்ரீமந்நாராயணனே மேற்பட்டவன் என்னும் ஞானம், அவன் உகந்தருளின நிலங்களின் வாசம், திருநாம சங்கீர்த்தனம், சன்னிதானங்களில் திருவிளக்கேற்றுதல், பகவானுக்கு அழகிய மலர்களை இடுதல் முதலியன உபாயம் என்னும் எண்ணத்தோடு செய்யப்படும் செயல்களாம்.

## மூலம் : 196

**'ஸர்வ சப்தத்தாலே, அவ்வவ ஸாதந விசேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதா பாதகங்களான நித்ய கர்மங்களைச் சொல்லுகிறது."**

*1) 'ஸர்வ' என்னும் சப்தத்தின் பொருள் யாது?*

*அவரவர்கட்கேற்ற கருமங்களை மேற்கொள்ளும் போது, அக்கருமங்களைச் செய்தற்குத் தகுதியை உண்டாக்கக்கூடிய நித்ய கருமங்கள் இன்னவை என்பது தருமத்திற்கு அடைமொழியாய் அமைந்துள்ள 'ஸர்வ' என்னும் சப்தத்தின் பொருளாகச் சொல்லப்பட்டுள்ளது.*

*2) நித்ய கருமங்கள் என்பவை யாவை?*

*சந்தியா வந்தனம் முதலியன நித்திய கருமங்கள் எனப்படும்.*

*3) நைமித்திய கருமங்கள் என்பவை யாவை?*

*ஐந்து மகா யாகங்கள் முதலியன நைமித்திய கருமங்கள் எனப்படும்.*

## மூலம் : 197

**"ஆக, ச்ருதி ஸ்ம்ருதி சோதிதங்களாய், நித்ய நைமித்திகாதி ரூபங்களான கர்ம யோகாத்யுபாயங்களை என்றபடி."**

*1) 'ஸர்வதர்மாந்' என்பதன் பொருளைச் சுருக்கிக்கூறுக.*

வேதம், ஸ்மிருதி இவைகளால் விதிக்கப்பட்டனவும், நித்திய நைமித்திகங்களை வடிவாகக்கொண்டனவுமான கன்ம யோகங்கள் முதலியன 'ஸர்வதர்மாந்' என்னும் சப்தத்தின் பொருளாகக் கூறப்பட்டுள்ளன.

கன்ம யோகம் என்பது நித்திய நைமித்திகம் முதலானவற்றை வடிவாக உடையது. தினந்தோறும் குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டிய சந்தியா வந்தனம் போன்றுள்ள தர்மம் நித்திய கருமம் எனப்படும்.

கிரகணம் முதலிய காலங்களில் செய்யப்படும் சடங்குகள் நைமித்தியம் எனப்படும்.

நித்திய கருமங்களைப் போன்றே நைமித்திக கருமங்களையும் செய்தல் இன்றியமையாதது.

## மூலம் : 198

**"இவற்றைத் தர்மம் என்கிறது, ப்ரமித்த அர்ஜுனன் கருத்தாலே."**

*1) கன்ம யோகங்கள் முதலியவற்றைத் தருமங்கள் எனக் கூறுதற்குக் காரணம் யாது?*

சேதனனுடைய அத்தியந்த, பாரதந்திரிய சொருபத்துக்குக் கன்மயோகம் முதலியன விரோதிகளாக உள்ளன. எனினும் இவை தருமங்கள் என்றே கூறப்படுகின்றன.

தனக்குரிய க்ஷத்திரிய தருமமான யுத்தத்தை அதர்மம் என்றும், கன்மஞான பக்திகளைத் தருமம் என்றும் மயங்கிய அருச்சுனனுடைய நினைவால்தான் பகவான் இவற்றைத் தருமங்கள் என்கிறார்.

நோயால் வருந்துபவன் மருந்தை உண்ண மறுக்கின்றான். அப்போது அவனுக்கு வெல்லம் முதலான பொருள்களோடு மருந்தைக் கலந்து தாயானவள் ஊட்டுகிறாள். அந்த மருந்தும் நோயைப் போக்கி அவனுக்கு நன்மையை உண்டாக்குகிறது.

அதுபோலவே, பகவானும் சித்தோபாயமான தன்னைக் கன்மஞானபக்திகளாகிற உபாயங்களோடு கலந்து சேதனனுக்குப் பலனளிக்கிறார்.

2) மூலம் 190 முதல் 198 வரை கூறியுள்ள கருத்துகளைத் தொகுத்து வரைக.

"முதல் வாக்கியத்தில் ஆறுபதங்கள் உள்ளன. இவற்றுள் முதல் பதம் "ஸர்வ தர்மாந்" என்பது. இத்தரும சப்தம் மற்றைய பயன்களுக்கு ஏதுவானவற்றைக் குறிக்காமல், மோட்சத்திற்கு ஏதுவானவற்றையே இயம்புகிறது. அவை பலவாயிருத்தலின், இந்தத் தரும சப்தம் பலவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் தருமங்களைச் செய்வதற்கு ஏற்ற தகுதியை உண்டு பண்ணும் நித்ய கன்மாக்களை 'ஸர்வ' சப்தம் குறிக்கிறது. அக்கருமங்கள் வேதம், ஸ்மிருதி முதலியவற்றால் விதிக்கப்பட்ட நித்திய நைமித்தியங்களாம். இவற்றைத் தருமங்கள் என்று சொல்லப்பட்டதற்குக் காரணம் மயங்கிய அர்சுனனுடைய கருத்தாலே தான்!" என்பனவான கருத்துகள் மூலம் 190 முதல் 198 வரை சொல்லப்பட்டுள்ளன.

## மூலம் : 199

**"பரித்யஜ்ய"**

1) 'பரித்யஜ்ய' என்பதன் பொருள் யாது?

'பரித்யஜ்ய' என்பதற்குப் பொருள் விடுகை (விடுதல்) என்பதாகும்.

## மூலம் : 200

**"த்யாகமாவது - உக்தோபாயங்களை அநுஸந்தித்து, சுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலேயும், விபரீத திசாகமனம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினோமென்கிற புத்தி விசேஷத்தோடே த்யஜிக்கை."**

*1) தியாகமாவது யாது?*

*தியாகம் என்பதற்குப் பொருள் விடுகை என்பதாகும். ஆனால், இவ்விடத்தில் வெறும் விடுகை என்பது மட்டும் பொருளன்று! புத்தி விசேஷத்தோடும் கூடியவனாய் விடுகையே இங்கு விடுகை எனப்பொருள்தரும்.*

*பகவான் சரம சுலோகத்திற்கு முன்பு பல சுலோகங்களில் கன்மஞான பக்திகளாகிய மற்றைய உபாயங்களை அருளிச்செய்துள்ளார். அவ்வுபாயங்களுக்குச் சில இயல்புகள் உள. அவையாவன:*

*சேதனனுடைய முயற்சியையே தன் தோற்றத்தில் எதிர்பார்த்திருத்தல், தான் அறிவில்லாததாயும், சக்தியற்றதாயும் இருத்தலால், பயனைக் கொடுக்குங்கால், பகவானையே நோக்கி நிற்றல், முன் சூத்திரத்தின் விளக்கத்தில் கூறியபடி மருந்தை மறைக்கும் வெல்லத்தைப் போன்றிருத்தல் முதலியன.*

*இவ்வியல்புகளோடுங்கூடியுள்ள கன்மஞான பக்திகளைச் சிந்தித்தலையே "உக்தோபாயங்களை அநுசரித்தல்" என்னும் பகுதியில் குறிப்பிடுகின்றார்.*

*சிப்பியை வெள்ளியென்று மயங்குவார் போலவும், தாம் ஒரு பயனை விரும்பிச் செல்லக் கருதிய வழிக்கு மாறான*

திசையையே தாம் செல்ல வேண்டிய திசை என்று மயங்கிச் செல்பவர் போலவும் "பெருமானை அடைவதற்கு ஏற்ற உபாயத்தை மேற்கொள்ள வேண்டிய நாம் அதற்கு மாறாக உபாயமல்லாதவற்றிலே உபாய புத்தி பண்ணினோமே!" என்கிற புத்தி விசேஷத்தோடுங்கூடியவனாய் விடுகையே இங்குத் தியாகம் என்று பொருள்படும்.

புத்தி விசேஷத்தையும் விடுதல் என்பது இங்குக் கருத்தன்று.

## மூலம் : 201

**" 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே, பாதகாதிகளை விடுமாபோலே, ருசி வாஸனைகளோடும் லஜ்ஜை யோடும்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது."**

*1) உபசர்க்கம் என்றால் என்ன?*

*வினைச் சொல்லுக்கு முன் வந்து அதனைத் தொடர்ந்து நிற்கும் சொல் உபசர்க்கம் எனப்படும்.*

*2) பரி என்னும் உபசர்க்கத்தின் பொருள் யாது?*

*'பரி' என்னும் உபசர்க்கம் 'எல்லாம்', 'மிகுதி' என்னும் இரு பொருள்களையும் தரும். எனினும், இங்கு மிகுதி என்னும் பொருளே ஏற்புடையது. ஏனெனின், எல்லாம் என்னும் பொருள் 'சர்வ' என்னும் பதத்தால் முன்பே குறிக்கப்பட்டுள்ளது.*

*3) 'பரி' என்னும் உபசர்க்கத்தாலே விளக்கப்படும் பொருள் யாது?*

*கள்ளுண்ணல், சூதாடுதல், திருடுதல், கொலை புரிதல் முதலிய பாவங்களை ஒருவன் விடும் பொழுது, "நாம்*



இவற்றைச் செய்கின்றோமே!" என்னும் நாணத்தோடுங் கூடியவனாய், அவற்றின் தொடர்புக்கு ஏதுவாயுள்ள ருசி வாசனைகளோடும் அப்பாதகச் செயல்களை விடுகிறான்.

அதுபோலவே, மற்றைய உபாயங்களையும் இன்றியமையாது விட்டே ஆகவேண்டும் என்னும் பொருள் இந்த உபசர்க்கத்தால் விளக்கப்படுகிறது.

***4) ருசி என்றால் என்ன?***

நாம் ஒரு காரியத்தைப் பற்றி அறிந்தே செய்கின்றோம். அங்ஙனம் செய்யத் தூண்டுவது எதுவோ, அதுவே ருசியாகும்.

***5) வாசனை என்றால் என்ன?***

நாம் ஒரு காரியத்தைப் புத்தியறியாமல் செய்கின்றோம். அங்ஙனம் செய்யத்தூண்டுவது எதுவோ, அதுவே வாசனை எனப்படும்.

***6) கன்மஞான பக்திகளைச் சாத்திரங்கள் கருமங்கள் எனச் சொல்லுகின்றன. அப்படியிருக்க இத்தருமங்களைத் திருடுதல் போன்ற பாவங்களுக்கு ஒப்பாகச் சொல்லுவது எங்ஙனம் பொருந்தும்?***

தரும நூல்களைக் கற்று அறநெறியில் நின்றொழுகும் நீதிமானுக்குக் கொலைபுரிதல், திருடுதல் முதலானவை பாவச் செயல்களாகவே தோன்றும்.

அதுபோலவே, தன் அத்தியந்த பாரதந்திரிய நிலையைத் தெள்ளிதின் அறிந்து அதற்கேற்ப ஒழுகும் பிரபன்னனுக்கும், பகவானைத் தவிரக் கன்மஞான பக்திகளாகிற மற்ற உபாயங்களை மேற்கொள்ளுதல் பாவங்களாகவே கருதப்படும்.

## மூலம் : 202

**“ல்யப்பாலே, ‘ஸ்நாத்வா புஞ்ஜீத’ என்னுமாபோலே, உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணும் என்கிறது.”**

*1) ‘த்யஜ்ய’ என்னும் ல்யப்பின் பொருள் யாது?*

*உணவு உண்ணுங்கால் குளித்தே உணவு கொள்ளுதல் வேண்டும் என்னும் விதியைப்போன்று, பெருமானாகிற உபாயத்தைப் பற்றுங்கால், கன்மஞான பக்திகளாகிற மற்றைய உபாயங்களை விட்டே பெருமானைப் பற்ற வேண்டும் என்னும் கொள்கை ‘த்யஜ்ய’ என்னும் ல்யப்பால் விளக்கமாகிறது.*

## மூலம் : 203

**“ ‘சசால சாபஞ்ச முமோசவீர:’ – என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்கட்டு என்கிறது.”**

*1) மற்ற உபாயங்களை விட்டபிறகே பகவானைப் பற்ற வேண்டும் என்பது ஏன்?*

*பெருமானுடைய அம்புகளால் துளைக்கப்பட்டு நிலை கலங்கி நின்ற இராவணன் தன்னுடைய கையில் வில்லினை ஏந்தி நின்ற வரை இராமபிரான் அவனைப் போகவிடவில்லை.*

*இராவணன் தன்னுடைய வில்லைக் கீழே போட்டபிறகே அவனை நோக்கி இராமபிரான், “நீ இன்று போய் போருக்கு நாளைவா!” என்று விடை கொடுத்தார் என்பது இராமாயண நிகழ்ச்சி.*

*இதனை நோக்கும் போது இராவணன் தன் கையில் பிடித்திருந்த வில்லே அவன் வெற்றிக்குத் தடையாய்*

இருந்ததோடு, அவ்விடத்தை விட்டு அவன் செல்வதற்கும் தடையாக இருந்தது அறிகிறோம்.

அதுபோலவே, வேறு உபாயங்களின் சிறு தொடர்பும் வீடுபேறு அடைவதற்குக் காரணங்களாக அமையாமல் போவதுடன், சமுசார பந்தத்திலிருந்து விலகி உயர்ந்த வீடு பெறுவதற்கும் சேதனனுக்குத் தடையாக உள்ளது என்பதை அறிகிறோம்.

ஆகவே, மற்ற உபாயங்களின் தொடர்பிலிருந்து நீங்கிய பின்பே பகவானைப் பற்ற வேண்டும் என்பது தெளிவாகிறது.

## மூலம் : 204

**"சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக் குறுப்பு."**

***1) மற்ற உபாயங்களின் தொடர்பு பெருமானை இழப்பதற்குக் காரணமாகிறது என்பதனைச் சான்று காட்டி விளக்குக.***

தசரதன் தன் மனைவியாகிய கைகேயிக்கு முன்பொருகால் கொடுத்த வரத்தை மறுக்கக்கூடாது என்று எண்ணினான். வாய்மை தவறக்கூடாது என்பது உலகியல் சம்பந்தப்பட்ட சாமானிய தருமம். இந்தத் தருமத்தைக் கடைப்பிடித்ததால், தசரதன் கைகேயிக்கு வரம் கொடுத்துப் பெருமானையே இழந்து விட்டான். சாமானிய தருமத்தைக் காப்பாற்ற வேண்டிப் பெருமானாகிற உயர்ந்த தருமத்தையே - பெரும் பேற்றையே தசரதன் இழந்துவிட்டானன்றோ!

அதுபோலவே மேற்போக்காகப் பார்க்கும்போது தருமங்கள் போன்று காணப்படும் கன்ம ஞான பக்திகளைக் கடைப்பிடித்தால், இவை பெருமானாகிற பெரும்பேற்றைப் பெறுவதற்கு இடையூறாக இருப்பதுடன், பகவத்

*விஷயத்தோடு சேர்ந்து வாழ்வதாகிய இன்பப் பேற்றையும் இழக்குமாறு செய்து விடும் என்பதனையும் அறியலாம்.*

## மூலம் : 205

**" 'ஸர்வ தர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகையாலே சிலர் 'அதர்மங்கள் புகுரும்' என்றார்கள்."**

***1) எல்லாத் தருமங்களையும் விட்டு விடுதல் என்னும் கருத்து குறித்துச் சிலர் கொள்ளும் சந்தேகம் யாது?***

*சர்வ தருமங்களையும் விடுதல் வேண்டும் என்று சொல்லுவதால், தீய செயல்களைச் செய்யாமல் இருத்தலையும் விட வேண்டும் என்பது பொருளாகாதா? என்று சிலர் சந்தேகம் கொள்வர்.*

## மூலம் : 206

**"அது கூடாது; 'அதர்மங்களைச் செய்' என்று சொல்லாமையாலே."**

***1) அந்தச் சந்தேகம் கூடாது என்பது ஏன்?***

*'எல்லாத் தருமங்களையும் விடு' என்றுதான் சொல்லப்பட்டுள்ளது. 'தீய கருமங்களைச் செய்!' என்று சொல்லவில்லை. எனவே, அந்தச் சந்தேகமே எழத்தேவையே இல்லை.*

## மூலம் : 207

**"தன்னடையே சொல்லிற்றாகாதோ என்னில்."**

## மூலம் : 208

**"ஆகாது. தர்மசப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே."**

1) 'தர்மங்களை விட்டு' என்னுமிடத்தில் 'தீயவற்றைச் செய்யாதிருத்தலை விடுதல்' என்று ஏன் சொல்லப்பட்டதாகாது?

'தரும' என்னும் சப்தம் 'தீய கருமங்களைச் செய்யாதிருத்தல்' என்னும் பொருளைத் தெரிவிக்கிறது.

'தரும' என்பது நற்கருமங்களையே குறிக்கும். எனவே, 'தீயவற்றைச் செய்யாதிருத்தலை விடுதல்" என்பது பொருளாகாது என்பதனை நன்கு உணரலாம்.

## மூலம் : 209

**"காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற் றாமித்தனை."**

1) 'பாவங்களைச் செய்' எனனும் கருத்து இங்குப் பொருந்துமா?

பொருந்தாது.

இம்மைக்கும் மறுமைக்கும் நன்மையே தருவனவற்றைச் செய்யும்போது தீய செயல்களைச் செய்யாது விடுதல் தானாகவே ஏற்படும்.

'நன்மை தருவனவற்றையும் விட்டுக் கன்மஞான பக்திகளைச் செய்' என்று பெருமான் முதலில் உபதேசிக்கிறார். பின்னர் இவற்றையும் விட்டுத் தன்னையே பற்றுமாறும் இங்குக் கூறுகிறார்.

அப்படியிருக்கப் 'பாவங்களைச் செய்' என்பது பகவானுடைய கருத்தாக இருக்குமோ என்று எண்ணுவது எங்ஙனம் பொருந்தும்?

## மூலம் : 210

"தன்னையும் ஈச்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை."

*1) இங்ஙனம் அதர்மத்தை ஒதுக்கிப் பேசுவதற்குக் காரணம் யாது?*

*சேதனனையும், பெருமானையும், சேதனன் விரும்பும் பயனையும் ஊன்றி நோக்கின், அதருமங்கள் புகுதற்கு வழியில்லை என்பதை அறியலாம்.*

*சேதனன் அதருமத்தைச் செய்தால் பெருமானுக்கு வெறுப்பே உண்டாகும். எனவே, பெருமானுக்கு விருப்பமானவற்றைச் செய்வதே சேதனனுக்குச் சொரூபமாகும்.*

*சேதனன் செயல் புரிவதற்குப் பயன் பெருமானின் முகமலர்த்தியே! இந்தப்பயனை நோக்கினாலும், தீச்செயல்கள் செய்யக் காரணமில்லை.*

*எனவே, தருமம் என்னும் சொல் 'நல்ல தருமங்களைச் செய்தல்' என்பதை மட்டுமே குறிக்கும் என்பதனை அறியலாம்.*

*2) 199 முதல் 210 வரையுள்ள மூலங்களின் கருத்துகளைச் சுருக்கி வரைக.*

*புத்தி விசேஷத்தோடும் கூடியவனாய் விடுகையே தியாகம் எனப்படும். கொடிய பாவங்களைச் செய்யாது விடுதல் போன்று கன்மஞான பக்திகளாகிற தருமங்களையும் செய்யாது விடுதல் வேண்டும்.*

*குளித்த பிறகே உணவு உட்கொள்ள வேண்டும் என்பதைப்போல, மற்றைய உபாயங்களை விட்ட பிறகே*

இவ்வுபாயத்தைப் பற்ற வேண்டும். மற்றைய உபாயங்களில் சேதனனுக்குச் சிறிதும் பற்று இருத்தல் கூடாது. மற்றைய உபாயங்களில் சிறிது தொடர்பு ஏற்படினும், தசரத சக்கரவர்த்தியைப் போன்று பேற்றை இழப்பதற்குக் காரணமாகிவிடும். எல்லாத் தருமங்களையும் செய்யாது விடு என்பதனால், அதர்மங்கள் வந்து சேராவோ என்னில் 'அதர்மங்களைச் செய்' என்று கூறாமையான் அவை வந்து சேரா. இது தன்னடைவே சொல்லிற்றாகாதோ என்னில், தருமம் என்னும் சொல் அதர்மங்களின் விடுதலையைக் காட்டாமையின் அது பொருந்தாது. 'ஸர்வ' என்னும் சொல் 'தருமம்' என்னும் சொல்லுடன் சேர்ந்திருத்தல், அது அதர்மங்களின் விடுதலையைக் காட்டினாலும், இந்த இடத்தில் அது வேண்டுவதில்லையாதலால் அஃதொழிந்தவற்றையே இங்குச் சொல்லுகிறது. அன்றியும் சேதனன் தன் நிலையையும், பகவானின் இயல்பையும், தான் விரும்பி நிற்கும் பயனின் பண்பையும் நோக்கின் அதருமங்கள் நுழைவதற்கு வழியில்லை" என்பனவாகிய கருத்துகள் 199 முதல் 210 வரையிலான மூலங்களில் கூறப்பட்டுள்ளன.

## மூலம் : 211

**"மாம் - ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன்னிசைவு பார்த்து, உன் தோஷங்களைப் போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீர் சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும் போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை."**

*1) மாம் - என்பதன் பொருள் யாது?*

'மாம்' என்பதற்கு 'என்னை' என்பது பொருள். ஸர்வதர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம், வ்ரஜ

என்பதில் உள்ள ஆறு பதங்களில் மூன்றாம் பதம் 'மாம்' என்பது. இது இங்கு பகவானை (கண்ணபிரானை)க் குறிக்கும்.

"எல்லாவற்றையும் காப்பவனாய், அருச்சுனனாகிய உனக்குத் தொண்டனாய், உன் உடன்பாட்டை நோக்கி உன் குற்றத்தைக் குணமாய்க் கொண்டு உனக்குத் தஞ்சமாய், குளிர்ந்த நீரே சுடுதல் போன்று, கூட்டுவிப்பவரே, பிரிக்குங்காலும், கைவிடாமல் காக்கின்ற என்னை" என்பது 'மாம்' என்னும் சொல்லுக்குப் பொருளாகும்.

கண்ணபிரான் அர்ச்சுனனை முன்னிலையாய் வைத்துச் சொல்லுமிடமான இங்கு 'யாவற்றையும் காத்தல்' என்பது முதலாக உள்ள சிறப்புப் பொருள்கள் பலவும் தோன்றும் என்பது பிள்ளையுலகாசிரியரின் திருவுள்ளக் கருத்தாம்.

## மூலம் : 212

**"இத்தால் - பரவ்யூஹங்களையும் தேவதாந்தர்யாமித் வத்தையும் தவிர்க்கிறது.**

1) **'மாம்' என்னும் அவதாரவடிவைக் கண்ணபிரான் காட்டிக் கூறுவதால், தவிர்க்கப்படுவனவாகக் கூறப்படுபவை யாவை?**

கண்ணபிரான் விசுவரூபம் கொண்டுள்ளார். எனினும், எளிதாகப் பற்றப்படும் பொருளாகத் தன்னைக் குறிப்பிடுகிறார். இதனால் பரத்துவ நிலையையும், வியூக நிலையையும், மற்றைய தேவதைகளிடம் அந்தர்யாமியாயிருக்கும் நிலையையும் தவிர்க்கப்படுவன வாகக் கூறுகிறார்.

## மூலம் : 213

**"தர்ம ஸம்ஸ்த்தாபநம் பண்ணப் பிறந்தவன் தானே 'ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே, ஸாக்ஷாத் தர்மம் தானே என்கிறது."**

*1) நேரே பயனைக் கொடுக்கக்கூடிய தருமம் எது?*

*நேரே பயனைக் கொடுக்கக் கூடிய தருமம் பகவான் ஒருவனே! ஸாக்ஷாத் தருமமாகப் பகவான் மட்டுமே உள்ளான்..*

*"தர்ம ஸ்ம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி" என்று தர்மத்தை நிலைநாட்டுவதற்கென்றே வந்து அவதரித்தவன் பெருமானாகிய கண்ணபிரான்!*

*அக்கண்ணபிரானே "மோட்சத்திற்குச் சாதனங்கள் எனக் குறிக்கப்பட்ட எல்லாத் தருமங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனை மட்டுமே பற்றுவாயாக!" என்று கூறுகிறார்.*

*எனவே, அப்பெருமானே சாட்சாத் தருமம் என்பது தெளிவாகிறது. எனவே, பிற சாதனங்கள் யாவும் நேரே பயனைத் தரத்தக்க தருமங்கள் அல்ல என்பதும், பகவான் ஒருவனே நேரே பயனைத் தரும் தருமமாக இருக்கிறார் என்பதும் தெளிவாகப் புலப்படும்.*

## மூலம் : 214

**"இத்தால் விட்ட ஸாதநங்களின் ஏற்றஞ் சொல்லுகிறது."**

*1) இதனால் சொல்லப்படுவது யாது?*

*இதனால் விட்டுவிட்ட உபாயங்களாகிற கன்ம ஞான பக்திகளைக் காட்டிலும், பெருமானாகிற இவ்வுபாயத்துக்கு உள்ள ஏற்றம் சொல்லப்படுகிறது.*

## மூலம் : 215

**"அதாவது - ஸித்தமாய் பரம சேதனமாய், ஸர்வ சக்தியாய், நிரபாயமாய், ப்ராப்யமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை"**

*1) பெருமானாகிற இவ்வுபாயம் இருக்கும் நிலையை விவரிக்க.*

*பெருமானாகிற உபாயம் சேதனனின் முயற்சியினால் கை கூடுவதாக இல்லாமல் பழமையாயுள்ள தருமமாய் இருக்கிறது.*

*எனவே, இத்தருமம் சித்தமாய், மேலான ஞானமுடையதாய், எல்லா வன்மைகளையும் பெற்றிருப்பதாய், சேதனனால் இயற்றப்படாததாய் இருக்கிறது.*

*ஆகவே யாதோர் அபாயமும் அற்றதாய், பரதந்திரனான சேதனனுடைய சொரூபத்துக்கு ஏற்றதாய், வேறொரு துணையையும் விரும்பாததாய் இருப்பதாகும்.*

## மூலம் : 216

**"மற்றை உபாயங்கள் ஸாத்யங்களாகையாலே, ஸ்வரூப ஸித்தியில் சேதனனை அபேக்ஷித்திருக்கும்; அசேதனங்களுமாய், அசக்தங்களுமாயிருக்கையாலே கார்ய ஸித்தியில் ஈச்வரனை அபேக்ஷித்திருக்கும்; இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும்."**

*1) பகவானைத் தவிர வேறொரு துணை எதுவும் வேண்டுவதில்லை என்பது ஏன்?*

*கன்ம ஞான பக்திகளாகிற மற்ற உபாயங்கள் சேதனனுடைய முயற்சியாலேயே நிறைவேற்றத்தக்கனவாய்*

இருக்கின்றன. எனவே, அவ்வுபாயங்கள் சேதனனுடைய முயற்சியையே எதிர்பார்த்து நின்றிருக்கும். மேலும் அவை சேதனன் செய்ய வேண்டுவனவற்றை அறிவிப்பதற்கும், அவற்றைச் செய்து நிறைவேற்றுவதற்கும் தக்க ஞான சக்திகளைப் பெறாதிருக்கின்றன.

எனவே, சேதனன் வெறுக்கும் செயல்களைப் போக்கியும், அவன் விரும்பும் செயல்களை அவனுக்கு அளித்தும், அவனைப் பாதுகாப்பதற்காகப் பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த பெருமானையே இவ்வுபாயங்கள் எதிர்பார்த்து நிற்க வேண்டியுள்ளன.

ஆனால், பெருமானாகிற உபாயமோ பேரறிவும் பேராற்றலும் உடையதாக இருப்பதால் சேதனனைப் பாதுகாக்க வேறு எதையும் எதிர்பார்க்க வேண்டுவதில்லை. எனவே, பகவானாகிற உபாயத்திற்கு வேறு துணை எதுவும் வேண்டுவதில்லை என்று விளக்கமாகிறது.

## மூலம் : 217

**"இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யங்களாகிற குணவிசேஷங்கள் நேராக ப்ராகாசிக்கிறது."**

*1) பகவானைப் பற்றுதற்குறுப்பான குணச்சிறப்புகள் யாவை?*

கண்ணபிரான் தன்னைச் சுட்டிக்காட்டி 'என்னை' (மாம்) எனக் கூறும் இப்பதத்தில், சேதனன் பெருமானைப் பற்றி நிற்பதற்கு உதவி புரியக்கூடிய வாத்சல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் எனப்படும் இந்த நான்கு குணங்களும் பகவானைப் பற்றுதற்குறுப்பாயுள்ள குணச்சிறப்புகளாம்.

## மூலம் : 218

**"கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை மாம் என்று காட்டுகிறான்."**

***1) 'மாம்' என்னும் பதம் பகவானின் எளிமையைக் காட்டுகிறது என்பதை விளக்குக.***

*கண்ணபிரான் அருச்சுனனுடைய தேரிற்கட்டிய குதிரைகளைத் தூண்டி நடத்துவதற்கு ஒரு கையில் கசைக்கோலைப் பிடித்திருக்கிறான். அக்குதிரைகளை வலம் இடமாகத் திருப்புவதற்கும், வேண்டும் பொழுது நிறுத்துவதற்கும் அவற்றின் வாயிலிருந்து வரும் கயிறுகளை மற்றொரு கையில் பிடித்திருக்கிறான். சேனைகளின் நடையினால் கிளம்பிய தூசுகள் பெருமானின் புல்லாங்குழலில் படிந்திருக்கின்றன. பெருமானின் திருவடிகள் தேருக்குக் கீழே தொங்கவிட்ட நிலையில் சதங்கைகள் அணிந்து காட்சியளிக்கின்றன.*

*இவ்வாறு, பெருமான் எளிமையாகக் காட்சி தரும் தேர்ப்பாகனாகிற வேடத்தையே 'மாம்' என்னும் பதம் சுட்டிக்காட்டுகிறது.*

***2) 211 முதல் 218 வரையுள்ள மூலங்களில் கூறப்படும் கருத்துகளைத் தொகுத்து வரைக.***

*" 'மாம்' என்னும் பதத்திற்குப் பொருள் 'என்னை' என்பது. இங்குக் கண்ணபிரான் தன்னையே 'மாம்' என்று சுட்டிக்கூறுகிறான். இதனால் பெருமானுடைய மற்றைய பர, வியூக நிலைகள் கழிக்கப்படுகின்றன. பரம புருஷனாகிற பகவானே சிறந்த தருமமாகப் புலப்படுகிறான். இதனால்*

மற்றையத் தருமங்களைக் காட்டிலும் பகவானாகிற தருமமே ஏற்ற முடையது என்பதை அறிகிறோம். இப்பதத்தில் பெருமானின் நான்கு குணங்கள் ஒளி வீசுகின்றன. தேர்ப்பாகனாகக் காட்சி தரும் எளிய நிலையில் பகவான் தனது எளிவந்த தன்மையை 'மாம்' என்னும் சொல்லால் சுட்டுகிறான்" என்பனவாகிய கருத்துகள் புலனாகின்றன.

## மூலம் : 219

**"ஏகம்."**

## மூலம் : 220

**"இந்த ஏக சப்தம் ஸ்தான ப்ரமாணத்தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது."**

*1) 'ஏகம்' என்பதன் பொருள் யாது?*

'ஏகம்' என்பது 'ஏ' என்னும் பிரிநிலைப் பொருளைத் தரும். ஏகம் என்னும் சத்தத்துடன் 'மாம்' என்னும் சொல்லையும் சேர்த்துப் பார்த்தால், 'என் ஒருவனையே' என்னும் பொருள் கிடைக்கும்.

## மூலம் : 221

" 'மாமேவ யே ப்ரபத்யந்தே' 'தமேவ சாத்யம்' 'த்வமேவோ பாய பூதோமே பவ' ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' என்றும் சொல்லுகிறபடியே."

*1) ஏகம் என்னும் சப்தம் பிரிநிலைப் பொருளைத் தரும் என்பதற்குச் சான்றுகள் தருக.*

'மாமேவ' 'தமேவ' 'த்வமேவ' 'நின்பாதமே' என்பன போன்ற சொற்கள் 'ஏவ' 'ஏ' என்பன பிரிநிலைப் பொருளைத் தந்து நிற்பதைக் காணலாம்.

## மூலம் : 222

**"இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாய பாவத்தைத் தவிர்க்கிறது."**

*1) 'ஏக' என்னும் சப்தத்தால் கழிக்கப்படுவது யாது?*

*இந்த 'ஏக' என்னும் சப்தத்தால், 'வ்ரஜ' என்னும் வினைச் சொல்லில் குறிக்கப்படும் பற்றுதலுக்குண்டான உபாயத்தன்மை கழிக்கப்படுகிறது.*

## மூலம் : 223

**"ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது."**

*1) பெருமானைப் பற்றுதல் என்பது வீடுபேற்றிற்கு அவசியம் வேண்டுவதாயிருக்க, இதனை உபாயமன்று எனக்கழித்தல் எங்ஙனம்?*

*ஸ்வீகாரம் என்பதற்குப் பற்றுதல் என்பது பொருளாகும். துன்பம் நீங்கி இன்பம் பெறுதல் என்பது சேதனனுக்குப் பெருமானாலேயே நிகழ்கிறது. அவ்வாறே சேதனன் பெருமான் மீது கொள்ளும் பற்றும், பெருமானைப் பற்றுதலும் நிகழ்கிறது.*

*எனவே, பற்றுதலுக்கு உபாயத்தன்மை இல்லை என்பது தெளிவாகிறது. பற்றுதல் என்பது உபாயகாரியமே ஒழிய உபாயமன்று என்பது ெளிவு.*

## மூலம் : 224

**"ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்."**

*1) பற்றும் பற்றுதலும் பெருமானாலேயே நிகழ்கிறது என்பது எங்ஙனம் பொருந்தும்?*



பெருமான் யாவருக்கும் தலைவன். எனவே நித்ய முக்தர்களைப் போன்றே இவ்வுலக மக்களும் தன்னை அனுபவித்து இன்புற வேண்டுமென்று எண்ணுகிறான்.

இதனால் இவ்வுலகில் தோன்றும் உயிர்களுக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய சரீரத்தைப் படைக்கிறான். இந்தச் சரீரத்தின் மூலம் ஞானத்தை மலரும்படிச் செய்கிறான்.

மேலும், பெருமான் இப்பூவுலகில் இராமன், கிருஷ்ணன் எனப்படும் அவதாரங்களை எடுத்து உலக மக்களோடு குற்றமறக் கலந்து வாழ்கிறான்.

வேதம் முதலான சாத்திரங்களைப் படைத்து உலக மக்கள் பயன்பெறும் வகையில் தானே தன் அவதார காலங்களில் உபதேசித்தும், நடந்து காட்டியும் மக்களுக்குத் துணை செய்கிறான்.

இதனாலும், உலக மக்கள் தன்னை முழுவதுமாக அறிந்து கொள்ளாதிருத்தலைக் கண்டு பெருமான் மானைக் காட்டி மானைப் பிடிப்பாரைப் போன்று ஆழ்வார்களை அவதரிக்கச் செய்தான்.

பெருமான் தன்னுடைய சொரூப, ரூப, குண, விபூதிகளைத் தான் காட்டக் கண்டு ஆழ்வார்கள் அன்போடு அனுபவித்து வந்தனர். அவ்வனுபவங்களின் வெளிப்பாடே ஆழ்வார்களின் அருளிச்செயல்களாக மலர்ந்தன.

இவ்வாழ்வார்களின பாசுரங்களில் பொதிந்து கிடக்கும் பொருள் நுட்பங்களை ஆசார்யர்களைக் கொண்டு வெளியிட்டருளினான்.

இவ்வாறு பெருமான் அருளிய செயலின் பயனே பெருமான் மீது சேதனன் கொள்ளும் பற்றும், பெருமானைப் பற்றுதலும் நிகழ்தற்குக் காரணங்களாயின.

எனவே, பற்றும் பற்றுதல் பெருமானாலேயே நிகழ்கிறது என்பதனை நன்கு தெளியலாம்.

## மூலம் : 225

**"அதுவும் அவனதின்னருளே!"**

***1) சேதனன் பகவானைப் பற்றுவது பகவானுடைய அருளாலேயே ஆகும் என்பதனை விளக்குக.***

*"உணர்வில் உம்பர் ஒருவனை*

*அவனதருளால் உறற்பொருட்டென்*

*உணர்வினுள்ளே இருத்தினன்*

*அதுவும் அவன தின்னருளே!"*

*என்பது ஆழ்வார் திருவாக்கு.*

*சேதனன் பெருமானை உபாயமாகப் பற்றுதல் என்பது பெருமான் அருளினாலும் சேதனன் செய்யும் முயற்சியாலுமே ஏற்படுகிறது என்று நன்கு உணரலாம். ஆதலின், சேதனன் இப்பற்றுதலில் உபாய புத்தியை அறவே ஒழித்தல் வேண்டும் என்பது தெளிவு.*

## மூலம் : 226

**"இத்தை ஒழியவும், தானே கார்யஞ் செய்யும் என்று நினைக்கக் கடவன்."**

***1) சேதனன் நினைக்க வேண்டியது யாது?***

*பெருமானைப் பற்றுதற்கும் அவனருளே வேண்டும் என்று அறிந்தோம். பெருமான் நமக்கு நன்மை செய்வது*

அவனைப் பற்றியதற்காகவன்று, அவனைப் பற்றாவிடினும், நம் ஆன்மா உய்வுபெற வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாயுள்ள பெருமானே நம்முடைய துன்பங்கள் நீங்கி இன்பங்கள் அடைதற்கேற்ற காரியங்களை நிச்சயமாகச்செய்வான்" என்று சேதனன் உறுதியாக நினைக்க வேண்டும்.

## மூலம் : 227

**"அல்லாத போது உபாய நைரபேக்ஷ்யம் ஜீவியாது?"**

*1) **இவ்வாறு நினைக்க வேண்டுவது ஏன்?***

*பெருமான் சேதனனுக்கு நன்மை செய்வதற்குச் சேதனனுடைய பற்றுதலும் வேண்டும் என்று நினைத்தால், சிறு கைம்மாறையும் வேண்டாத பெருமானின் அபேட்சையற்ற தன்மை பெருமானுக்கு நிலைத்து நிற்காமல் போகும்*

*எனவே, நாம் பெருமானைப் பற்றாவிடினும் பெருமான் நமக்கு நன்மையே செய்வான் என்று சேதனன் நினைக்க வேண்டும்*

## மூலம் : 228

"(1) இது ஸர்வ முக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தம்; (2) புத்தி ஸமாதாநார்த்தம்; (3) சைதந்ய கார்யம்; (4) ராகப்ராப்தம்; (5) ஸ்வரூபநிஷ்டம்; (6) அப்ரதிஷேதத்யோதகம்."

*1) பெருமானைப பறறுதலால சேதனனுக்கு ஏறபடும பயனகள் யாவை?*

*(1) "சேதனனிடம் ஒரு செயலும் இல்லாமல் இருக்கப்பெருமானே சிலரை உய்ய ச் செய்தால், பெருமான் ஏன் எல்லாரையும் முத்தராக்குதல் கூடாது?" என்னும்*

*வினாவைத் தடுப்பதற்காகவே இப்பற்றுதல் இன்றியமையாது வேண்டப்படுகிறது.*

*(2) "நாம் இப்போது பெருமானைப் பற்றினோம். இனி நம் உய்விற்குக் குறையில்லை" என்று சேதனன் மனச் சமாதானம் அடைதற்கு இப்பற்றுதல் காரணமாயுள்ளது.*

*(3) சேதனன் அறிவற்ற சடமாயிருக்காமல், அறிவுள்ளவனாய் இருப்பதால் பெருமானே உபாயம் என்கிற இந்த அத்யாவசியம் சேதனனுடைய அறிவின் செயலாயுள்ளது.*

*(4) பெருமானைப் பற்றுதல் என்பது கன்ம ஞான பக்திகளைக் காட்டிலும் எளிதாயிருத்தலின் சேதனன் விரும்பத்தக்கதாயுள்ளது.*

*(5) இரட்சயப் பொருளாயிருக்கும் தன்மை பெருமான் ஒருவனுக்கே சொரூபமாயுள்ளது. அச்சொரூபத்தில் நிற்பதற்காகவே பற்றுதல் தேவையுள்ளது.*

*(6) பெருமான் செய்து வந்த இரட்சணத்தை இதுகாறும் விலக்கி வந்த சேதனன், அது தவிர்ந்தமைக்கு இப்பற்றுதல் அறிகுறியாய் இருக்கிறது.*

*இவையே பெருமானைப் பற்றுதலால் சேதனனுக்கு ஏற்படும் பயன்களாம்.*

## மூலம் : 229

**"கீழ் தானும், பிறருமான நிலையைக் குலைத்தான், இங்குத் தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான்."**

1) *'மாம்' என்னும் பதத்துக்கு முன்னுள்ள 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்னுமிடத்தில் எல்லாத் தருமங்களையும் விடச்சொல்லுகிறார். எனவே, பலன்தானும், மற்றைய தருமங்களும் சேர்ந்திருக்கும் நிலையை அறவே ஒழித்தான்.*

'ஏகம்' என்னும் இப்பதத்திலோ உபாய பூதனான தானும், "நாம் பெருமானைப் பற்றினால்தான் பேறடையலாம்" என்று தன் பற்றுதலை உபாயமாகக் கருதி நிற்கும் சேதனனும் கலந்திருக்கும் நிலையை முற்றும் ஒழிக்கிறான். இவையே பெருமானின் செயல்களாம்.

இதனால் பெருமான் உபாயமாகும்போது வேறோர் உபாயமும் வேண்டுவதில்லை என்பதையும் அறியலாம்.

## மூலம் : 230

**அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம்"**

**1) பெருமானைப் பற்றும் பற்று குற்றமுடையது என்பது எங்ஙனம்?**

*பெருமானைச் சேதனன் உபாயமாகப் பற்றும் பற்று, அகங்காரத்தைத் தன்னுள் கொண்டதாயும், குற்றமுடையதாயும் இருக்கும்*

*"யாதொரு காரணத்தையும் கருதாமலே பெருமான் நமக்குத் தலைவனாக இருந்து கொண்டு நம்மைக் காத்து வருகிறான் அவ்வாறு நம்மைக் காக்கும் பெருமான் நம்மிடமுள்ள சொரூப ஞானத்தை மலரச் செய்து, அதன்மூலமாகத்தன் திருவடியைப் பற்றும்படிச் செய்கிறான்", என்று சேதனன் கருதாமல், "நாமே இப்பற்றுதலைச் செய்கிறோம்!" என்று நினைப்பது இவனுக்குக் குற்றமேயாம்*

*இதனையே அகங்கார கர்ப்பம் என்கிறார் ஆசிரியர். இதனைத் தான் சாத்திரங்களும் 'கர்த்ருத்வாநு சந்தானம்' என்று சொல்கின்றன*

*இனி 'அவத்யகரம்' என்றால் என்ன என்று பார்ப்போம். தன் மகனைத் தந்தையானவன் பச்சைப் பசுங்குழவிப் பருவத்திலிருந்தே பாதுகாத்து வருகிறான். வளர்ந்துவிட்ட நிலையில் மகனானவன் தந்தையைப் பார்த்து "நீ" என்னைப் பாதுகாக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டால் அவ்விருவருக்குமுள்ள தொடர்பு குற்றமுடையதே!*

*அதுபோலவே இதுவரையும் பாதுகாத்து வரும் பெருமானை நோக்கி, "பெருமானே! என்னைக் காத்துக் கொள்வதற்காகவே உன்னைப் பற்றினேன். எனவே 'என்னைக் காத்தல் வேண்டும்' என்று பெருமானை வேண்டுதல் சேதனனுக்கும் பெருமானுக்கும் உள்ள தொடர்பில் குற்றமுடையதாகவே முடியும்.*

## மூலம் : 231

**"அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்".**

*1) சேதனனுக்கு இரட்சகந்தான் யாது?*

*சேதனனைப் பாதுகாத்தற்கு உரியவனான பெருமான், "இவனை நாம் காப்பாற்றக் கடமைப்பட்டுள்ளோம்" என்று அன்பு காட்டுகிற பற்றுதலே இவனுக்கு உண்மையான இரட்சகமாகும்.*

## மூலம் : 232

**(1) "மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம். (2) இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்."**

*1) மற்ற உபாயங்கட்கும், பெருமானாகிற உபாயத்திற்கும் உள்ள ஏற்றத்தாழ்வை விளக்குக.*

*கன்ம ஞான பக்திகளாகிற மற்றைய உபாயங்கள் சேதனன் முயற்சியாலேயே கைகூட வேண்டியுள்ளது.*

எனவே, அவற்றிற்கு இவன் முயற்சி செய்யாதிருத்தல் குற்றமாகும்.

பெருமானாகிற உபாயம் மற்றவருடைய சிறு உதவியையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. எனவே பெருமானாகிற உபாயத்தைப் பற்றின சேதனன், முயற்சியைத் தான் மேற்கொள்ளுதல் என்பது குற்றமேயாகும்.

## மூலம் : 233

**"சிற்ற வேண்டா."**

**1) சேதனன் ஒரு செயலும் செய்தல் வேண்டாம் என்பதனை விளக்குக.**

பெருமானாகிற உபாயத்தைப் பற்றுகிறவன் எந்த ஒரு செயலும் செய்தல் வேண்டாம் இக்கருத்தைச் "சிற்ற வேண்டா" என்னும் ஆழ்வார் திருவாக்கால் அறியலாம்

*"மற்றொன் றில்லை சுருங்கச் சொன்னோம்*
*மாநிலத் தெவ்வு யிர்க்கும்*
*சிற்றவேண்டா சிந்திப்பே அமையும்"*

என்பது ஆழ்வார் திருவாக்கு இவ்வுலகில் வாழும் எத்தகையோரும் செயல்கள் பலவற்றை மேற்கொண்டு தளர்ச்சியடைய வேண்டுவதில்லை. எம்பெருமானைச் சிந்தித்திருந்தால் அதுவே போதும் என்கிறார் ஆழ்வார்

(சிற்ற வேண்டா = தளர்ச்சி அடைய வேண்டா)

## மூலம் : 234

"நிவ்ருத்தி கீழே சொல்லிற்று."

*1) இந்தச் சரம சுலோகத்தில் இக்கருத்து உள்ளதா?*

ஆம். உள்ளது. பெருமானைப் பற்றி நிற்கும் சேதனன் வேறு முயற்சிகளை மேற்கொள்வதை அறவே விட வேண்டும் என்பது "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்பதில் கூறப்பட்டுள்ளது.

## மூலம் : 235

**"உபகார ஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது, உபாயத்தில் அந்தர்ப்பவியாது."**

*1) பெருமானுக்குச் சேதனன் செய்யும் நன்றி அறிதல் உபாயத்தில் சேராதா? விளக்குக.*

சேராது, சேதனன் ஞானம் வாய்க்கப்பெற்றவன். பெருமான் தனக்குச் செய்த உதவிகளை நினைக்கச் செய்வது அந்த ஞானத்தின் செயலே! சேதனன் காட்டும் நன்றி அறிதலாலேயே பெருமான் இங்ஙனம் செய்கிறான் என்பதில்லை. எனவே, இது உபாயத்தில் சேராது.

*2) 219 முதல் 235 வரையுள்ள மூலங்களில் காணப்படும் கருத்துகளைத் தொகுத்து வரைக.*

"ஏகம் என்னும் சொல் பிரிநிலை ஏகாரத்தின் பொருளைக் காட்டுகிறது. பிரிநிலை ஏகாரத்தின் பொருளைக் காட்டுகின்ற வாக்கியங்கள் சான்றுக்குப் பல உள. சேதனன் பற்றும் பற்றுதல் உபாயமன்று. இப்பற்றுதலும் பகவானாலேயே வந்தது. இது பகவான் செய்த க்ருஷியின் பயனே! இதற்கு ஆழ்வார் திருவாக்கே பிரமாணம். இப்பற்றுதலை உபாயமெனஎண்ணக்கடவன் அல்லன்! இங்ஙனம் எண்ணின் குற்றமே நேரும். இப்பற்றுதலுக்குப் பயன்கள் சில உள. இப்பதத்திலும்

சாரமாக அறியப்படும் கருத்துகள் பல உள. பகவானைச் சேதனன் பற்றும் பற்று தீமையுடையது. பகவான் வந்து இவனை அங்கீகரித்தலே இரட்சகம். மற்ற உபாயங்களுக்கும் பிரபத்தி உபாயத்திற்கும் முறையே முயற்சியை விட்டிருத்தலும் முயற்சியை மேற்கொள்ளுதலும் குற்றம்.

இதை ஆழ்வார் பாசுரம் நன்கு விளக்குகிறது. இது "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்பதில் சொல்லப்பட்டுள்ளது. ஞானத்தினால் ஏற்பட்ட நன்றி பாராட்டல் உபாயத்தில் சேராது" ஆகிய கருத்துகள் 219 முதல் 235 வரையுள்ள மூலங்களின் கருத்துகளாம்.

## மூலம் : 236

**"சரணம் – உபாயமாக."**

1) *சரணம் என்பதன் பொருள் யாது?*

*சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருளாகும்.*

## மூலம் : 237

**"இந்த சரண சப்தம், ரக்ஷிதாவையும், க்ருஹத்தையும், உபாயத்தையும் காட்டக் கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது. கீழோடே சேர வேண்டுகையாலே."**

1) *சரணம் என்னும் பதம் இங்கு உபாயத்தையே காட்டும் என்பதற்கான காரணம் யாது?*

*இந்தச் சரணம் என்னும் சப்தம் இரட்சிக்கின்றவனையும், வீட்டையும், உபாயத்தையும் தெரிவிக்கிறது. ஆயினும், இங்கு உபாயத்தையே காட்டுகிறது.*

அவ்வாறு உபாயம் என்னும் பொருளைக் கொடுத்தால்தான் இது எல்லாத் தருமங்களையும் விட்டுத் தன்னையே பற்றச் சொல்லுகின்ற இப்பகுதிக்குப் பொருத்தமாக அமையும்.

## மூலம் : 238

**"வ்ரஜ - புத்தி பண்ணு."**

'வ்ரஜ' என்பதற்குப் 'புத்தி பண்ணு' - மனத்தால் உறுதியாகப் பற்று என்பது பொருளாகும்.

'வ்ரஜ' என்பது, "ஸர்வ தர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம், வ்ரஜ" என்பதில் அமைந்துள்ள ஆறாவது சொல்லாகும்.

## மூலம் : 239

**"கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய் அத்யவஸி என்றபடி."**

1) 'புத்தி பண்ணு' என்பதற்கு விளக்கம் தருக.

'வ்ரஜ்' என்னும் வினைச்சொல் "வ்ரஜகதௌ" என்னும் அடிச்சொல்லிலிருந்து உண்டானது என்று சொல்லுவர்.

இங்கு 'வ்ரஜ்' என்னும் வினைச்சொல்லுக்கு "மனத்தால் உபாயமாகப் பற்று" என்பதே பொருளாகும்.

## மூலம் : 240

**"வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாய் இருக்கச் செய்தேயும், ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டாநத்தைச் சொல்லுகிறது."**

*1) மனத்தால் பற்ற வேண்டும் என்று மட்டும் சொல்லுவதன் காரணம் யாது?*

*பற்று என்னும் சொல் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களினாலும் பெருமானைப் பற்றுதல் வேண்டும் என்னும் பொருளைத் தந்து நிற்கும். ஆயினும் மனத்தால் பற்றுதல் வேண்டும் என்பதே இங்குச் சிறந்த பொருளாகக் கொள்ளத் தக்கது.*

*உபாயப் பொருளான எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும் சேதனன் தகுதியுடையவனாய் இருத்தல் வேண்டும். மனம், வாக்கு, காயங்களினால் பெருமானைப் பற்றும் பற்றுதலே இவனுக்கு அமைய வேண்டிய தகுதியாகும். இம்மூன்றும் சேதனனுக்கு வேண்டியிருப்பினும், ஞானத்தாலேயே மோட்சம் என்று சாத்திரங்கள் கூறுவதால் இங்கு மனத்தால் பற்றும் பற்றுதலையே ஆசிரியர் வலி யுறுத்துகிறார்*

## மூலம் : 241

**"ஆக, த்யாஜ்யத்தைச் சொல்லி, த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ் சொல்லி, உபாயத்வஞ் சொல்லி, உபாய ஸ்வீகாரம் சொல்லுகிறது."**

*1) "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம சரணம் வ்ரஜ" என்னும் கூறறில் காணப்படும் பொருளைத் தொகுதது வரைக.*

*'ஸர்வ தர்மாந்' என்பது விட வேண்டியவற்றையும், 'பரித்யஜ்ய' என்பது விடும் முறையையும், 'மாம்' என்பது பற்றப்படும் உபாயத்தையும், 'ஏகம்' என்பது இவ்வுபாயம் வேறொன்றையும் பெறாததையும், 'சரணம்' என்பது உபாயத்*

தன்மையையும், 'வ்ரஜ' என்பது பற்றுதலையும் சொல்லுகிறது.

*2) 236 முதல் 241 வரையுள்ள மூலங்களின் கருத்துகளைத் தொகுத்து வரைக.*

*"சரணம் என்பது பல பொருள்களைக் காட்டுவதாயிருப்பினும், இங்கு உபாயம் என்னும் பொருளையே காட்டுகிறது. 'வ்ரஜ்' என்பதற்கு மனத்தால் உபாயமாகப் பற்று என்பதே பொருளாகும். அதிகாரப் பூர்த்திக்கு மனம், வாக்கு, காயங்களால் பற்று வேண்டுமாயினும், இங்கு மனத்தினால் பற்றும் பற்றே சொல்லப்படுகிறது. ஆக, முற்கூற்றால் சொல்லப்பட்டவை இன்னவை என்பது" முதலான கருத்துகள் மூலம் 236 முதல் 241 வரை சொல்லப்பட்டுள்ளது.*

## மூலம் : 242

**"அஹம்"**

## மூலம் : 243

**"ஸ்வக்ருத்யத்தை அருளிச் செய்கிறான்."**

## மூலம் : 244

**"ஸர்வஜ்ஞனாய் ஸர்வ சக்தியாய் ப்ராப்தனானநான்."**

*1) சரம ஸ்லோகத்தின் பிற்கூற்றிலே கூறப்படுவது யாது?*

*சரம ஸ்லோகத்தின் முற்கூற்றில், சேதனன் மேற்கொள்ள வேண்டிய காரியங்களைப் பெருமான் வற்புறுத்துகிறான்.*

*பிற்கூற்றில் உபாய பூதனான தான் புரியவேண்டிய செயல்களை வெளிப்படுத்துகிறான்.*

2) "அஹம்" என்பதன் பொருள யாது?

"ஒரே காலத்தில் எல்லாவற்றையும் கண்கூடாக அறியும் ஞானமுடையவனாகவும், நினைத்ததைச் செய்து முடிக்கும் வன்மையுடையவனாகவும் இருப்பதற்கு வகுத்த தலைவனான நான்" என்பது 'அஹம்' என்பதன் பொருளாகும்.

## மூலம் : 245

**"இவன் கீழ் நின்ற நிலையும் மேல் போக்கடியும் அறிகைக்கும் அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் ஏகாந்தமான குண விசேஷங்களையும், தன் பேறாகச் செய்து தலைக்கட்டுகைக்கீடான பந்த விசேஷத்தையும் காட்டுகிறது."**

1) அஹம் எனனும் சொல ஞானம, வன்மை, சேஷித்துவத்தொடர்பு ஆகிய குணங்களை மட்டும காட்டுவதன் பயனயாது?

பெருமான் சேதனனுடைய துன்பத்தைத் துடைத்து அவனுக்கு இன்பத்தை அளிக்கிறான் அப்பொழுது முன்பிருந்த நிலையையும், இனிப்போக்கத்தக்க வழியையும் சேதனன் அறிவதற்கும், அறிந்தவாறே அவற்றைச் செய்து முடிப்பதற்கும் ஏற்றவையாயுள்ள எல்லாவற்றையும் அறியும் ஞானம், யாவற்றையும் செய்து முடிக்கும் வல்லமை ஆகிய குணங்களையும், பகவான் செயல்படும்போது சேதனனுககாக அல்லாமல், தன்னுடைய பேற்றிற்காகச் செய்து முடித்தற்கு ஏற்ற சேஷித்துவத் தொடர்பையும் ஒளிரச் செய்கிறது

ஆகவே இம்மூன்று குணங்களை மட்டுமே 'அஹம்' என்னும் சொல் ஒளிரச்செய்கிறது என்பதை அறியலாம்

## மூலம் : 246

**"தனக்காகக் கொண்ட ஸாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப் பார்த்து, அஞ்சின அச்சந்த்ர தானான தன்மையை (அஹம்) என்று காட்டுகிறான்."**

1) *பெருமானின் தானான தன்மையை விளக்குக.*

*கண்ணன் அருச்சுனனைப் பார்த்து 'மாம்' (தன்னைப்பற்று) என்று தேர்ப்பாகன் கோலத்தோடு இருக்கும்போது கூறினான். அப்போது அருச்சுனன், தன்னைக் காப்பதற்காகவே பெருமான் தேர்க்கோலம் பூண்டு தொழில் செய்கிறான் என்று தன்னுடைய குணத்துக்கேற்பவே பார்க்கிறான்.*

*"பெருமான் தேர்க்கோலம் பூண்டு தாழ நின்றது பெருமானின் சீரிய குணத்தாலன்றோ" என்று அருச்சுனன் எண்ணிப் பார்க்கவில்லை.*

*"தனக்குத் தேரோட்டியாக உள்ள கண்ணன், 'எல்லாத் தருமங்களையும் விட்டு என்னைப் பற்று' என்று கூறுகின்றானே! இச்செயலால் என்ன நேரிடுமோ?" என்று அஞ்சிய அருச்சுனனின் அச்சந்த்ரவே, சர்வேஸ்வரனான பெருமான் தானான தன்மையை (சுவாதந்திரியம் ஒளிருகின்ற தன்மையை) - தனது உண்மையுருவை 'அஹம்' என்று விளக்கிக் கூறுகிறான்.*

*இதனால், பெருமான் தேரோட்டியாகச் செயல்பட்டது பாரதந்திரிய நிலையைக் காட்டாமல், அவனுடைய சீரிய குணத்தையே காட்டும். எனவே, பெருமான் சுவதந்தரனே என்பது திண்ணம்.*

## மூலம் : 247

**"கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லை நிலமிறே."**

*1) பெருமானிடம் காணப்படும் பாரதந்தரியம் அவனுக்கே உரிய இயல்பான ஒன்றா?*

*கண்ணபிரான் அருச்சுனனுக்குச் சாரதியாக அமைந்தான். அது பெருமானுக்கே உரிய பாரதந்தரிய நிலையன்று.*

*தான் சாரதியாய் நின்றது ப்பாரதந்தரியம். தான் நினைத்ததைச் செய்யுங்கால் தன்னைத் தடுப்பார் ஒருவருமில்லாத தன்னுடைய சுதந்தரத்தன்மையினுடைய முடிவிடம் என்பதனை நன்கு விளக்குவதாகும்.*

*எனவே, சாரதியாய் நின்றது பாரதந்தரியமன்று; சுதந்தரமே என்பது தெளிவான கருத்தாம்.*

## மூலம் : 248

**"த்வா - அஜ்ஞனாய், அசக்தனாய் அப்ராப்தனாய் என்னையே உபாயமாகப்பற்றியிருக்கிற உன்னை."**

*1) 'த்வா' என்பதன பொருள்யாது?*

*பிற்கூற்றின் இரண்டாம் பதம் 'த்வா' என்பது. "ஞானம் வல்லமை, உரிமை ஆகிய இவை அற்றவனாக இருந்து, என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை" என்பது 'த்வா' என்பதன் பொருளாகும்.*

*கண்ணபிரான் அருச்சுனனை நோக்கிக் கூறுகிறார்:*

*"உன் செயல்களின் போக்கை உள்ளபடியே அறிதற்கு ஞானமற்றவனாய், ஒரு சமயம் அறிந்தாலும் அவற்றைத் தக்க*

முறையில் செய்து முடித்துக் கொள்ளுதற்கு வலிமை அற்றவனாய், அவ்வல்லமை சிறிது உண்டானாலும் உன்னை நீ பாதுகாத்துக் கொள்வதில் உரிமை அற்றவனாய், இருக்கிறாய்! எனவே எல்லாத் தருமங்களையும் எதிர்பாராத என்னையே உபாயமாகப் பற்றியிருக்கும் உன்னை."

## மூலம் : 249

**"ஸர்வ பாபேப்ய: - மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்கள் என்று யாவை யாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சுகிறாய், அவ்வோ பாபங்கள் எல்லாவற்றில் நின்றும்."**

1) *மூன்றாம் பதமான 'ஸர்வ பாபேப்ய:' என்பதன் பொருள் யாது?*

*சரம சுலோகத்தின் பின் வாக்கியம் 'அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமாசுச:' என்பது.*

*இவ்வாக்கியத்தின் மூன்றாம் பதம் 'ஸர்வ பாபேப்ய' என்பது. சேதனன் விரும்புவனவற்றை அடைவதற்குப் பகையாகவும், வெறுப்பனவற்றை அடைவதற்குக் காரணமாகவும் உள்ளவை அனைத்தும் பாபங்கள் எனப்படும்.*

2) *பெருமானை அடையவொட்டாமல் தடுக்கும் பாபங்கள் யாவை?*

*ஞானவிரோதி பாவங்கள், ருசி விரோதி பாபங்கள், உபாய விரோதி பாபங்கள் என்பவை மூன்றும் பெருமானை அடையவொட்டாமல் தடுக்கும் பாபங்களாம்.*

3) *ஞானம் என்றால் என்ன?*

*தத்துவம், இதம், பயன் ஆகியவை பற்றிய அறிவே ஞானம் எனப்படும்.*

4) தத்துவ ஞானமாவது யாது?

"அடிமைத் தன்மையைச் (சேஷத்வத்தை) சொரூபமாகக் கொண்டுள்ளது ஆன்ம தத்துவம்.

எல்லா உயிர்களுக்கும் தலைமையாய் (சேஷியாய்) உள்ளது ஈசுவர தத்துவம்.

ஞானம் சிறிதுமற்றது அசித்துவத் தத்துவம்" என்பவற்றை முழுவதுமாக அறிவதே தத்துவ ஞானம் எனப்படும்.

5) இதத்தைப் பற்றிய ஞானமாவது யாது?

சேதனன் பெருமானை அடைவதற்குரிய வழியை அறிவது இதத்தைப் பற்றிய ஞானம் எனப்படும்.

6) பயனைப்பற்றிய ஞானமாவது யாது?

பகவானை அனுபவித்து அவன் மனம் மகிழுமாறு அடிமை செய்தலாகிற புருஷார்த்தத்தைப் பற்றிய ஞானம் பயனைப் பற்றிய ஞானம் எனப்படும்.

7) ஞான விரோதி பாபங்கள் யாவை?

தத்துவம், இதம், பயன் ஆகியவற்றைப் பற்றி அறியும் அறிவைத் தடுப்பனவே ஞான விரோதி பாபங்கள் எனப்படும்

8) ருசி விரோதி பாவங்கள் யாவை?

தத்துவம், இதம், பயன் ஆகியவற்றில் உண்மையான ஞானம் சிலருக்கிருப்பினும், "நான் உய்வு பெறுவதற்குப் பகவானைப் பற்ற வேண்டும்" என்னும் ருசி ஏற்படுதல் அருமை இந்த ருசியைத் தடுப்பனவே ருசி விரோதி பாபங்களாம்

*9) உபாய விரோதி பாபங்கள் யாவை?*

*பெருமானாகிற உபாயத்தைப் பற்றவிடாமல் தடை செய்வனவெல்லாம் உபாய விரோதி பாபங்கள் எனப்படும்.*

## மூலம் : 250

**"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே, அவித்யா, கர்ம வாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களைச் சொல்லுகிறது."**

*1) 'பாபேப்ய:' என்னும் பதத்தின் விகுதியில் காணப்படும் பன்மையின் பொருளை விளக்குக.*

*சரீரமே ஆன்மா என்று மயங்கி எண்ணுதல் பொய்ந்நின்ற ஞானம் எனப்படும். மயக்கத்தோடு தீச்செயல்கள், நற்செயல்கள் செய்தால், அவை பொல்லாவொழுக்கம் எனப்படும். பழக்கம் வாசனை எனப்படும். விருப்பம் ருசி எனப்படும். ஆன்மாவையும் பரமான்மாவையும் மறைத்துக் கெடுக்கின்ற உடம்பு அழுக்குடம்பு எனப்படும்.*

*சரீரமே ஆன்மா என்னும் மயக்கம், அதற்கேற்ற செயல்கள், பழக்கம் (வாசனை), விருப்பம் (ருசி), சரீரத்தொடர்பு ஆகிய இவற்றைப் பன்மை குறிக்கிறது.*

## மூலம் : 251

**"த்ருணச் சேத கண்டூயநாதிகளைப் போலே ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்குமவை யென்ன, லோகாபவாத பீதியாலும் கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவை என்ன, எல்லாவற்றையும் நினைக்கிறது."**

*1) 'ஸர்வ' என்னும் சொல்லின் பொருளை விளக்குக.*

*துரும்பைக் கிள்ளுதல், தினவு உண்டான இடத்தைச் சொறிதல் முதலியன தன் நினைவின்றியே நடைபெறுதல்*

போல, சில பாபச் செயல்களும் பெருமானை உபாயமாகப் பற்றியபின்பும் பழக்க வாசனையால் நம் நினைவின்றியே நடைபெறுகின்றன

கன்மம் முதலியவற்றைக் கைவிட்டால் உலகம் நம்மைப் பழிக்குமே என்னும் எண்ணத்தாலும் சிலபாபச் செயல்கள் செய்யப்படுகின்றன

"நம்மைப் பார்த்து உலகினரும் தம் கன்மங்களைச் 'சய்யாது விட்டுவிட்டால், அதனால் அவர்கள் நசித்துப் பாவதைக்கண்டால், நமக்குத் துக்கம் ஏற்படுமே!" என்னும் ரத்தாலும் சிலபாபச் செயல்கள் நிகழ்கின்றன

அப்போதைக்கப்போது மாறி மாறி வரும் ரஜசு, தமசு ஆகிய குணங்களினால் மயக்கம் ஏற்பட்டு, இதற்கு முன்பு விடப்பட்ட உபாயங்களை இப்போது உபாயங்கள் என்று நினைத்துச் செய்யும் கலக்கத்தினாலும் சில பாபச் செயல்கள் புரிவதுண்டு

இவையாவற்றையும் 'ஸர்வ' என்னும் சொல் உணர்த்துகிறது

## மூலம் : 252

**"உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்ராமப்ராப்தி போலே த்யஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ என்று நினைக்க வேண்டா."**

1) உலகப பழிபபுக்கு அஞ்சிச் செயயபபடும் செயலும் சாதனமாகுமோ? விளககுக.

உலகததார் பழிக்கக்கூடாது என்பதற்காகச் செய்யப்படும் செயலும் சாதனமாகவே முடியும்

பைத்தியம் கொண்ட ஒருவன் இன்ன ஊருக்குப் போகிறோம் என்னும் நினைவின்றியே ஏதோ ஒரு வழியில் சென்று கொண்டிருக்கிறான். முதலில் அவ்வழியாக ஏதேனும் ஒரு ஊரைச் சென்றடைவான்.

அதுபோலவே, பிரபன்னனானவன் தான் விட்டொழித்த கன்மயோகம் முதலியவற்றைப் பயன் ஏதும் கருதாமல், உலகப் பழியை நீக்கிக் கொள்ளுதற் பொருட்டு மேற்கொண்டாலும் அச்செயல்களும் சாதனங்களாகவே முடியும். எனவே, இவையும் பாவச் செயல்களேயாகும்.

## மூலம் : 253

**"கலங்கி உபாய புத்த்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்."**

1) *ஒருமுறை பெருமானைச் சரணமடைந்த பின் மறுபடியும் சரணடைவதால் குற்றம் வருமா? - விளக்குக.*

"பெருமானாகிற உன்னைச் சரணாகப் பற்றினேன்!" என்று நினைத்தலே பிரபத்தி எனப்படும். இதை நம்பிக்கையோடு ஒருமுறை செய்தாலே போதும். பெருமானின் அங்கீகாரம் கிடைத்துவிடும்.

துன்பம் துடைப்பதற்கோ இன்பம் அடைவதற்கோ கலக்கத்தினால் மறுபடியும் பிரபத்தி செய்தால், அது உபாய புத்தியுடன் செய்யப்படும் கன்ம ஞான பக்திகளைப் போன்றே பாதகத்திலேயே சேர்க்கும்.

"போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்." என்பது ஆண்டாள் திருவாக்கு.

ஒருமுறை சரணடைந்து விட்டாலே இதுவரை செய்த பாவங்களும், இனிச் செய்யப்படும் பாவங்களும் தீயினில்

இட்ட தூசுபோல அழிந்துபோகும் என்று அருளிச் செய்வதால் திரும்பத் திரும்பச் சரணடைவது பாபச் செயலேயாகும்.

**2) 242 முதல் 253 வரையுள்ள மூலங்களின் கருத்தைத் தொகுத்து வரைக.**

கண்ணபிரான் தாம் செய்ய வேண்டிய செயல்களை அருளிச் செய்கிறான். 'அஹம்' என்னும் சொல்லுக்கு ஞானம், வன்மை, சேஷித்துவத் தொடர்பு ஆகியவற்றை உடைய பகவானே பொருளாவான். பகவானுக்கு மற்ற குணங்கள் பல இருப்பினும் இங்கு இம்மூன்று குணங்கள் மட்டுமே எடுத்துக்காட்டுவதற்குரிய பயனாம். 'அஹம்' என்பது தன் சுதந்தரத் தன்மையை அறிவித்து, அருச்சுனனுடைய கலக்கத்தைப் போக்குவதற்குக் கருவியாக உள்ளது. சாரதியாய் நின்ற பாரதந்திரியமும் பெருமானுடைய சுதந்திரத்தன்மையின் முதலிடமே!

"ஞானம், வன்மை, உரிமை இவை அற்றிருக்கும் உன்னை என்பது 'த்வா' சப்தத்திற்குப் பொருளாகும். பயனைத் தடை செய்யும் அதுவே பாவ சப்தத்தின் பொருளாகும். அவித்தை முதலியன பன்மையின் பொருள். "போக்கிக் காக்கின்றேன்!" என்று கண்ணபிரான் கூறுகிறான். பிரகிருதி வாசனையாலும், லோகாபவாத பீதியாலும், கலக்கத்தையும் செய்யும் யாவற்றையும் 'ஸர்வ' சப்தம் குறிக்கிறது. வீட்டின் பேற்றுக்கல்லாமல், உலகப் பழிப்புக்கு அஞ்சிச் செய்பவையும் சாதன கோடியிலேயே சேரும். கலங்கி உபாய புத்யா பண்ணும் பிரபத்தியும் கன்மஞான பக்திகளைப் போலவே பாதகத்துக்கு ஒப்பாகும்" என்பனவாகிய கருத்துகள் மூலம் 242 முதல் 253 வரையில் காணப்படுகின்றன.

## மூலம் : 254

**"மோக்ஷயிஷ்யாமி - முக்தனாம்படி பண்ணக்கடவேன்."**

*1) நான்காவது பதமான 'மோக்ஷயிஷ்யாமி' என்பதன் பொருள் யாது?*

*'மோக்ஷயிஷ்யாமி' என்பதற்கு "உன்னை முக்தனாம்படிப்பண்ணக்கடவேன்" என்பது பொருளாகும். அதாவது, 'மேற்கூறிய பாபங்கள் யாவற்றினின்றும் நீ விடுபட்டவனாகுமாறு செய்யக்கடவேன்!' என்பது பொருளாகும்.*

## மூலம் : 255

**"ணிச்சாலே - யாமி நானும் வேண்டா; நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்காண் என்கிறான்."**

*1) இஷ்யாமி என்பதன் பொருள் யாது?*

*'மோக்ஷயிஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் 'இஷ்யாமி' என்னும் பகுதியை 'ணிச்சு' என வடமொழியாளர் கூறுவர்.*

*"உன் பாபங்கள் நீங்குவதற்கு நானும் யாதொரு முயற்சியும் செய்யவேண்டா; அவை அகல நீயும் முயல வேண்டா. என்னிடம் உனக்குள்ள சம்பந்தத்தால் அவை தானே விலகிப்போகும்" என்று கண்ணபிரான் அருச்சுனனுக்கு அருளிச் செய்கிறார்.*

## மூலம் : 256

**"என்னுடைய நிக்ரஹ பலமாய் வந்தவை நான் இரங்கினால் கிடைக்குமோ? என்கை"**

*1) மோக்ஷ இஷ்யாமி என்று அருளிச் செய்ததன் கருத்து யாது?*

பெருமானுடைய அருள் சேதனனிடம் பாயும் போதுதான் சேதனன் தான் செய்த கன்மாக்களின் பலனை அனுபவிக்கிறான். இதை மனதில் கொண்டுதான் பகவான் "என்னுடைய நிக்ரகத்தின் (தண்டனையின்) பலனாக உனக்கு ஏற்பட்ட துன்பங்கள், யான் உன்மாட்டு இரக்கங்கொள்வனேல் நிற்குமோ? அன்றி இருந்த இடம் தெரியாது மறையாவோ?" என்று பெருமாள் அருளிச் செய்கிறார்.

## மூலம் : 257

**"அநாதி காலம் பாபங்களைக் கண்டு நீ பட்டபாட்டை அவைதாம் படும்படி பண்ணுகிறேன்."**

*1) சேதனன் செய்த கன்மங்கள் தன்னாலேயே அவனைவிட்டுப் போகும் என்பதைப் பற்றிப் பகவனுடைய கருத்து யாது?*

*கண்ணபிரான் அருச்சுனனைப் பார்த்து, "அர்ச்சுனா! அநாதி காலமாகத் துக்கத்திற்கேதுவான பாபங்கள் வந்து உன்னைச் சேரும் போதெல்லாம் அவற்றைக் கண்டு நீ நடுங்கினாய் அல்லவா! அத்தகைய நடுக்கத்தை இப்போது அப்பாவங்கள் உன்னை விட்டு விலகிப் போகுமாறு செய்கிறேன்" என்று அருளுகிறார்*

*"இப்பாபங்கள் முன்பொருகால் நம்மிடம் இருந்தன இப்போதுதான் நம்மைவிட்டு நீங்கின," என்று தோன்றாதவாறு போக்குவதே பகவானுடைய கருத்தாகும்*

## மூலம் : 258

**"இனி உன் கையிலும் உன்னைக் காட்டித்தாரேன். என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக்கொள்ளேனோ?"**

1) 'மோக்ஷ இஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் அமைந்துள்ள தன்மை இடத்திற்குரிய பொருளை விளக்குக.

'மோக்ஷ இஷ்யாமி' என்பதற்கு 'முத்தனாம்படி பண்ணக்கடவேன்' என்பது பொருளாகும். சேதனன் பெருமானைச சார்ந்தபிறகு அவனுக்கு ஒரு விரோதியும் ஏற்படாது என்பது தத்துவம்.

சேதனன் இதுநாள் வரைக்கும் "நம் செயல்களைச் செய்வதற்கு நாமே பொறுப்புடையோம்" என்று அறியாமையில் மூழ்கியிருந்தான். தன் செயலைச் செய்து முடிக்கப் பல வழிகளிலும் அலைந்து திரிந்தான். இதைக்கண்ட பெருமான், "அவன் செயல்களைச் செய்து முடிக்க அவனே முயற்சி செய்து வருகிறான். அவ்வாறே அவன் செய்துகொள்ளட்டும்" என்று பாராமுகமாக இருந்தான்.

ஆனால், சேதனன் இப்போது, தான் பெருமானுக்கு அடிமைப்பட்டவன் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டான். எனவே தன்னைக் காப்பாற்றும் பொறுப்பைச் சேதனன் பெருமான் மீதே சுமத்திவிட்டான்.

எனவே பெருமான், "உன் பாவங்கள் அழிவதற்கேற்ற முயற்சிகளை நீயே செய்துகொள்" என்று உன்னை உன் கையிலும், ஒப்புவிக்கமாட்டேன். ஏனென்றால் நீ எனக்குச் சரீரபூதனல்லவா? அங்ஙனமாகிய உன் அஞ்ஞான அழுக்கைச் சரீரியான யான் போக்கிக்கொள்ளேனோ? அது என் கடமையல்லவா?" என்று சேதனனை நோக்கிக் கூறுகிறான்.

**2) மூலம் 254 முதல் 258 வரை கூறப்பட்டுள்ள கருத்துகளைத் தொகுத்து வரைக.**

கண்ணபிரான் அருச்சுனனைப் பார்த்து, "உன்னை முத்தனாம்படிப் பண்ணக்கடவேன்" என்று அருளினார். மேலும் உன்னுடைய பாவங்கள் யாவும் நானும் நீயும் முயலாமலே தன்னாலேயே நீங்கிப் போகும்; என்னுடைய தண்டனையால் வந்தவை யான் இரக்கம் காட்டினால் ஓடி ஒளிந்து போகாமல் நிற்குமோ? உன்னை நடுங்கச் செய்த பாவங்கள் எவையோ, அப்பாவங்களே இப்போது உன்னைக் கண்டு நடுங்கி விலகுமாறு செய்கிறேன்! இனி, உன் கையிலும் உன்னைக் காட்டித்தாரேன்! என் உடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளமாட்டேனோ?" என்பனவாகிய செய்திகள் 254 முதல் 258 வரையுள்ள மூலங்களில் கூறப்பட்டுள்ளன.

## மூலம் : 259

"மாசு ச: 'நீ உன் கார்யத்திலே அதிகரியாமையாலும், நான் உன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் உனக்குச் சோக நிமித்தமில்லை காண்' என்று அவனுடைய சோக நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறான்."

*1) 'மாசுச:' என்னும் இறுதிப்பதத்தின் பொருள் யாது?*

*"உன் காரியத்தில் நீயே முயலும் நிலை இருப்பின், 'அந்தோ! எங்ஙனம் நாம் திருத்தமாகச் செய்ய இயலும்! இது முடிவில் எங்ஙனம் விளையுமோ?' என்று நீ கவலையுறுதற்கு இடமுண்டு.*

*அல்லாமல், நான் உன் காரியத்தில் தலையிடாமல் இருந்தேனேயானால், நம் செயலில் பெருமான் பாராமுகமாக இருக்கிறான்! நாம் எவ்வாறு உய்வோம்!' என்று நீ வருந்த வேண்டியதுதான்!*

*அவ்வாறில்லாமல் முயற்சி, பலன் ஆகிய இரண்டிலும் தொடர்பற்ற உன் பாரதந்திரிய நிலையின் உண்மையை நீ நன்குணர்ந்து உன் இரட்சணைக்காரியத்தை நீ மேற்கொள்ளாமையாலும், உன் பாதுகாப்பில் முயற்சியும் பலனும் என்னுடையன எனக் கருதியுள்ள யானே, உன் இரட்சணை காரியத்தை நோக்கிக் கொண்டு போவதாலும் உனக்குக் கவலைகொள்ளுதற்கு வழியில்லை!" என்று கூறி அருச்சுனன் கவலையைக் கண்ணபிரான் போக்கி நின்றான்.*

*பாதுகாப்போன், பாதுகாக்கப்படுபவன் ஆகிய இருவருடைய இயல்புகளையும் எடுத்துக் கூறிப் பகவான் அருச்சுனனுடைய சோகத்தைப் போக்கியதை ஆசிரியர் அருளிச் செய்கிறார்.*

## மூலம் : 260

**" 'நிவர்த்த கஸ்வ ரூபத்தைச் சொல்லி நிவர்த்யங்கள் உன்னை வந்து மேலிடாது' என்று சொல்லி, சோகநிமித்தம் இல்லை காண்' என்கிறான்."**

*1) பகவான் அருச்சுனனுடைய துக்கத்தைப் போக்கக் கூறியருளியவை யாவை?*

*"உன் பாபங்களைப் போக்க முற்பட்டு நிற்கும் நானே சக்தி, ஞானம் முதலிய குணங்கள் நிறைந்தவன். உன்னை வந்தடையும் பாபங்களோ உன்னைக் கண்டு அஞ்சி ஓடுமேயல்லாமல், என்னையே உபாயமாய்ப் பற்றியிருக்கும் உன்னை வந்து அணுகா. இங்ஙனமாயின், நீ எதைக் கருதிக் கலங்க வேண்டும்? கலங்குதற்குச் சிறிதும் காரணமின்மையின் உன் கலக்கத்தை அறவே ஒழித்திடுக" என்று அருச்சுனனுக்குப் பெருமான் தேறுதல் கூறுகிறான்.*

*இதனால் பாபத்தைப் போக்குபவனான தன்னுடைய இயல்பையும் போக்கத்தக்க பாவங்களுடைய இயல்பையும்*

சொல்லி, அருச்சுனனுடைய மனக்கலக்கத்தைப் பெருமான் போக்கி அருளுகிறான்.

## மூலம் : 261

**" 'எத்தினாலிடர்க் கடற்கிடத்தி ஏழை நெஞ்சமே!" என்கிறான்."**

1) ***திருமழிசையாழ்வார் பாசுரத்தைக் காட்டிக் கண்ணபிரான் கருத்தை ஆசிரியர் எங்ஙனம் வெளிப்படுத்துகிறார்?***

*திருமழிசையாழ்வார் தம் நெஞ்சை நோக்கி, "நெஞ்சமே! எம் பெருமான் நம்முடைய பாவங்களை ஒழித்து, நம்மை அடிமை கொள்ளும் செயலைத் தானே ஏற்றுக்கொண்டு நம்முள்ளத்தில் புகுந்திருக்க, எதன் பொருட்டு நீ துன்பக்கடலுள் அழுந்துகின்றனை?" என்று தம் பாசுரத்தில் விளிக்கிறார்.*

*கண்ணபிரானும் அப்படியே அருச்சுனனை நோக்கிக் கூறுவதாக ஆசிரியர் விளக்குகிறார்.*

## மூலம் : 262

"பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடா நிற்க, நீ சோகிக்கக்கடவையோ?"

1) ***அருச்சுனனுடைய சோகம் திரும்பவும் வராதபடி ஒழித்தற்கேதுவாகிய கண்ணன் கருத்து யாது?***

*"அருச்சுனா! நீ செய்த பாவங்கள் அனைத்தையும் நான் மன்னித்துவிட்டேன். அல்லாமலும் உன்னிடம் எனக்குள்ள அளவு கடந்த அன்பினால் அவற்றை நான் பாபமாகக் கருதாமல், புண்ணியமென்று நினைத்திருக்கும்போது, இனியும் நீ கவலைப்படுவாயோ?" என்று கண்ணபிரான் தன் கருத்தை அருச்சுனனிடம் கூறினான்.*

2) *259 முதல் 262 வரையுள்ள மூலங்களின் கருத்தைத் தொகுத்து வரைக.*

*"உன் செயல்களில் நீ முயற்சி செய்யாமையால், அவற்றை நான் மேற்கொண்டு நடத்துகின்றேன். எனவே, நீ கவலைப்படுவதற்கு வழியே இல்லை!" என்று கூறிக் கண்ணபிரான் அருச்சுனனுடைய கவலையைப் போக்குகிறான்.*

*பாபங்களைப் போக்க முற்பட்டு நிற்கும் சேதனனுடைய இயல்புகளையும், பாபங்கள் இவனை வந்தடையாமைக்குக் காரணத்தையும் எடுத்துச் சொல்லி இவன் துக்கப்படுதற்குக் காரணம் ஏதுமில்லையென்று பெருமான் இயம்புகிறார்.*

*"உன் பாபங்களை மன்னித்து, அவற்றைப் புண்ணியங்களென்று நான் கருதும்போது நீ கவலையுறவேண்டுமா?" என்றும் பெருமான் அருச்சுனனைத் தேற்றுகிறான் என்பதனையும் ஆசிரியர் எடுத்துக்கூறுகிறார்" என்பனவாகிய கருத்துகள் கூறப்பட்டுள்ளன.*

## மூலம் : 263

**"உய்யக் கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது."**

1) *இந்தச் சுலோகத்தின் பொருளில் விருப்பம் ஏற்படுவதன் அருமையை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?*

*உடையவர் காலத்தில் உய்யக்கொண்டார் என்பவர் வாழ்ந்து வந்தார். இவர் பக்தி ஒன்றை மட்டுமே கடைப்பிடித்து வந்தார். இவருக்குச் சரணாகதியில் விருப்பத்தை உண்டாக்க உடையவர் விரும்பினார். எனவே, இந்தச் சுலோகத்தின் பொருளை விளக்கமாக எடுத்துரைத்தார்.*

இதைக் கேட்ட உய்யக்கொண்டார் "பக்தியை விட்டுப் பிரபத்தியைப் (சரணாகதியை) பற்ற எனக்கு ருசி உண்டாகவில்லையே!" என்று பதில் கூறினார்.

இதைக் கேட்ட உடையவர், "நீ நன்கு படித்த பண்டிதனாக இருப்பதால், பொருளின் பெருமையை உணர்ந்து ஒப்புக் கொண்டாய்! ஆனால் எம்பெருமானின் அருள் வெள்ளம் உன்னிடத்துப் பாயவில்லையாதலால் உனக்குச் சரணாகதியில் ருசி ஏற்படவில்லை!" என்று பதில் கூறினார்.

எனவே இந்தச் சுலோகத்தின் பொருளில் ருசி ஏற்படுதலின் அருமையை இச்சம்பவத்தால் உணரலாம்.

## மூலம் : 264

**"இதுக்கு ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு."**

1) இந்தச் சுலோகம் என்ன பொருளில் கருத்துடையதாக இருககிறது?

இந்தச் சுலோகம் பெருமானுடைய சுதந்தரத்தன்மையில் கருத்துடையதாக (நோக்குடையதாக) இருக்கிறது

நூல்களில் விதிக்கப்பட்ட எல்லாத் தருமங்களையும் மேற்கொண்டு முயற்சி செய்தே முத்தி பெறவேண்டும் என்று சாத்திரங்கள் கூறுகின்றன

இந்தச் சரம சுலோகமோ, பெருமான் எல்லாத் தருமங்களிலிருந்து சேதனனை விடுவித்து, சேதனனுக்கு மற்றொன்றின் உதவியும் வேண்டாமலே தானே சாதனப்பொருளாய் நின்று, தன்னை அடைவதற்குத் தடையாய் நிற்கும் சேதனனுடைய பாவங்கள்

*அனைத்தையும் போக்கி, தன்னை அடையப்பண்ணிக் கொடுத்து, எல்லாவற்றையும் தன் வசத்தில் நிற்கச் செய்யும் பெருமானுடைய சுதந்தரத் தன்மையிலேயே கருத்தாக இருக்கிறது.*

## மூலம் : 265

**"இதுதான் அநுவாத கோடியிலே' என்று வங்கிப் புரத்து நம்பி வார்த்தை"**

***1) இந்தச் சுலோகம் பகவானாலே விதிக்கப்பட்டது என்பதில் நம்பிக்கை எளிதில் ஏற்படுமோ?***

*எளிதில் ஏற்படாது. "அறிந்தவொரு கருத்தையே திருப்பிச் சொல்லுகிறது இந்தச் சுலோகம்" என்று சேதனன் கருதுவதால் இதில் நம்பிக்கை எளிதில் ஏற்படாது.*

*"எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே பற்று" என்று கூறும் இந்தச் சுலோகத்தை, அருச்சுனனுக்குப் பெருமான் இரண்டாம் முறையாக எடுத்துக்கூறினான். இதனை அருச்சுனன் முன்பே அறிந்திருந்தான். எனவே, இது அநுவாத சுலோகம் எனப்படும் என்று வங்கிப்புரத்து நம்பி என்பவர் கூறுகிறார்.*

## மூலம் : 266

**"அர்ஜுனன் க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ரிஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும், 'இவனே நமக்குத் தஞ்சம்' என்று துணிந்த பின்பு தன்னைப் பற்றச் சொல்லுகையாலே."**

***1) அருச்சுனன் அறிந்ததையே கண்ணபிரான் சொல்கிறான் என்பது எவ்வாறு?***

கண்ணபிரானுடைய அரிய செயல்களையெல்லாம் அருச்சுனன் இளமைக்காலம் முதலே நன்கு அறிந்தவன். எனவே, பெருமானுடைய அருஞ்செயல்களைக் கண்ட அருச்சுனன் கண்ணபிரானையே தஞ்சமாகப் பற்றி நின்றான்.

இம்முறையில் அருச்சுனன் அறிந்தவற்றையே கண்ணன் திருப்பிச் சொல்லுவதாகக் கொண்டு, இதை அநுவாதவாக்கியம் என்று வங்கிபுரத்து நம்பி கருதுகிறார்.

**2) ஆனைத்தொழில்கள் என்றால் என்ன?**

கோவர்த்தனத்தைக் குடையாய்ப் பிடித்தல், காளியனுடைய ஆயிரம் படங்களில் குதித்து நடித்தல், இறந்துபோன குருமகனையும் வைகுந்தம் சென்ற வைதிக புத்திரர்களையும் மீட்டுக்கொடுத்தல் முதலிய செயல்கள் ஆனைத்தொழில்கள் எனப்படும்.

மனித சக்திக்கு அப்பாற்பட்ட செயல்கள் (அதிமாநுஷ்ய செயல்கள்) ஆனைத்தொழில்கள் எனப்படும்.

**3) ரிஷிகள் வாக்கியங்கள் யாவை?**

கண்ணபிரானுடைய பெருமையைப் பேசிய முனிவர்களின் வாக்கியங்கள் ரிஷிகள் வாக்கியங்கள் எனப்படும். அவையாவன:

திருமாலே தம் பாம்பணையாகிய ஆதிசேஷனைப் பலராமனாக முன்னால் அவதரிக்கச் செய்து, பின்னரே தான் மதுரை நகரத்திற்கு எழுந்தருளினான் எனக்கூறியது.

கண்ணபிரான் எந்த இடத்தில் எழுந்தருளியிருக்கிறானோ அந்த இடத்திலேயே எல்லா உலகங்களும், எல்லாத் தீர்த்தங்களும், எல்லாத் தேவாலயங்களும் இருக்கின்றன எனக்கூறியது.

கண்ணபிரானே பவித்திரங்களுக்கெல்லாம் பவித்திர மாகவும், புண்ணியங்களுக்கெல்லாம் புண்ணியமாகவும், மங்களங்களுக்கெல்லாம் மங்களகரமாகவும் இருக்கிறான் என்று கூறியது.

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் ஒருசேரச் செய்யும் வித்தகன் கண்ணனே! ஆகிய அனைத்தும் கண்ணனின் கருணையால் தோன்றியனவே!

இவை போன்ற செய்திகள் ரிஷிகள் வாக்கியங்கள் எனப்படும்.

**4) கண்ணபிரானின் செயல்களைக் கண்கூடாகக் கண்டவன் அருச்சுனன் என்பது எவ்வாறு?**

தாங்கள் நாட்டில் உறைந்தபோதும், காட்டில் திரிந்தபோதும் தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களைத் துடைத்து இன்பங்களை ஊட்டும் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வந்ததை அருச்சுனன் நேரிலேயே கண்டறிந்தான்.

எனவேதான், கண்ணன் சொல்லும் மற்ற உபாயங்கள் தஞ்சமாகா! கண்ணன் ஒருவனே தஞ்சமாவான் என்பதில் அருச்சுனன் உறுதியாக இருந்தான்.

அருச்சுனன் அறிந்த இந்தச் செய்திகளையே கண்ணபிரான் திரும்பத் திரும்பச் சொன்னதால், இந்த வாக்கியம் அநுவாத வாக்கியம் என்று வங்கிபுரத்து நம்பிகள் கருதினார்.

## மூலம் : 267

**"புறம்பு பிறந்தது எல்லாம் இவன் நெஞ்சைச் சோதிக்கைக்காக"**

1) *இந்தச் சரணாகத தருமத்தை அருச்சுனனுக்கு முதலிலேயே சொல்லாமைக்குக் காரணம் யாது?*

*கண்ணபிரான் அருச்சுனன் மனத்தைச் சோதிப்பதற்காகவே தொடக்க காலத்தில் உபதேசிக்காமல் முடிவில் உபதேசித்தருளினான்.*

*கன்ம ஞான பக்திகளாகிற உபாயங்களுள் ஒவ்வொன்றுமே சிறந்த உபாயமெனக் கருதி, அவற்றுள் ஏதாவது ஒன்றிலேயே நிலைத்து விடுகின்றானா? அவற்றின் குறைகளை அறிந்து நாமாகிற சித்தோபாயத்தைப் பற்றி நிற்கும் அதிகாரி ஆகின்றானா? என்பதைச் சோதித்தறியவே கண்ணபிரான் இவ்வாறு கடைசியாகப் பிரபத்தி தருமத்தை உபதேசித்தருளினார்.*

## மூலம் : 268

**"வேத புருஷன் உபாயாந்தரங்களை விதித்தது, கொண்டிப்பசுவுக்குத் தடி கட்டி விடுவாரைப் போலே, அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பற்று ஸ்வரூப ஜ்ஞாநம் பிறக்கைக்காக."**

1) *வேதநாயகனான கண்ணபிரான் கன்மஞான பக்தி நெறிகளை விதித்தது எதற்காக?*

*ஒருவருக்கும் அடங்காமல் தன்னிச்சையாகத் திரியும் பட்டிப்பசுவைத் தம் வசப்படுத்தற்கு அதன் கழுத்தில் தடி கட்டி விடுவாரைப் போல, அகங்கார மமகாரங்களால் தன்னிச்சையாகச் செருக்கித் திரியும் சாமானிய மனிதனுக்கு, அதை நீக்கிச் சொரூப ஞானத்தைப் பிறப்பித்து அவனை நல்வழிப்படுத்தற்காகவே வேதநாயகன் உபாயாந்தரங்களை உபதேசித்தருளினான்.*

*அகங்கார மமகாரங்கள் ஒழிந்து உண்மையான சொரூப ஞானம் பிறக்க வேண்டும் என்பதற்காகவே கண்ணபிரான் கன்ம ஞான பக்திநெறிகளை விதித்தருளினான்.*

## மூலம் : 269

**"ஸந்யாசி முன்புள்ளவற்றை விடுமாப்போலே, இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது."**

1) *சொரூப ஞானம் ஏற்படுதற்குக் காரணமாயிருக்கும் இவற்றை விடுதல் குற்றமாகாதா? - விளக்குக.*

*துறவு நிலையை அடைந்த சந்நியாசி ஒருவன் முன்னறிந்த மற்றைய நிலைகளில் தான் கடைப்பிடித்தொழுகிய அறங்களை அறவே விட்டுவிடுவான்.*

*அதுபோலவே, மற்றைய தருமங்களை மேற்கொள்ளுதல் தன் அத்தியந்த பாரதந்திரிய நிலைக்குச் சேராது என்றும், பெருமானைப் பற்றுதலே தன்நிலைக்கு ஏற்றதென்றும் கருதக்கூடிய இத்துணை உயரிய ஞானம் பிறந்தவன், கன்ம ஞானபக்திகளாகிற உபாயாந்தரங்களை விட்டுவிடுதல் குற்றமாகாது.*

## மூலம் : 270

**"இவன்தான், இவை தன்னை நேராக விட்டிலன்".**

1) *பெருமானைப் பற்றும் ஞானம் பிறந்து காணப்படுபவன் இத் தருமங்களை அறவே விட்டு விடுவானா?*

*மற்றைய தருமங்களை விட்டு விட்டுப் பெருமானையே பற்றும் சீரிய ஞானம் கைவரப்பெற்றவன் கன்மஞான பக்திகளை அறவே விட்டு விடமாட்டான்.*

## மூலம் : 271

**"(1) கர்மம் - கைங்கர்யத்திலே புகும்; (2) ஜ்ஞாநம் - ஸ்வரூப ப்ரகாசத்திலே புகும்; (3) பக்தி - ப்ராப்ய ருசியிலே புகும்; (4) ப்ரபத்தி - ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்திலே புகும்."**

***1) பிரபன்னன் செய்யும் கன்மங்கள் எதனுள் அடங்கும்?***

*பிரபன்னன் தன் நிலைக்கு ஏற்ப, சாதன புத்தியைவிட்டுப் பிறர் நன்மையின் பொருட்டே செய்யும் கன்மங்கள் கைங்கர்யத்துள் அடங்கும்.*

***2) ஞானம் எதற்குள் அடங்கும்?***

*ஞான யோகத்தை ஆழ்வார் நுண்ணறிவு என்று அருளிச் செய்துள்ளார். இந்த ஞானம், சேதனன், தன் அடிமைத் தன்மையை அறிந்து, பின்பு பெருமானுடைய தலைமைத் தன்மையைக் கண்கூடாகக் காண்கைக்குக் காரணமாகும். ஆனால், பிரபன்னனோ இந்த ஞானம் அதற்குக் காரணம் என்று நினைக்க மாட்டான்.*

*இந்த ஞானம் சேதனனுடைய அடிமைத் தன்மையை ஒளிரச் செய்யும். எனவே, இது சொரூப ஞானத்துக்குள் அடங்கும்.*

*3) பத்தி எதனுள் அடங்கும்?*

*மிக உயர்ந்த பொருளில் தாழ்ந்தவன் செலுத்தும் அன்பு பக்தி எனப்படும். பெருமானை அடைவதற்குச் சிறந்த ஏதுவாக உள்ளது பக்தியே என்று வேதாந்தங்கள் விரித்துக் கூறுகின்றன.*

*இந்தப் பக்தியைப் பிரபன்னன் தன் உய்வுக்குச் சாதனம் என்று கருதி மேற்கொள்ளமாட்டான். எனவே, இது*

உணவுக்கு முன் ஏற்படும் பசியைப் போன்று, கைங்கர்யத்துக்கு முன் ஏற்படும் வேட்கையில் அடங்கும்.

*4) பிரபத்தி எதனுள் அடங்கும்?*

பெருமானையே உபாயமாகப் பற்றும் இந்தப் பிரபத்தி (சரணாகதி) உபாயத்துவ புத்தி நீங்கியவுடன், பெருமான் ஒருவனுக்கே தான் அடிமை என்னும் தன் ஆன்மாவின் உண்மைச் சொரூபத்தை உணரும் உயர்ந்த ஞானத்தில் இந்தப் பிரபத்தி அடங்கும்.

*5) இம்மூலத்துள் அமைந்துள்ள பொருட்சிறப்பை விளக்குக.*

ஞான யோகத்தால் தன் அடிமைத் தன்மையை அறிந்து, பிரபத்தி யோகத்தில் பெருமானே உபாயம் என்று உறுதிபெற்றவன், பக்தி யோகத்தாலே வேட்கை தலையெடுத்துக் கன்ம யோகத்தாலே பகவத் கைங்கரியத்தில் தொடர்புற்று இன்புற்றுத் துய்ப்பவன் என்று இம்மூலத்தில் உலகாசிரியர் சுவைபடக்கூறுகிறார்.

## மூலம் : 272

**"ஒரு பலத்துக்கு அரிய வழியையும், எளிய வழியையும் உபதேசிக்கையாலே, இவை இரண்டும் ஒழிய பகவத் ப்ரஸாதமே உபாயமாகக் கடவது."**

*1) சேதனனுக்குப் பலத்தைக் கொடுப்பதுதான் எது?*

பெருமானாகிற பலத்தை அடைதற்கு இரு வழிகள் உள்ளன. ஒன்று பக்திநெறி. இது மிகவும் அரியது. பல பிறவிகளில் செய்யும் கன்ம ஞானங்களால் மனத்தூய்மை பெற்றவனுக்கே இந்தப் பக்தி கைகூடும். எனவே, இது அரிய வழியாகும்.

மற்றொன்று பிரபத்தி நெறி. இது எளியநெறி. எல்லாத் தருமங்களையும் அறவே விட்டு விட்டு, பகவான் திருவடிகளையே உபாயமாகப் பற்றுகிற இப்பிரபத்தி நெறி இப்பிறவியிலேயே கைகூடும். எனவே, இது எளிய வழியாகும்.

இவ்விரண்டு நெறிகளும் மேற்போக்காகக் கொண்டு, பயனைத் தரும் பெருமானுடைய அருளையே முக்கியமாகக் கொள்ள வேண்டும்.

இவ்விரண்டு நெறிகளும் நீங்கப் பகவானுடைய அருளே சேதனனுக்குப் பலத்தைக் கொடுப்பதாகும்.

## மூலம் : 273

"பேற்றுக்கு வேண்டுவது விலக்காமையும் இரப்பும்"

1) சேதனன் பேற்றுக்கு வேண்டுவது யாது?

பெருமான் சேதனனைப் பாதுகாக்க வரும்பொழுது, தன் முயற்சியினால் பெருமானைத் தடுக்காதிருத்தல் வேண்டும். முத்தியாகிய பேறு தனக்குக் கிடைத்தற் பொருட்டு பெருமானிடம் இரத்தல் வேண்டும்.

இவ்விரண்டுமே சேதனன் பேற்றுக்கு வேண்டுவனவாம்.

## மூலம் : 274

"சக்கரவர்த்தித் திருமகன் பாபத்தோடே வரிலும் அமையுமென்றான்; இவன் புண்யத்தைப் பொகட்டு வரவேணுமென்றான்."

1) பெருமான் நம்மைப் பாதுகாப்பதற்கு நம்மிடமும் சில குணங்கள் வேண்டுமா? விளக்குக.

வேறொரு உதவியையும் சேதனனிடம் விரும்பாத பெருமானுக்குச் சேதனனிடம் ஏற்படும் நற்கருமங்களாலும் பயனில்லை.

"சேதனன் செய்த பெரும் பாவத்துடன் வரினும் ஏற்றுக்கொள்கிறேன்" என்று இராமபிரான் கூறுகிறான். எனவே, பேற்றை இழப்பதற்குப் பாவம் காரணமாகாது என்பதை அறியலாம்.

கண்ணபிரானோ, "புண்ணியங்கள் யாவற்றையும் விட்டே என்னைப் பற்ற வேண்டும்" என்று கூறுகிறான். இதனால், நற்கருமங்களாலும் பயனில்லை என்பதை அறிகிறோம்.

## மூலம் : 275

**" 'ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நசித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை' என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை."**

*1) சேதனர் நுழைந்து நிற்கும் இருவழிகள் யாவை?*

ஆத்திகனாய் உய்வடைதல் ஒருவழி. நாத்திகனாய் நசித்தல் மற்றொருவழி. ஆக இவ்விரண்டும் சேதனர் நுழைந்து நிற்கும் வழிகளாம்.

*2) ஆத்திகனாய் உய்வடையும் வழியாது?*

"பெருமானுடைய வன்மையினால் எக்காரியம்தான் முடியாது? எல்லாம் கைகூடும்" என்று உறுதிகொண்டு இப்பிரபத்தி விஷயத்தில் ருசியும், இது தவறாது என்னும் நம்பிக்கையும் பெற்று ஆத்திகனாய் உய்வடைதல் ஒருவழி. இதுவே ஆத்திகன் உய்வடையும் வழியாம்.

*3) நாத்திகனாய் நசித்தல் என்பது மற்றொருவழி என்பதை விளக்குக.*

*"மற்றைய சாத்திரங்கள் எல்லாம் கரும ஞான பக்திகளை விரிவாகப் பேசுகிறது. ஆனால், இச்சரம சுலோகம் மட்டும் அவற்றை அறவே விட்டு விட்டு எம்பெருமானைப் பற்று என்று கூறுவதால், இது சாத்திரங்களில் நிச்சயிக்கப்பட்டதென நம்புவது எவ்வாறு?" என்று ஐயங்கொண்டு நாத்திகனாய், இதைக் கைவிட்டு நசித்தல் என்பது மற்றொரு வழியாம்.*

*4) பட்டருக்கு எம்பார் அருளிச்செய்தது யாது?*

*"மேற்கூறிய இவ்விருவழிகளுள் ஏதாவது ஒரு வழியில் சேதனர் நிற்பர். இவ்வாறு சேதனர் இவ்விரு வழிகளுள் ஒன்றில் மட்டும் நிற்பர். இவ்வாறு நிற்பதைத் தவிரச் சேதனர் ஐசுவரிய கைவல்லியங்களில் புகுவது என்பது முடியாது" என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்கிறார்.*

## மூலம் : 276

"வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போஜநம் போலே"

*1) நம்பிக்கை அற்றவனுக்குச் சரணாகதியின் தொடர்பு நாசத்திற் குறுப்பாகும் என்பதை விளக்குக.*

*உண்ட உணவு சீரணம் ஆகாதபோது, மேலும் மேலும் உண்ட உணவு நஞ்சாகி மரணத்தையே உண்டாக்கும்.*

*அதுபோலவே, இச்சரம சுலோகத்தில் குறிப்பிடும் எல்லாத் தருமங்களையும் விட்ட பிறகே பெருமானைப்*

பற்றுதலாகிற சரணாகதியிடம் ஊன்றிய நம்பிக்கை அற்றவனுக்கு அழிவே உண்டாகும்.

## மூலம் : 277

**" 'விட்டு சித்தர் கேட்டிருப்பர்' என்கிறபடியே அதிகாரிகள் நியதர்."**

*1) "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று அருளிய பெருமானின் வார்த்தையைக் கேட்டு நடக்கும் அதிகாரிகள்தாம் யாவர்?*

*"விட்டு சித்தர் கேட்டிருப்பர்" என்னும் ஆண்டாள் பாசுரத்தின் படியே, சரணாகதியில் நம்பிக்கை வைத்து ஒழுகும் அதிகாரிகள் சிலரேயாவர்.*

*கண்ணபிரான் தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்ததும், உண்மையானதும், சீரியதும், எளிமையானதுமான "மாமேகம் சரணம் வ்ரஜ" என்னும் வார்த்தையைக் கேட்டு அதன்படியே ஒழுகியவர் பெரியாழ்வார். இவரைப்போன்று நடக்கும் நியதி உள்ளவர் மிகச் சிலரே!*

*"செம்மை யுடைய திருவரங்கர் தாம் பணித்த*
*மெய்ம்மைப் பெரு வார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்*
*தம்மை யுகப்பாரைத் தாம் உகப்பர் என்னும் சொல்*
*தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர்இனியே!"*

*என்னும் ஆண்டாள் பாசுரத்தின்படிச் சரணாகதியில் நம்பிக்கையுடையோர் மிகச் சிலரேயாவர்.*

## மூலம் : 278

**" 'வார்த்தை யறிபவர்' என்கிற பாட்டும் 'அத்தனாகி' என்கிற பாட்டும் இதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம்."**

1) சரணாகதிக்குப் பொருளாக நினைக்கத்தக்க நம்மாழ்வார் பாசுரத்தை எடுத்துக்காட்டி விளக்குக.

"வார்த்தை அறிபவர் மாயவற் காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்து பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளின்கீழ்ச்
சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணித்
தெளிவுற்றே!"

என்பது நம்மாழ்வார் திருவாய் மொழி.

"மக்கள் வாழ்க்கையை ஊன்றி ஆராய்ந்தால், பல பிறவிகள் ஆன்மாவைச் சூழ்ந்து கொண்டிருப்பதைக் காணலாம். பிறவி எடுத்ததும் நோயும், முதுமையும், மரணமும் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்கின்றன. இவற்றிடையே மனிதன் சிக்கிச் சஞ்சலப்படுவதை இறைவன் கண்டு இரக்கங் கொள்கிறான். இரக்கம் கொண்ட இறைவன் மனிதன் படும் தொல்லைகள் பலவற்றையும் ஒரு நொடியில் இல்லாமல் செய்துவிடுகிறான். பெருந் துக்கத்தையும் வேரோடு ஒழித்துத்தன் திருவடிகளில் இவன் சேருமாறு செய்து மீண்டும் பிறத்தலை ஒழித்துக் காப்பாற்றுகிறான்.

இங்ஙனம் பெருமான் தனக்குச் செய்யும் நன்மைகளை நன்றாக உணர்ந்தவர்கள், இத்தகைய நன்மைகளை நமக்குச் செய்யும் பெருமானுக் கல்லாமல் மற்றவருக்கு அடிமைப்படுவரோ?" என்பது நம்மாழ்வார் திருவாய்மொழிக் கருத்து.

இப்பாசுரக் கருத்தை நன்கு ஆராய்ந்து பார்த்தால், தஞ்சம் என்று அடையத்தக்கவனாக சரணாகதிக்கு உரியவனாகப் பெருமான் ஒருவனே உள்ளான் என்பது தெளிவாக விளங்கும்.

சரணாகதியின் பொருட் சிறப்பை இப்பாசுரம் இனிது விளக்குவதைக் காணலாம்.

**2) 'அத்தனாகி' என்னும் பாசுரக் கருத்தை விளக்குக.**

"அத்த னாகி அன்னை யாகி ஆளும் எம்பி ரானுமாய்
ஒத்தொவ் வாத பல்பி றப்பொ ழித்து நம்மை
ஆட்கொள்வான்
முத்த னார்மு குந்த னார்பு குந்து நம்முள் மேவினார்
எத்தி னால்இ டர்க்க டல்கி டத்தி ஏழை நெஞ்சமே!"

என்பது திருமழிசைப் பிரான் அருளிய திருச்சந்த விருத்தம்.

"அப்பனாகவும், அம்மையாகவும், ஆட்கொள்ளும் தலைவனாகவும் உள்ளவன் பெருமான்! நம்முடைய தாழ்வையும், தன்னுடைய பெருமையையும் நோக்காமல் எல்லாப் பாபங்களையும் தானே ஏற்றுக்கொள்கிறான். பலவகைப் பிறவிகளையும் எடுக்க ஒட்டாமல் போக்குகிறான். அற்பத்தன்மை வாய்ந்த நம் நெஞ்சத்துள்ளும் புகுந்து பொருந்தியுள்ளான். பெருமான் இவ்வாறு நம்முடன் ஒன்றியிருக்கும் போது அறிவிலியாகிய நெஞ்சமே! நீ எதன் பொருட்டுத் துன்பக் கடலில் அழுந்திக் கிடக்கின்றாய்!" என்பது பாசுரக் கருத்து.

தன் மேன்மையையும் பாராது, தானே எளியனாய் வந்து, நமக்கு உதவி புரிவதற்கு எம்பெருமான் எப்பொழுதும் சித்தமுடன் இருப்பதால் சரண் என்று சென்று அடையத்தக்க சரணாகதிப் பொருளாகப் பெருமான் ஒருவனே உள்ளான் என்று விளக்குவதன் மூலம் சரணாகதிப் பொருள் பெருமானே என்பதைத் தெளிவாக விளக்குகிறார்.

**3) மூலம் 263 முதல் 278 வரை கூறப்பட்ட கருத்துகளைச் சுருக்கி வரைக.**

S-59





"உய்யக்கொண்டாருக்கு உடையவர் அருளிச்செய்த வார்த்தை. இந்தச் சுலோகம் சுதந்தரத் தன்மையில் நோக்குடையது. இது அநுவாத சுலோகம். அருச்சுனன் அறிந்ததையே கண்ணன் கூறுகிறான். சரணாகதியை முதலிலேயே அருச்சுனனுக்கு உபதேசம் செய்யாமைக்குக் காரணம், உண்மையான சொரூப ஞானம் பிறப்பதற்காகவே கன்மஞான பக்திகளை உபதேசித்தது. உபாயாந்தரங்களை அறவே விட்டுவிடுதல் குற்றமாகாது. பகவத் கைங்கர்யத்தை அன்புடனும் ஆர்வமுடனும் செய்தல் வேண்டும். சேதனனுக்குப் பயனைக் கொடுப்பது பகவானுடைய அருளே! பேற்றுக்கு வேண்டுவது விலக்காமையும், இரத்தலுமே! நம்மிடம் சில குணங்களைப் பெருமான் விரும்புவதில்லை. நம்பிக்கை அற்றவனுக்குச் சரணாகதியின் தொடர்பு நாசத்திற்குறுப்பாகும். சரணாகதிக்கு உரியவர் சிலரே!" முதலான செய்திகள் 263 முதல் 278 வரை உள்ள மூலங்களில் காணப்படுகிறது.

பிள்ளையுலகாசிரியர்
திருவடிகளே சரணம்.

